# ப்ரம்ம ஸூத்ர வ்ருத்தி

(ஸதாசிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது)

வேதவ்யாசர் இயற்றிய ப்ரம்ம ஸூத்ரமென்னும் உத்தர மீமாம்ஸா ஸூத்திரத்திற்கு சுருக்கமாக உரை எழுதியவர் ஸ்ரீ ஸதாசிவ ப்ரம்மேந்திரர். இவர் தென்னாட்டில் தோன்றிய ஜீவன்முக்தரில் ஒருவர். திருவிசநல்லூரில் வித்யாப்பியாஸம் செய்தவர். வேதம், வேதாந்தம், யோகம், சங்கீதம் முதலிய பல சாஸ்திரங்களில் கரை கண்டவர்.

யோக ஸூத்ர வ்ருத்தி ப்ரஹ்ம ஸூத்ர வ்ருத்தி ஸித்தாந்த கல்பவல்லி, ஸூத ஸம்ஹிதையின் ஸங்க்ரஹம், பாரத ஸங்க்ரஹம், பாகவத ஸாரம், ஆத்ம வித்யா விலாஸம், யோக ஸுதாகரம், கைவல்யோபநிஷத், அமிர்த பிந்து உபநிஷத் இவைகளுக்கு வ்யாக்யானம் நவமணிமாலை, ஆத்மானந்த ஸந்தானம், ஆத்ம வித்யா விலாஸம், சிவ மானஸிக பூஜை, அத்வைத கீர்த்தனங்கள், "ப்ரூஹி முகுந்தேதி" முதலிய எண்ணிறந்த கீர்த்தனங்கள் ஆகிய பல நூல்களை இயற்றியவர். மஹா கவியுமாவர்.

தமிழ் நாட்டிலுள்ள சித்தர்களில் மிகச் சிறந்தவர். சிவராமகிருஷ்ணன் என்பது முற்பெயர். பெற்றோர் பிச்சுக்குப்பன் என்ற செல்லப் பெயரால் அழைப்பார்கள். இவரது தந்தையின் பெயர் அவுதானி, தாயார் பெயர் பார்வதி அம்மாள். இவருக்கு சிறுவயதி லேயே விவாஹம் ஆகிவிட்டது. ஆயினும் இவர் மனம் சாஸ்தரங்களிலும், ஸந்நியாஸத்திலுமே ஈடுபட்டது. ஒருநாள் இவரது மனைவி ருதுவான செய்தியை சொல்ல வந்த மாமன், மாமிகளுக்கு விருந்து நடந்தது. வழக்கப் படி குருகுலத்திலிருந்து வீட்டிற்கு வந்த இவர், இதைக் கண்டு என்ன விசேஷம் ? என வினவினார்.

அவர்கள் ஸமாசாரத்தைக் கூற மனைவி மனைக்கு வரப்போகிருள் என்றபொழுதே வேளைச் சோறு வேளைக்குக் கிடைக்கவில்லையே! என்று கூறி, துறவியாகக் கிளம்பிவிட்டார். வேளையில் உணவில்லை என்பதற்காகக் கோபத்திஞல் செய்துகொண்ட சந்நியாஸமல்ல அது. ஏற்கனவே கரைபுரண்டு வந்த ஸந்நியாஸ ஆசைப் பிரவாகம் பாய்ந்தோட இது ஒரு நிமித்தம் ஆயிற்று. காஞ்சி காமகோடி பீடத்தில் 57-வது பீடாதிபதியாக இருந்த ஸ்ரீ பரம சிவேந்திர ஸரஸ்வதீ அவர்களை குருவாக அடைந்தார். ஸன்னியாஸத்திலும் அவதூத நிலையை அடைந்து சுகப்பிரம்மம்போல், ஆங்காங்கு ஸஞ்சரித்துக்கொண்டிருந்தார். யோக ஸித்தியிஞல் பல உருவங்கள் எடுத்துபற்பல க்ஷேத்திரங்களில் ஒரே காலத்தில் தரிஸனம் செய்தார். அங்ஙனமே ஜீவன் முக்தர்களைப் போல் உடலை கவனியாத சிறுவர்களைக் கண்ணை மூடிக்கொள்ளும்படிச் சொல்லி வெகு தூரத்திலுள்ள க்ஷேத்திரங்களுக்குச் சென்று தரிஸனம் செய்து வைத்து அவரவர் ஊரில் கொண்டுவிட்டார்.

தர்க்க சாஸ்த்ரத்திலும் கரை கண்டவர் ஆதலால் வாதத்திஞல் பல பண்டிதர்களைத் தோல்வி அடையும்படிச் செய்தார். இதை அறிந்த குரு சும்மா இருப்பதே சுகம் என்பதை உபதேசிப்பவர் போல், "பேச்சை நிறுத்து" என்று கூற, அன்று முதல் மௌனியாக இருந்துவிட்டார் ஸதாசிவேந்த்ரர்.

ஒரு ஸமயம் மிலேச்ச அரசன் கோஷாக்களுடன் விளையாடிக்கொண்டிருந்த இடத்தின் அருகே சென்றுவிட்டாரிவர். இடையில் வஸ்திரமில்லாததால் இவரைக் கண்டு கோபங்கொண்ட அவன், இவரது கையை வெட்டிவிட்டான். ரத்தம் ஆருக ஓட அதையும் கவனியாமல் சென்ருர். இதைக் கண்டு ஆச்சர்யமும் பயமும் அடைந்த அவன், அவர் ஒரு சித்த புருஷர் என

---

வேதிபோல் இருக்கும் இடுப்பு என கவி கூறுவர்

உணர்ந்து வெட்டிவீழ்த்திய கையைத் தூக்கிக்கொண்டு ஓடி அவரிடம் கொடுத்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். அதையும் கவனியாமல் அந்தப் பக்கத்தில் கையை வைத்து தடவிக்கொண்டார்.

உடனே கை முன்போல் ஆகிவிட்டது. மற்றொரு ஸமயம் காவேரிக் கரையில் நிஷ்டையில் அமர்ந்திருந்த பொழுது வெள்ளம் அவரை அடித்துச்சென்று மணலில் புதைத்துவிட்டது. சில மாதங்கள் கழித்து மணலைத் தோண்டும் பொழுது அதிலிருந்து யாதொரு சிரமமும் இன்றி வெளிவந்தார். இங்ஙனம் பல அருமை லீலைகளைச் செய்தார். புதுக்கோட்டை மன்னனுக்குக் குருவானார். அகண்ட காவேரீ தீரத்தில் நெரூரில் முன்னதாகவே கூறி, குறித்த காலத்தில் ஸமாதி அடைந்தார்.

அவர் இயற்றிய பிரும்ம ஸூத்திர விருத்தி அடுத்த இதழில் வரும்.

---

## அக்னி ஹோத்ர கிரஹதானத்திற்கு

### நன்கொடை அளித்தவர்கள்.

| | | |
|---|---|---|
| ஸ்ரீ பட்-வைத்தியநாதய்யர், சென்னை | ரூ- | 100 |
| ,, சுப்ரமண்யன், நேமம் | .... | 100 |
| ,, ஹிண்டு கஸ்தூரி கோபாலய்யங்கார் | .... | 100 |
| ,, சாம்பசிவ தீக்ஷிதர் | .... | 50 |
| ,, பரமேஸ்வரஐயர், கோழிக்கோடு | ... | 50 |
| ,, ஜி. சுவாமிநாதய்யர் | ... | 35 |
| ,, T. R. குமாரஸ்வாமி அய்யர் | ... | 25 |
| ,, H. செல்லமய்யர் | .... | 25 |
| ,, H. சுப்பய்யர் | .... | 25 |
| ,, M. V. வெங்கடராம அய்யர் (சிம்ஸன் கம்பெனி) | | 25 |
| ,, V. நடராஜஅய்யர் | ... | 21 |
| ,, K. N. கிருஷ்ணமூர்த்தி, குளிஞ்சவாடி | ... | 15 |
| ,, ஒரு சந்தாதாரர் | .... | 10 |
| ஸ்ரீமதி இந்திரா பாக்யவதி, பம்பாய் | .... | 10 |
| ,, லக்ஷ்மி அம்மாள், சித்தூர் | .... | 10 |
| ஸ்ரீ வைதீஸ்வர அய்யர், ஆடிட்டர், மயிலை | .... | 10 |
| ஓர் சந்தாதாரர், கடவாசல் | .... | 10 |

---

ஆகவனீயம் கிழக்கே நாலுமூலை சதுரமாக இருக்கும்

4

ஸ்ரீ B. V. ராமன், கல்கத்தா ரூ. 10
,, ராஜகோபாலன், பெங்களூர் ... 10
,, G. S. ராமசேஷய்யர், நாகப்பூர் .... 10
,, சீனிவாசய்யர், பாட்னா ... 5
,, ராமதுரை, குற்றாலம் ... 5
,, பலராமன், கல்கத்தா ... 5
,, G. பாலஸுப்ரமண்யன் .... 5
,, A. S. அய்யங்கார், டில்லி ... 5
,, K. ராமச்சந்திர அய்யர், ஜுவல்லர் ,தி. நகர் .... 5
,, S. N. சுந்தரராமய்யர் ... 5
,, மில், ராமச்சந்திரய்யர், சிதம்பரம் .... 5
ஸ்ரீமதி ருக்மணி, மீலட்டூர் ... 5
ஸ்ரீ R. V. கிருஷ்ணன், பவநகர் .... 5
,, நகர், சாம்பமூர்த்தி சாஸ்திரி, சிகந்தராபாத் ... 5
ஸ்ரீமதி சீதாலக்ஷ்மி அம்மாள், கோதவாலா ... 5
ஸ்ரீ T. S. கோபாலன், பாம்பே .... 5
,, B. ஜெயராமன், பாம்பே, ... 5
,, M. P. வெங்கடராமன், பாலக்காடு .... 5
,, P. V. கிருஷ்ணமூர்த்தி, ஜம்ஷெட்பூர் .... 5
,, ஒரு ஆஸ்திகர், பம்பாய் .... 5
ஸ்ரீமதி ஸரஸ்வதி, கொச்சி .... 5
ஸ்ரீ சி. வி. பொன்னுஸ்வாமி அய்யர், குளிஞ்சவாடி.... 3
,, G. R. கிருஷ்ணமூர்த்தி, கணபதி அக்ரஹாரம் .... 3
,, சங்கர ஸுப்ரமண்யன், கேரளா ... 3
,, A. ராமய்யர், மன்னார்செட்டி .... 3
,, V. ராமஸ்வாமி, ஜம்ஷெட்பூர் ... 3
,, S. ராமமூர்த்தி, தஞ்சை .... 3
,, முத்துஸ்வாமி அய்யர் .... 3
,, T. R. ராமமூர்த்தி, சிதம்பரம் ... 3
,, P. S. கிருஷ்ணன், நாக்பூர் .... 3
ப்ரும்மஸ்ரீ நொளம்பை வெங்கடராமகனபாடிகள் ... 3
ஸ்ரீ அழகர் அய்யங்கார், திருப்பூர் .... 2
,, V. ஸ்வாமிநாதன், ஜம்ஷெட்பூர் .... 2
தீக்ஷா ஸம்பாவனை ... 7

இதுவரை மொத்தம் ரூ. 2952. இதை நன்றியுடனேற்று எல்லோரும் இன்புற யக்ஞேஸ்வரனை வேண்டுகிறேன்.

பக்ஷிதீர்த்தம் ஸுப்ரமண்ய தீக்ஷிதர்.

BRAHMA SUTRA - VRITI

5

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.



**ஸதாஶிவ ப்ரம்மேந்த்ரர் இயற்றியது.**

ஸ்ரீ வேதவ்யாஸர் அருளில் இது ஒன்று. கீதை உபநிஷத்துகள் பிரும்ம ஸூத்ரமென்ற மூன்றும் ப்ரஸ்தாநத்ரயம் எனப்படும். இவைகளுக்கு த்வைத விஶிஷ்டாத்வைத அத்வைத ஆசார்யர்கள் பாஷ்யம் அமைத்துள்ளார்கள். முறையே ஸ்ரீமத்வர் ஸ்ரீராமாநுஜர் ஸ்ரீசங்கரர் என்பது பாஷ்யகாரர்களின் பெயர்கள், இவைகளே மிகப்பிரஸித்தமானவை. மற்றும் பலரும் பாஷ்யம் இயற்றினர். ஸ்ரீகண்டாசார்யாள் ஶிவ விஶிஷ்டாத்வைதம், ஸ்ரீ வல்லபாசார்யர் சுத்தாத்வைதம், ஸ்ரீ நிம்பார்க்காசார்யர் த்வைதாத்வைதம், ஸ்ரீ பாஸ்கராசார்யர் பேதாபேதம், ஸ்ரீ விக்ஞானபிக்ஷு விஶிஷ்டாத்வைத விஶேஷம். ஸ்ரீபலதேவர் அசிந்த்யாபேதம், ஸ்ரீகராசார்யர் ஶிவத்வைதம், ஸ்ரீ அபிநவ ஶாகாசார்யர் ஸ்ரீமத் பாகவத அநுஸாரம் இங்ஙனம் பல பாஷ்யங்கள் இருக்கின்றன.

அந்தந்த மதத்தைச்சார்ந்தவர் முக்திக்கு வித்தான இவைகளை குருமுகமாகக் கற்கவேண்டும். ஆவணியாவிட்டம் வேதாரம்பத்தில் வேதாங்கமாக "அதாதோ தர்ம ஜிக்ஞாஸா அதாதோ பிரும்மஜிக்ஞாஸா" எனக்கூறுகிறோம். முதலில் உள்ளது பூர்வமீம்மாம்ஸா எனப்படும். அடுத்தது உத்தர மீமாம்ஸா எனப்படும். மீமாம்ஸா எனில் பூஜிக்கத்தக்க விஷயத்தை விசாரிப்பது எனப்பொருள்.

**ஸ்ரீ சங்கராசார்யார் இயற்றிய பாஷ்யத்திற்கு வியாக்யான ரூபமாகத் தோன்றியவைகளில் கீழ்க்கண்டவை மிக பிரஸித்தமானவைகள்.**

1 ***பஞ்சபாதிகா*** ஸ்ரீ பத்ம பாதாசார்யர் இயற்றியது 5 பாதங்கள் மாத்ரம் இது. 2 *பாமதி* வாசஸ்பதிமிச்ரர். 3 *ஸம்க்ஷேப சாரீரகம்* ஸர்வக்ஞாத்மமுநி. 4 *பாஷ்யபாவ*

---

*ஸ்ரீ ஜகத்குரு சொல் ஸாரத்திலும் ஸாரமானது என ஒருவர்.*

ப்ரகாஶிகா ஸ்ரீ சித்ஸுகாசார்யர். 5 *நியாய நிர்ணய* ஸ்ரீ ஆனந்த கிரி. 6 *நியாயரக்ஷாமணி* ஸ்ரீ அப்பய்யதீக்ஷிதர், 7 *ரத்நப்ரபா* ஸ்ரீ பிரும்மாநந்தர். 8 *பிரும்மவித்யாபரணம்* ஸ்ரீ அத்வைதாநந்தர். 9 *பாஷ்யவார்திகம்* ஸ்ரீ நாராயண ஸரஸ்வதி.

பஞ்சபாதிகா பாமதி முதலிய வ்யாக்யானங்களுக்கு வியாக்யாநமாக எண்ணிறந்த நூல்கள் வெளிவந்துள்ளன. காமகோடி கோஶஸ்தாநம் 1954 ல் வெளியிட்ட பிரும்ம ஸூத்ர பாஷ்யத்தில் அவைகளின் பெயரும் மற்ற விவரமும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

*பிரும்ம ஸூத்ர விருத்தி* என்ற பெயரால் பத்து நூல்களுக்குமேல் இருக்கின்றன, அதில் பிரும்ம தத்வ பிரகாஶிகா என்ற பிரும்ம ஸூத்ர வ்ருத்தி ஸ்ரீ ஸதாசிவ பிரும்மேந்த்ரரால் இயற்றப்பட்டது. எல்லாவற்றிற்கும் மேலாக விளங்குகிறது. 555 ஸூத்ரங்கள் 4 அத்யாயங்களாகவும் ஒவ்வொரு அத்யாயத்திலும் 4 பாதங்களாகவும் 119 அதிகரணங்களாகவும் அமைந்துளது பிரும்ம ஸூத்ரம். ஒரு அதிகரணமென்பது ஒரு விஷயத்தை விசாரித்து முடிப்பதாம். அதில் ஒரே ஸூத்ரமும் இருக்கலாம். பல ஸூத்ரங்களும் இருக்கலாம். அதனுல்தான் 555 ஸூத்ரங்கள் 119 அதிகரணங்களில் அமைக்கப்பட்டுள. உபநிஷத் வாக்யங்களில் ஏற்படும் ஸந்தேஹத்தை அகற்றி நிர்ணயம் செய்வது பிரும்ம ஸூத்ரம்.

## முதல் அத்தியாயம். (1ம் பாதம்.)

## (1) ஜிக்ஞாஸாதிகரணம்.

अथातो ब्रह्मजिज्ञासा (அதாதோ பிரும்மஜிக்ஞாஸா)

*பிரும்ம விசாரத்தால் மோக்ஷம் உண்டாகும், அந்த பிரும்மம் பிரஸித்தமானுல் அதுபற்றி விசாரிப்பது வீண் அப்ரஸித்தமானுல் விசாரித்தாலும் விளங்கப்போவது இல்லை. ஆதலாலிந்த விசாரமே அவஶ்யமில்லை. என்பது*

---

*அதன் படி எல்லோரும் காயத்ரீ செய்யுங்கள்*

பூர்வபக்ஷமாகும். (பூர்வ பக்ஷமெனில் முதலில் ஒன்றைப் பார்த்தவுடன் தோன்றும் தோற்றமும் அதைத் தழுவிய வாதமுமாகும். ஸித்தாந்த மென்பது நன்ருக விசாரித்து ஆக்ஷேபங்களுக்கு பதில் கூறி முடிவு கட்டுவதாம்) ஆத்மா என்பது நான் நான் என எல்லோருக்கும் பொதுவாக பிரஸித்தமாகத் தோற்றும். ஆனல் சிலர் மநமே ஆத்மாயென்றும் சிலர் புலன்களே ஆத்மா என்றும், சிலர் உடலே ஆத்மா என்றும் கூறுவதால் ஆத்மா எது? என விசாரிக்கவேண்டியது அவச்யமாகும். ஆத்மா இது என்ற பிரத்யக்ஷ க்ஞாநம் வந்தால்தான் ஜநந மரண ஸம்ஸார துக்கமகலும். பிரும்மாநந்தமெனும் மோக்ஷமுண்டாகும்.

நித்யா நித்ய வஸ்து விவேகம் இஹா முத்ரார்த்த பலபோக விராகம் ஶமதமாதிகள் மோக்ஷேச்சை என்ற ஸாதந சதுஷ்டய மேற்பட்டதால் பிரும்ம ஸ்வரூபத்தை நன்கு விசாரித்து அறியவேண்டும் என்பது முதல் ஸூத்திரத்தின் கருத்து.

இங்கு ஆசார்யாள் அத்யாஸ பாஷ்யம் என்ற மிக பிரஸித்தமான பாஷ்யமெழுதி ஆத்மா அல்லாததை ஆத்மா என கூறுவோருக்கு பதில் கூறி உண்மையான ஆத்ம ஸ்வரூபத்தை விளக்கி இருக்கிருர். ஸம்ஸ்கிருதம் அறிந்தவர் குரு முகமாக சாந்தி பாடம் செய்து, வேதாந்த விசாரம் செய்ய வேண்டும். ஸ்தூலமாகவாவது அதன் கருத்தையாவது நமது நேயர் உணர்ந்து கொள்ள பத்ரிகையில் எழுதி வருகிறோம். ஸ்த்ரீகளும் கூட படிப்பதற்கேற்ற வகையில் கடினமான சாஸ்த்ர வாதங்களில் புகாமல் லலிதமாக எழுத உத்தேசம்.

**அத்தியாஸம்** எனில் ஒரு பொருளை வேறொரு பொருளாகக் கருதுவதாம். உலகெலாம் உண்மையில் பிரும்ம ஸ்வரூபமே ஆகும். ஸ்வர்ணமே காப்பாகவும் மோதிரமாகவும் மாறினலும் ஸ்வர்ணம் ஸ்வர்ணமே யாகும்.

---

இது நம் சொல் என எண்ண வேண்டாம்

நாம் ஸ்வர்ணத்தை மோதிரமாகக் காண்கிறோம் பிரும்மத்தை மறந்து அதில் உலகை காண்கிறோம்

## (2) ஜன்மாத்யதிகரணம்.

जन्माद्यस्य यतः (ஜன்மாத்யஸ்ய யத:)

அந்த பிரும்மம் எத்தகையது ? என இதில் லக்ஷணம் கூறப்படுகிறது. வேதத்தில் " எங்கிருந்து இந்த உலகம் உண்டாகிறதோ ? எதனால் ரக்ஷிக்கப் படுகிறதோ ? எதனிடம் லயிக்கின்றதோ ? அது பிரும்மம் எனக்கூறப் படுகிறது.

பிறப்பது, இருப்பது, அழிவது எல்லாம் உலகிற்கே ஏற்றதால் இது பிரும்மத்திற்கேற்ற லக்ஷணமாகாது என பூர்வ பக்ஷம்.

ஸத்யம் க்ஞானம் அநந்தம் பிரும்மம் என்பது பிரும்மத்தின் ஸ்வரூப லக்ஷணமாகும். வாக்கிற்கும் மநதிற்கும் எட்டாத பிரும்மத்திற்கு எப்படி லக்ஷணம் கூறுவது ? பிரும்மம் இதுதான் என்று கூற முடியாமல் வேதமே இதல்ல, பிரும்மம் இதல்ல என்று கூறாமல் கூறிக் காட்டுகிறது. ஏதோ ஒன்று ஸ்தூலமாகக் காட்டவே இந்த லக்ஷணம், இது எனக் கூறப்பட்டது.

## (3) சாஸ்த்ர யோநித்வ அதிகரணம்.

शास्त्र योनित्वात् (மாஸ்த்ர யோநித்வாத்)

" இந்த மிகப் பெரியதான பிரும்மத்தின் மூச்சுக் காற்றே ரிக்வேதம் " என்ற வேதவாக்யத்தில், பிரும்மமே வேத கர்த்தாவா ? ஸர்வக்ஞரா ? என்ற ஸந்தேஹம் தோன்றுகிறது. " வேதம் மாறுதலில்லாத நித்ய வாக்குமயமானது " என்று வேதமே கூறுவதால் பிரும்மம் வேதத்திற்குக் கர்தா அல்ல. ஸர்வக்ஞனுமல்ல என்பது பூர்வபக்ஷம். ஸர்வக்ஞ ஸ்வரூபமான வேதம் பிரும்மத்தின் மூச்சுக் காற்றுபோல் அதனிடமிருந்தே அநாயாஸமாகத் தோன்றியதே. ஆதலால் அவரும் ஸர்வக்ஞரே கர்த்தாவுமாவர்.

---

3 வேதங்களுக்கும் ஸந்த்யா வந்தந புத்தகத்தை

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸதாசிவ ப்ரம்மேந்த்ரர் இயற்றியது.

மற்ருேர் பிரகாரமாகவும் இங்கு விசாரிக்கப்படு கிறது. "அந்த உபநிஷத்தால் கூறப்படும் புருஷனை" என்ற வேதவாக்யத்தில் ஒரு ஸந்தேஹம். உபநிஷத்தில் கூறப்பட்டாலும் அந்த பிரம்மத்தை அது ஏற்கனவே ஸித்தமாக இருப்பதால் வேறு பிரமாணங்களாலும் அறியலாம். சாஸ்திரத்தால் தான் அறிய வேண்டும் என நிர்பந்தமில்லை என்பது பூர்வபக்ஷம்.

அந்த பிரும்மத்திற்கு ரூபம்முதலியன இல்லாததால் பிரத்யக்ஷம் அநுமானம் முதலிய வேறெந்த பிரமாணங் களாலும் அறியமுடியாதது. சாஸ்த்ரம் ஒன்றிஞல்தான் அதை அறியமுடியும். சாஸ்த்ரமென்பது வேதமேயாகும். தர்க்க வியாகரணுதிகளல்ல.

## (4) ஸமன்வயாதிகரணம்.

### तत्तु समन्वयात् (தத்து ஸமன்வயாத்)

உபநிஷத்தில் காணப்படும் வேதாந்த வாக்யங்கள் இதைச் செய்! இதைச்செய்யாதே! என்ற விதி நிஷேத மில்லாதிருப்பதால் அவைகள் கர்மாவின் சேஷமான வாக்யங்கள். அவை கர்மாவைச் செய்பவரைச் சார்ந் தவை. நித்தியமாய் ஸித்தமாய் உள்ள பிரும்மத்தைச் சார்ந்தவை அல்ல. வீடு காடு என்று மாத்ரம் சொன்னுல் அதனுல் ஒரு காரியமும் ஸாதிப்பதற்கில்லை. வீட்டை அலங்காரம் செய். காட்டை அழி என்ருல் அது அர்த்த முள்ளதாகும். ஆதலால் வேதாந்த வா[illegible] வாக்யங்களுக்கு சேஷமாகக் கூறவேண்டுமென்பது பூர்வ பக்ஷம்.

---

ஸூர்யமண்டலத்தை த்வஷ்டா கடைந்தான்

வேதாந்த வாக்யங்கள் பிரும்மத்தினிடம் மிக்கப் பொருத்தமாக இருப்பதால் அவை கர்ம சேஷங்களல்ல. வீடு கட்டியிருக்கிறது. காடுவெட்டியாய் விட்டது என்று ஸித்தமான சொற்களைக் கூறினலும் அதைக்கேட்பவருக்கு ஸந்தோஷமுண்டாகிறது. அதேபோல் பிரும்மம் ஸத்தியம் க்ஞானம் அநந்தம் என்றுகூறினலும் உபநிஷத் வாக்யங்கள் அதனிடம் பொருத்தமாக அமையும். ஆதலால் அவை கர்ம சேஷங்களல்ல.

இந்த 4 ஸூத்ரங்களுக்கு சதுஸ் ஸூத்ரீ என்று பெயர். இவைகளால் பிரும்மம் ஸர்வ ஜகத் காரணம். ஸர்வக்ஞன் ஸர்வ வேதாந்த வாக்யங்களாலும் விளக்கப் படுபவன் என்ற முடிவேற்பட்டது.

## (5) ஈக்ஷத்யதிகரணம்.

ईक्षते र्नाशब्दं (ஈக்ஷதேர்நாஶப்தம்)

சாந்தோக்ய உபநிஷத்தில் "ஸதேவஸோம்ய" என்று துவக்கும் வாக்யத்தில் 'ததைக்ஷத' என்று கூறப் படுகிறது. அதாவது ஸத் என்பதுதான் முதலிலிருந்தது. அதுதான் பஹுப்ரஜைகளாக - உலகமாக - ஆகவேண்டுமென பார்த்தது. (யோசித்து) என்ற விடத்தில் இந்த உலகமாக ஆனது பிரதானமா? பிரும்மமா? என ஸந்தேஹம்.

ஸாங்க்ய மதத்தவர் ஸத்வ ரஜஸ்தமஸ் ஆகிய மூன்று குணங்களும் ஒன்ருகச்சேர்ந்திருப்பது பிரதாநமெனப் படும். அதுதான் ஸகல உலகுமானது என்ருர்கள்.

வேதபிரமாணமில்லாத பிரதானம், உலகாக முடியாது. அன்றியும் அது ஜடம். ஶ்ருதியோ பார்த்தார். அதாவது யோசனை செய்தார் என கூறுவதால் ஜடத்திற்கு யோசிக்கும் அறிவில்லாததால் உலககாரணம் பிரும்மமே யாகும். பிரதாநமல்ல.

---

அதிலிருந்துண்டானது ஸ்படிகம்

## गौणश्चेन्न आत्मशब्दात् (கௌணஶ்சேந்ந ஆத்மஶப்தாத்) ||

ஸ்ருஷ்டி ப்ரகரணத்தில் "தேஜஸ் பார்த்தது. ஜலம் பார்த்தது" என ஜடமான அக்நியும் நீரும் பார்த்தது என்பது போல் இந்த பிரதாநமும் பார்த்தது என்று கூறலாமே.

முக்யமான அர்த்தம் பொருந்தாத போது கௌணம் அதாவது ஒப்புக்காக கூறுவது போல் ஜடமான பிரதானமும் பார்த்தது என்று கூறுவோமெனில் அப்படியும் கூறுவதற்கில்லை. அங்கு ஆத்மா - அநேந ஆத்மநா அநுப்ரவிஶ்ய என ஆத்ம ஶப்தம் கூறப்படுவதால் கௌணமாகவும் கூட பிரதாநமே ஜகத் காரணம் என கூறமுடியாது.

## तन्निष्ठस्य मोक्षोपदेशात् (தந்நிஷ்டஸ்யமோக்ஷாபதேசாத்)

பிரதாநமே ஆத்மா என்ற சொல்லால் உபநிஷத்தில் கூறப்பட்டிருக்கிறது என்று கூறுவதானல் "அந்த ஆத்மாவிடம் சேதனனை ஶ்வேதகேது சேர்ந்திருந்து பிறகு மோக்ஷம் பெறுவான் எனக் கூறுவதால் சேதனனை ஶ்வேதகேது அசேதநமான ப்ரதாநத்தில் சேர முடியாது. சிரத்தையால் அப்படி த்யாநம் செய்தாலுங்கூட மோக்ஷம் வருமா? சேதனத்துடன் சேதநன் சேறுவதுதான் மோக்ஷத்தைத் தரும். ஆதலாலும் பிரதாநத்தை ஆத்மா என்று கூறமுடியாது. அது உலககாரணமாகவும் ஆகாது.

## हेयत्वाव चनाच्च (ஹேயத்வாவசநாச்ச)

அருந்ததி நக்ஷத்ரத்தை விவாஹத்தன்று பார்க்க வேண்டும். அதுமிக சூக்ஷ்மமானது. அதைக்காட்ட அதனருகிலுள்ள பெரிய ஒரு நக்ஷத்திரத்தைக்காட்டி இதுதான் அருந்ததீ என்று கூறி அதை நன்ருக கவனித்தபின் "அதல்ல அருந்ததீ அதனருகில் மிக ஸூக்ஷ்மமாக இருக்கிறதே அதுதான் அருந்ததீ" எனக் காட்டுவர். அதுபோல் பிரதானத்தை ஆத்மா என்று காட்டி பிறகு அதல்ல ஆத்மா அதனருகே உள்ளது ஆத்மா என்று கூறலாமே

---

ஸ்படிகக்கல்லால் அமைந்தவர் ஆதித்யன்

என்றால் அதுவும் முடியாது. ஏன்? அருந்ததீ தெரிந்த பின் முன்னே காட்டியது அருந்ததியல்ல என்று கூறுவதுபோல் பிரதானம் ஆத்மாவல்ல. அதை விட்டுவிட்டு அதற்கு மேல் உள்ளது ஆத்மா என்று கூறவில்லையே. அன்றியும் அந்த ஆத்மாவை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்ததாகும் என்று மேலே கூறப்படுகிறது. அது ஆத்மாவை அறிந்தால் தான் எல்லாவற்றையும் அறிந்ததாகும். ஜடமான பிரதானத்தை அறிந்தால் அந்த எல்லாவற்றையும் அறிந்த க்ஞானமும் வராது. ஆதலாலும் பிரதானம் ஆத்மா அல்ல! ஜகத்காரணமுமல்ல, பிரம்மமே காரணமாகும்.

### स्वाप्ययात् (ஸ்வாப்யயாத்)

ஸ்வ என்ற தனது ஸ்வரூபத்தில் லயமாகிறான் எனக் கூறுவதால் ஸத் என்பது ஆத்மஸ்வரூபமேயாம். அதே ஜகத்காரணமாம்.

### गति सामान्यात् (கதிஸாமாந்யாத்)

ஆத்மாவினிடமிருந்து ஆகாசமுண்டானது. ஆகாயத்திலிருந்து வாயு என்று ஒவ்வொன்றும் சேதனனை பிரும்மத்திடமிருந்தே உண்டானது எனக் கூறப்பட்டிருப்பதால் அசேதநனிடமிருந்து உண்டானது என்று கூறுவதால் ஆத்மாவே ஜகத்தைப்படைத்தது. ஜடமானபிரதானமல்ல.

### श्रुतत्वाच्च (ஶ்ருதத்வாச்ச)

ஶ்வேதாஶ்வதர உபநிஷத்திலே ஸர்வக்ஞனை ஈஶ்வரனைக் குறித்து, "அவனே காரணம், கரண அதிபர்களுக்கு அதிபதி. அவனை உண்டு பண்ண ஒருவனுமில்லை. அவனுக்கு அதிபனும் ஒருவருமில்லை" எனக் கூறப்படுவதாலும் ஸர்வக்ஞனை பிரும்மமே ஜகத்திற்குக் காரணம். அசேதநமான பிரதாநமோ மற்றதோ உலககாரணமில்லை. இந்த அதிகரணத்தில் 7 ஸூத்ரங்கள் கூறப்பட்டன.

---

மலைமகளாகத் தோன்றினாள் பார்வதி

13

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## (6) ஆநந்தமயாதிகரணம்.

आनन्दमयोऽभ्यासात् (ஆநந்தமயோப்யாஸாத்.)

7 ஸூத்ரங்கொண்டது இந்த அதிகரணம். முதலில் ஏகதேசி மதம் என வார்த்திககாரர் மதத்தை வர்ணித்து பின்னர் ஆசார்யாள் தனதுபாஷ்யத்தை விவரிக்கிறார்கள். தைத்ரீய உபநிஷத்தில் அந்நம் பிரும்மம் பிராணன் பிரும்மம் மநஸ் பிரும்மம் விக்ஞானம் பிரும்மம் ஆநந்தம் பிரும்மம் என ஒன்று ஒன்றாக பிரும்மம் என்று கூறி பிறகு இதல்ல ஆத்மா, வேறு ஆத்மா இருக்கிறார் என கூறப் படுகிறது. கடைசியாக உள்ள ஆனந்தமயன் என்ற விடத்தில் ஆநந்தமயன் ஜீவனா ஆத்மாவா? என்று ஸந்தேஹம். ஜீவனையே ஆத்மாவாக உபாஸிக்க வேண்டுமென்பது பூர்வ பக்ஷம்.

ஆநந்த என்ற ஶப்தம் அடிக்கடி பரமாத்மாவைப் பற்றியே கூறுவதால் அவரே உபாஸிக்கத் தக்கவர். ஜீவனல்ல என்பது ஸித்தாந்தம்.

विकार शब्दा न्नेति चेन्न प्राचुर्यात् (விகாரஶப்தான் நேதி சேன்நப்ராசுர்யாத்)

மய என்றசொல் ஸ்வர்ணமயமானது. பாத்ரம்என்ற விடத்திலே ஸ்வர்ணத்தின் மாறு உருவம் பாத்ரம் என்று கூறப்படுவது போல், ஆநந்தமயன் என்றபோது ஆநந்தத்தின் மாறுதல் என்ற அர்த்தத்தைத் தருவதால் பிரும்மத்திற்கு மாறுதலில்லாததால் ஜீவனே ஆநந்தமயன் என்பது பூர்வபக்ஷம்.

---

மய என்ற ஶப்தம் அதிகமானது என்றஅர்த்தத்தில் கூறப்படுகிறது. யாகம் அன்னமயம் என்ற போது அபரிமிதமாக அன்னதானம் நடக்கிறது என்றுதான் பொருள். அதைப்போல் ஆநந்தம் பூர்ணமானது என்பதால் ஆநந்தமயன் பரமாத்மாவே.

तद्धेतु व्यपदेशाच्च ( தத்தேது வ்யப தேஶாச்ச)

ஆநந்தமயமே மற்றவர்களை ஆநந்தப் படுத்த காரணமாக இருக்கிறது என்று கூறப்பட்டிருப்பதாலும் ஆநந்தமயன் பரமாத்மாதான்.

मान्त्र वर्णिक मेवच गीयते (மாந்த்ரவர்ணிகமேவச கீயதே)

ஸத்யம் க்ஞாநமநந்தம் பிரும்ம என்ற மந்த்ரத்தில் உள்ள வஸ்துவே ஆநந்தமயன் என கூறப்படுகிறது. அதற்குமேல் அன்ய: ஆந்தர: ஆத்மா என்று கூறப்படாததால் பிரும்மமே இங்கு கூறப்பட்டது.

नेतरोऽनुपपत्तेः (நேதரோநுபபத்தே:)

இந்த பிரகரணத்தில் ஸ்ருஷ்டிக்கு முந்தி, தான் ஸ்ருஷ்டிக்க வேண்டுமென்று விரும்பினர் என்றுகூறப்படுகிறது இப்படி ஸ்ருஷ்டிக்கும் சக்தி ஜீவனிடம் பொருந்தாது. ஆதலால் பிரும்மமே ஆநந்த மயார்த்தம், ஜீவனல்ல.

भेदव्यपदेशाच्च (பேதவ்யபதேசாச்ச)

ஆத்மா ரஸ ஸ்வரூபி. அந்த ரஸத்தை அடைந்து ஆநந்தியாகிறுன் என்று ஜீவன் ஆநந்தத்தை அடைகிறவனுகவும் அடைய வேண்டிய பொருள் ஆத்மாவாகவும் பேதங் கூறப்படுவதால் ஆநந்தமயன் பிரும்மமே.

कामाच्च नानुमाना पेक्षा (காமாச்ச நாநுமாநா பேக்ஷா)

அநுமாந ப்ரமாணத்தால் மாத்ரம் அறியத்தக்க பிரதாநம் என்பது ஆநந்தமய என்பதின் பொருள் எனக்கூற முடியாது. ஸோகாமயத எனசேதந கார்யமான காமனை

அரிய பெரிய உபதேசமிவைகள்.

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## (6) ஆநந்தமயாதிகரணம்.

आनन्दमयोभ्यासात् (ஆநந்தமயோப்யாஸாத்.)

7 ஸூத்ரங்கொண்டது இந்த அதிகரணம். முதலில் ஏகதேசி மதம் என வார்த்திககாரர் மதத்தை வர்ணித்து பின்னர் ஆசார்யாள் தனதுபாஷ்யத்தை விவரிக்கிறார்கள். தைத்ரீய உபநிஷத்தில் அந்நம் பிரும்மம் பிராணன் பிரும்மம் மநஸ் பிரும்மம் விக்ஞானம் பிரும்மம் ஆநந்தம் பிரும்மம் என ஒன்று ஒன்றாக பிரும்மம் என்று கூறி பிறகு இதல்ல ஆத்மா, வேறு ஆத்மா இருக்கிறார் என கூறப்படுகிறது. கடைசியாக உள்ள ஆனந்தமயன் என்றவிடத்தில் ஆநந்தமயன் ஜீவனா ஆத்மாவா? என்று ஸந்தேஹம். ஜீவனையே ஆத்மாவாக உபாஸிக்க வேண்டுமென்பது பூர்வ பக்ஷம்.

ஆநந்த என்ற ஶப்தம் அடிக்கடி பரமாத்மாவைப் பற்றியே கூறுவதால் அவரே உபாஸிக்கத் தக்கவர். ஜீவனல்ல என்பது ஸித்தாந்தம்.

विकार शब्दान्नेति चेन्न प्राचुर्यात् (விகாரஶப்தான் நேதி சேன்நப்ராசுர்யாத்)

மய என்றசொல் ஸ்வர்ணமயமானது. பாத்ரம் என்றவிடத்திலே ஸ்வர்ணத்தின் மாறு உருவம் பாத்ரம் என்று கூறப்படுவது போல், ஆநந்தமயன் என்றபோது ஆநந்தத்தின் மாறுதல் என்ற அர்த்தத்தைத் தருவதால் பிரும்மத்திற்கு மாறுதலில்லாததால் ஜீவனே ஆநந்தமயன் என்பது பூர்வபக்ஷம்.

---

குழந்தைகளுக்கும் பெண்களுக்கும் கற்பியுங்கள்

மய என்ற ஶப்தம் அதிகமானது என்ற அர்த்தத்தில் கூறப்படுகிறது. யாகம் அன்னமயம் என்றபோது அபரிமிதமாக அன்னதானம் நடக்கிறது என்றுதான் பொருள். அதைப்போல் ஆநந்தம் பூர்ணமானது என்பதால் ஆநந்தமயன் பரமாத்மாவே.

तद्धेतु व्यपदेशाच्च ( தத்தேது வ்யப தேஶாச்ச)

ஆநந்தமயமே மற்றவர்களை ஆநந்தப் படுத்த காரணமாக இருக்கிறது என்று கூறப்பட்டிருப்பதாலும் ஆநந்தமயன் பரமாத்மாதான்.

मान्त्र वर्णिक मेवच गीयते (மாந்த்ரவர்ணிக மேவச கீயதே)

ஸத்யம் க்ஞாநமநந்தம் பிரும்ம என்ற மந்த்ரத்தில் உள்ள வஸ்துவே ஆநந்தமயன் என கூறப்படுகிறது. அதற்குமேல் அன்ய: ஆந்தர: ஆத்மா என்று கூறப்படாததால் பிரும்மமே இங்கு கூறப்பட்டது.

नेतरोऽनुपपत्तेः (நேதரோநுபபத்தே:)

இந்த பிரகரணத்தில் ஸ்ருஷ்டிக்கு முந்தி, தான் ஸ்ருஷ்டிக்க வேண்டுமென்று விரும்பினார் என்றுகூறப்படுகிறது இப்படி ஸ்ருஷ்டிக்கும் சக்திஜீவனிடம் பொருந்தாது. ஆதலால் பிரும்மமே ஆநந்த மயார்த்தம், ஜீவனல்ல.

भेदव्यपदेशाच्च (பேதவ்யபதேசாச்ச)

ஆத்மா ரஸ ஸ்வரூபி. அந்த ரஸத்தை அடைந்து ஆநந்தியாகிறான் என்று ஜீவன் ஆநந்தத்தை அடைகிறவனாகவும் அடைய வேண்டிய பொருள் ஆத்மாவாகவும் பேதங் கூறப்படுவதால் ஆநந்தமயன் பிரும்மமே.

कामाच्च नानुमानापेक्षा (காமாச்ச நாநுமாநா பேக்ஷா)

அநுமாந ப்ரமாணத்தால் மாத்ரம் அறியத்தக்க பிரதாநம் என்பது ஆநந்தமய என்பதின் பொருள் எனக்கூற முடியாது. ஸோகாமயத எனசேதந கார்யமான காமனை

---

அரிய பெரிய உபதேசமிவைகள்.

அங்கு கூறப்படுகிறது. ஜடமான பிரதானம் ஆசைப்பட வகையில்லாதது.

**अस्मिन्नस्य चतद्योगं शास्ति (அஸ்மின் அஸ்ய ச தத் யோகம் ஶாஸ்தி)**

இந்த ஆநந்த மய பிரும்மத்திடம் ஜீவனுக்கு ஐக்யத்தை சாஸ்த்ரம் கூறுகிறது. ஆதலால் பிரும்மம் என்று தான் கூறவேண்டும். ஜீவனுக்கு ஜீவனிடமோ பிரதானத்தினிடமோ சேர்வது முக்தியாகாது.

இந்த அதிகரணத்தில் இதுவரை வார்த்திகாரரின் அபிப்ராயத்தை ஒட்டி பாஷ்யமும் வார்த்திகமும் கூறப்பட்டது. அதை விட்டு ஸ்ரீ ஆசார்யாள் தன்மதமாக வேறு வகையாகப் பூர்வ பக்ஷ ஸித்தாந்தங்களைக் கூறுகிறார்.

பிரும்மபுச்சம் பிரதிஷ்டா என்பதே நிர்ணயம் செய்ய வேண்டிய விஷய வாக்யம். இங்கு புச்சம் என்பது ஒரு அவயவமானதால் பிரும்மத்தை ஒன்றின் அவயவமாக உபாஸிப்பதா? அல்லது பிரும்மமாகவே உபாஸிப்பதா? என்று ஸந்தேஹப்பட்டு அவயவமாக உபாஸிக்கலாம் என்பது பூர்வபக்ஷமாகும். பிரும்மமாகவே (ஸ்வப்ரதாந மாகவே) உபாஸிக்கவேண்டும் என்பது ஸித்தாந்தம். அதை ஒட்டியே மற்ற ஸூத்ரங்களுக்கும் பொருள் கூறப்பட்டது.

## (7) அந்தரதிகரணம்.

**अन्तस्तद्धर्मोप देशात् (அந்தஸ்தத்தர்மோபதேசாத்)**

சாந்தோக்ய உபநிஷத்தில் ஆதித்யனுக்குள்ளே ஸ்வர்ணமயமான ஒரு புருஷனிருக்கிறான். அதேபோல் கண்ணிலும் ஒரு புருஷன் இருக்கிறான். அவனை உபாஸிக்கவேண்டும் என்று ஒரு உபாஸனை கூறப்படுகிறது. அப்யாஸத்தினால் ஆநந்தமயன் ஆத்மா என்று கூறியது போல் இங்கும் ஹிரண்மயமான தாடி, மீசை, கேசம், நகம் முதல் எல்லாம் ஸ்வர்ணமயன் என்று அடிக்கடி

கூறப்படுவதால் தவத்திஞல் மேன்மை பெற்ற ஒரு புருஷனே அங்கிருப்பதாக உபாஸிக்கவேண்டும் என்பது பூர்வபக்ஷம்.

பரமாத்மாவினுடைய குணங்களே அங்கு உபதேசிக்கப்படுவதால் அவனேயே உபாஸிக்கவேண்டும். நாம ரூபமற்றவன் பரமாத்மா என்பது உண்மையே. ஆனுலும் அவர் பக்தர்கள் உபாஸிப்பதற்காக மாயையால் நாம ரூபங்களைத் தானே எடுத்துக் கொள்கிருர்.

भेदव्यपदेशाच्चान्यः (பேதவ்யபதேசாச்சான்ய:)

ஆதித்யனுக்குள் அந்தர்யாமியாக இருப்பவரை ஆதித்யனும் அறியமாட்டான் என ஆதித்யன் வேறு. உள்ளே உள்ள புருஷன் வேறென பேதங் கூறப்படுவதாலும், ஆதித்யனுலும் அறிய முடியாதவன் என்பதாலும் பரமாத்மாவே உபாஸிக்கத் தக்கவன். மற்றபுருஷனல்ல.

## (8) ஆகாசாதிகரணம்.

आकाशस्तल्लिंगात् (ஆகாஸஸ்தல்லிங்காத்)

சாந்தோக்ய உபநிஷத்தில் இந்த லோகத்திற்கு எது கதி என்று கேட்டுக்கொண்டு ஆகாஸத்திலிருந்து ஸர்வ பூதங்களும் உண்டாவதால் அதிலேயே லயமாவதால் ஆகாசமே கதி எனக் கூறப்படுகிறது.

இங்குஆகாசம் என்பது பிரஸித்தமான ஆகாசமே. ஆகாஸத்திலிருந்து வாயு முதலியன உண்டானதால் பிரஸித்தமான பூதாகாஸமே இங்கு கூறப்படுகிறது என பூர்வ பக்ஷம். பிரும்மமே ஆகாச ஸப்தத்தால் கூறப்படுகிறது. அதற்கேற்ற காரணங்களிருக்கின்றன. எல்லா பூதங்களும் என்றபோது பூதாகாஸம் உள்பட எல்லாம் என்பதால் எல்லாம் ஆகாஸத்தில் லயமாகின்றது என்பதாலும் ஆகாஸஸப்தம் ஆத்மாவினிடமும் பலவிடங்களில் கூறப்படுவதாலும் பரமாத்மாவே இங்கு ஆகாஸ ஸப்தத்தின் பொருள்.

---

மாந முருக நித்யம் பாட்டாகப் பாடலாம்

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.



ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## ⑨ ப்ராணாதிகரணம்.

(अत एव प्राणः அதஏவ ப்ராண:)

சாந்தோக்ய உபநிஷத்தில் உத்கீதப்ரகரணத்தில் ஓ ப்ரஸ்தோதாவே (யாகத்தில் இவர் ஒரு ரித்விக்) என்று ஆரம்பித்து எந்த தேவதை இங்குகூறப்படுகிறது? என்று கேட்க ப்ராண தேவதை என்று பதில் கூறப்படுகிறது.

அங்கு கூறப்படும் ப்ராணன் வாயுவா? அல்லது பரமாத்மாவா? என்ற ஸந்தேஹத்தில் முன் அதிகரணத்தில் கூறியபடி பிரும்மம் என்பதற்கேற்ற ப்ரமாணங்களிருப்பதால் இங்கு கூறப்படுவதும் பிரும்மமே. வாக்கு கண் காது முதலியவைகள் பிராணனிடம் தூங்கும் போது லயமாவதால் பிராணன் வாயுவே அதன் பொருள் என எண்ணக்கூடாது. ஸகல பூதங்களும் பிரும்மத்தினிடமே லயமாகின்றதால் இதன் பொருள் பிரும்மந்தான்.

## ⑩ ஜ்யோதிஶ் சரணாதி கரணம்.

4 ஸூத்ரமுள்ளது.

(ज्योतिश्चरणाभिधानात् ஜ்யோதிஶ்சரணாபிதாநாத்)

சாந்தோக்ய உபநிஷத்தில் ஆகாஶத்திலும் உலகெங்கும் புருஷனிடத்திலும் ஒரு ஜ்யோதிஸ் ப்ரகாசிக்கின்றது என்று கூறப்படுமிடத்தில் ஆதித்யன் முதலிய ஜ்யோதிஸ் கூறப்படுகிறதா? அல்லது ஆத்மாவா? என்று ஸந்தேஹந் தோன்ற அந்த வாக்யத்திற்கு முன், இவருடைய ஒரு பாதமே உலகெலாமாயிருக்கிறது. மற்ற மூன்றுசரணங்கள் அழியாததாக ஆகாஶத்திலிருக்கின்றன என்று கூறப்படுவதால் பரமாத்மாதான் அதன் பொருள் என்று ஸித்தாந்தமாகும்.

---

நாமாவளியில் அது முன்பின்னாக உளது.

(छन्दोभिधानान्नेति चेन्न तथाचेतोर्पण निगदात्तथाहि दर्शनात् சந்தோபிதாநாந் நேதிசேந்நததா சேதோர்பண நிகதாத் ததாஹி தர்ஶநாத்)

காயத்ரீ சந்தஸ்பற்றி அந்த வேதம் கூறுவதால் ஜோதிஸ் சப்தம் ஆத்மாவைக் கூறவில்லை என்று கூற முடியாது. சந்தஸ் வழியாக சித்தத்தை ஆத்மாவினிடம் அர்ப்பணம் செய்யவேண்டும் எனக் கூறப்படுகிறது. இதேபோல் வேறிடத்திலும், பஹ்வ்ருசர்கள் மஹத்தான உக்தத்தில் விசாரிக்கின்றார்கள் என உதாஹரணங் காட்டப்படுவதால் பிரும்மம் தான் இங்கு கூறப்பட்டது.

(भूतादि पाद व्यपदेशोपपत्ते श्चैवं பூதாதி பாத வ்யப தேஶோபபத்தேஶ் சைவம் )

சதுஷ்பதா காயத்ரீ என ஆரம்பித்து, பூதம் பிருதிவீ ஶரீரம் ஹ்ருதயம் வாக் பிராணன் என்ற ஆறு ப்ரகார மாக இருக்கின்றது என்று கூறப்படுவதாலும் ஸர்வ பூதங்களும், இதற்கு ஒரு பாதம் என்று கூறப்படுவ தாலும் சந்தோமயமான காயத்ரி அல்ல. இங்கு உபாஸிக் கத்தக்கது பிரும்மமே.

(उपदेश भेदान्नेतिचेन्न उभयस्मिन्नपि अविरोधात् உபதேச பேதாந் நேதிசேந்ந உபயஸ்மிந்நபி அவி ரோதாத்)

இதன் மூன்று பாதம் த்யுலோகத்தில் என்றும் த்யு லோகத்திற்கு மேலே இது இருக்கிறது என்றும் வெவ்வே ருக உபதேசிக்கப்படுவதால், அந்த பிரும்மமேதான் இங்கு கூறப்படுகிறதென எப்படிக் கூறமுடியும்? என்ருல் த்யு லோகத்திலும், அதற்கு மேலேயும் என்று இருவகை யாகக் கூறப்பட்டாலும், பிரும்மத்தைப் பற்றியே கூறுவதால் விரோதமில்லை. மரத்தின் மேலே பக்ஷி இருக்கிறது என்ருலும், மரத்திற்கு அப்பாலிருக்கிறது என்ருலும் ஒன்றுதானே.

---

மூலாதாரம் ஜலமல த்வாரங்களிடையிலுளது.

## (11) பிரதர்தனாதிகரணம் (4-ஸூத்ரமுள்ளது)

**(प्राणस्तथानुगमात् பிராணஸ்ததாநுகமாத்)**

கௌஷீதகீ பிராம்மண உபநிஷத்தில் ப்ரதர்தநன் என்ற அரசனுக்கு தேவேந்த்ரன் உபதேசிக்கையில் "பிராணோஸ்மி, ப்ரக்ஞாத்மா" எனக் கூறுகிறார். அங்கு பிராணன் என்ற சொல்லிற்கு பிராணவாயு பொருளா? இந்த்ர தேவதையா? ஜீவனா? பிரும்மமா? என ஸந்தேஹமுண்டாகிறது. 13 வது ஸூத்ரத்தில் அத ஏவ ப்ராண: என்று பிராண ஶப்தத்திற்கு பரமாத்மாதான் பொருள் எனக் கூறப்பட்டிருப்பதால் ஸந்தேஹத்திற்கே இடமில்லையே! எனில் என்னையே அறி; என இந்த்ரன் கூறுவதாலும், இந்த ஶரீரத்தை ஏற்று அது கிளப்புகிறது என்பதாலும், வாக்கை அறியாதே சொல்பவனை அறி, என்பதாலும் ஸந்தேஹம் உண்டாகிறது.

இந்த அர்த்தங்களெல்லாம் பிரும்மம் ஒன்றினிடமே பொருத்தமாகக் கூறமுடியுமாதலால் பிராணன் என்பது இங்கு பிரம்மமே.

**(नवक्तुः आत्मोपदेशात् इतिचेत् अध्यात्म संबन्ध भूमाह्यस्मिन् । நவக்து: ஆத்மோபதேஶாத் இதிசேத் அத்யாத்ம ஸம்பந்த பூமா ஹ்யஸ்மின் )**

இந்த்ரன், என்னையே அறி எனத் தனது ஆத்மாவை உபதேசிப்பதாலிங்கு ப்ராண ஶப்தத்தால் பிரும்மோபாஸனைக் கூறப்படவில்லை என்று கூறுவதற்கில்லை. ஏன்? அந்த வாக்யமுள்ள உபநிஷத் அத்யாயத்தில் பரமாத்ம ஸம்பந்தமே நிறையக்காணப்படுகிறது, வண்டிசக்ரத்தின் ஆரக்கால்களில் வட்டை கோர்க்கப்பட்டிருக்கிறது. ஆரக்கால் குடத்தில் கோர்க்கப்பட்டிருக்கிறது. அதேபோல், ஸகல இந்திரியங்களும் மநதில் சேர்க்கப் பட்டிருக்கின்றன. மநம் பிராணனில் சேர்க்கப்பட்டிருக்கிறது என்பது போன்ற பலவாக்யங்கள் ஆத்மாவையே கூறுகின்றன.

---

அதற்கு குண்டலினீ சக்தி எனவும் பெயர்.

(शास्त्रदृष्ट्या तु उपदेशो वामदेववत् ஶாஸ்த்ர த்ருஷ்ட்யா து உபதேஶோ வாமதேவவத் )

ஆனால், இந்த்ரன் தன்னை உபாஸிக்கும்படி ஏன் கூறினார்? பிரும்மம், சரீரம் முதலியவைகள் இல்லாத தல்லவா? எனில், இந்த்ரன் தன்னை உபாஸிக்கும்படிக் கூறவில்லை. வாமதேவர் என்ற ரிஷி எப்படி நான் மநுவாக இருந்தேன். ஸூர்யனாக இருந்தேன் எனக் கூறினாரோ அப்படியே இந்த்ரனும் தானும் பிரும்மஸ்வ ரூபி ஆனதால் பிரும்மத்தையே உபாஸி என்றார்.

(जीव मुख्य प्राण लिंगात् नेतिचेत् न उपासात्रैविध्यात् आश्रितत्वात् इह तद्योगात् ஜீவ முக்ய ப்ராணலிங்காத் நேதி சேத் ந உபாஸாத்ரை வித்யாத் ஆஶ்ரிதத்வாத் இஹதத் யோகாத்)

இங்கு பிராணன் பிரும்மம் என்று கூறுவதே பொருத்தமாகும். இல்லையேல்–ஜீவ உபாஸனை–பிராண உபாஸனை பிரும்மோபாஸனை என்ற மூன்று உபாஸனை களைக் கூறியதாகும். ஒரு வாக்யத்தில் மூன்று உபாஸனை கூறப்படுவதில்லை. ஏற்கனவே பிராண ஶப்தம் ஆத்மா வைக் கூறுகிறதென அதை ஆஶ்ரயித்ததாலும், மிக்க சிறந்ததான ஹிதத்தைக் கூறு என்று கேட்ட பிரதர்தந னுக்கு பிரும்மமே சிறந்த ஹிதமான மோக்ஷத்தைத் தருவ தாலும், பிரம்மோபாஸநமே கூறப்பட்டது.

இத்துடன் பிரும்மமே குறிப்பிட்ட வாக்யங்களுக்கு அர்த்தம் என்று முதற்பாதத்தில் கூறப்பட்டது இங்கு. விசாரணைக்கு வந்த வாக்யங்களில் பூர்ண சாஸ்த்ர க்ஞானமுள்ளவர்க்கு பிரும்மந்தான் கூறப்படுகிறது. அதற் கேற்ற அடையாளங்கள் ஸ்பஷ்டமாக இருக்கின்றன என்று புலப்படலாம். ஆதலால் ஸ்பஷ்ட பிரும்ம லிங்க வாக்ய விசாரம் என இதற்குப் பெயரிடப்பட்டது.

[1-அ. 2-வது பாதம் 7 அதிகரணம் 32 ஸூத்ரமுள்ளது]

---

அது பாம்புபோல் சுருட்டிய நரம்பு.

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸதாஶிவ ப்ரம்மேந்திரா இயற்றியது.

## 1-வது அத்யாயம் — இரண்டாவது பாதம்.

### 7 அதிகரணம் 32 ஸூத்ரமுள்ளது.

### ஸர்வத்ர ப்ரஸித்யதிகரணம். 8 ஸூத்ரமுள்ளது.

(सर्वत्र प्रसिद्धोपदेशात् ஸர்வத்ர ப்ரஸித்தோபதேஶாத்)

இந்த 2. 3 பாதங்களில் ஸ்பஷ்டமாக பிரும்ம மிது என்று விளங்காத வாக்யங்கள் விசாரிக்கப்படுகின்றன. ஆதலால் அஸ்பஷ்ட பிரும்மலிங்க வாக்ய விசாரம் எனப் படுமிவை.

சாந்தோக்ய உபநிஷத்தில் சாண்டில்ய வித்யாப்ரகரணத்தில் இந்த எல்லாம் பிரும்மமே (ஸர்வம், கல்விதம், பிரும்ம) அதை தஜ்ஜம், தல்லம், ததநம் என்று உபாஸிக்க வேண்டும் எனக் கூறப்படுகிறது. அதனிடமிருந்து உலகமுண்டாவதால் தஜ்ஜம். அதனிடமே லயிப்பதால் தல்லம். அதனாலே ஸகல கார்யங்களைச் செய்வதால் ததநம் என்று பொருள்.

இங்கு மேலே உள்ள வாக்யங்களில் "மநோமய: ப்ராண ஶரீர:" என்று கூறப்படுவதால் ஶரீரத்துடன் கூடிய ஜீவனை உபாஸிப்பதா? ஆத்மாவையே உபாஸிப்பதா? என ஸந்தேஹம். உலக ஸ்ருஷ்டி ஸ்திதி லய மெல்லாம் பிருமத்தினிடமிருந்தே உண்டாகின்றன என்று எங்கும் பிரஸித்தமாகக் கூறப்படுவதால் பிரும்த்தையே உபாஸிக்க வேண்டும். மநோமயன் ப்ராணஶரீரன் பிரும்மம் என உபாஸிக்க வேண்டும்.

(विवक्षितगुणोपपत्तेश्च விவக்ஷித குணோபபத்தேஶ்ச)

ஸர்வம் கல்வித மாத்மா - என்ற வாக்கியங்களுக்கு மேலே அபஹதபாப்மா - தோஷமற்றவன் ஸத்ய ஸங்கல்பன் ஸத்யகாமன் முதலிய குணங்கள் பிரும்மத்தினிடமே

---

பொருந்தும் ஆதலால் உபாஸிக்கத் தக்கது பிரும்மமே. ஜீவனல்ல.

(अनुपपत्तेश्च न शारीरः अநுபபத்தேஶ்ச ந ஶாரீர:)

ஆகாஶாத்மா, வாக்கில்லாதவன், ஒரு ஆதரவையும் தேடாதவன், பூமியைவிடப் பெரியவன் என்பதுபோன்ற குணங்கள் ஶாரீரி எனும் ஜீவனிடம்பொருந்தாது. பிரும்மத்தினிடமே பொருந்தும்.

(कर्मकर्तृव्यपदेशाच्च கர்ம கர்த்ருவ்யபதேஶாச்ச)

உபாஸகன் உடலை விட்டபின் இங்கு கூறப்பட்டவனையே அடைகிறான் என்று பிரம்மத்தை அடையும் பொருளாகவும் (கர்மா) உபாஸகனை அடையும் கர்த்தாவாகவும் கூறுகிறது. ஒருவனே கர்தாவாகவும் கர்மாவாகவும் இருக்கமுடியாதல்லவா ?

(शब्दविशेषात् ஶப்தவிஶேஷாத்)

இங்கு அந்தராத்மாவாக உடலிலுள்ளவனைத் தவிர வேறு புருஷன் மனோமயன் பிராணஶரீரன் என வர்ணிக்க ச்ருதியிருப்பதாலும் பிரும்மமே உபாஸிக்கத்தக்கது.

(स्मृतेश्च ஸ்ம்ருதேஶ்ச)

பகவத்கீதையிலும் ஈஶ்வரன் ஸர்வ ப்ராணிகளின் ஹ்ருதயத்திலிருந்து மாயையால் யந்தரத்தில் அமர்ந்தது போல் பூதங்களை ஆட்டிவைக்கிறான் எனக் கூறுகிறது.

(अर्भकौकस्त्वात् तद्व्यपदेशाच्चनेतिचेन्न निचाय्यत्वा देवं व्योमवच्च அர்ப்பகௌகஸ்த்வாத் தத்வ்யபதேசாச்ச நேதி சேந்ந நிசாய்யத்வா தேவம் வ்யோமவச்ச)

சிறிய இடத்திலிருப்பதாலும் அணுவானவன் என்று கூறுவதாலும் சிறிய ஹ்ருதயாகாஶத்தில் அணுவாக இருக்கும் ஜீவனே இங்கு கூறப்படுகிறான். பரமாத்மா அல்ல எனில் அப்படியல்ல சிறிய இடத்தில் உபாஸிக்கும்படிக் கூறுவதால், ஆகாசம்போல் சிறிய இடத்திலும் பெரிய இடத்திலும் இருப்பதாலும் பிரும்மமே

---

ஒன்றாக இருந்த வேதத்தை நான்காகப் பிரித்தார்.

கூறப்படுகிறது. ஸகல பூமிக்கும் அதிபதியானவனை அயோத்யாதிபதி எனக் கூறவில்லையா?

(संभोग प्राप्तिरितिचेत् न वैशेष्यात् ஸம்போகப்ராப்திரிதிசேத் ந வைஶேஷ்யாத்)

பிரும்மம் ஹ்ருதயாகாஶத்தில் அணுவாயிருந்தால் ஜீவனைப்போல் ஸுகதுக்க அனுபவம் ஏற்படும் எனில் இல்லை. ஜீவன் கர்தா, போக்தா. ஆத்மா அப்படியல்ல என விசேஷங் கூறப்பட்டுளது.

2. அத்ரதிகரணம் 2 ஸூத்ரமுள்ளது.

(अत्ता चराचर ग्रहणात् அத்தா சராசர க்ரஹணாத்)

கடோபநிஷத்தில் முதலத்யாயம் இரண்டாவது வல்லீ 21 வது மந்த்ரத்தில் பேச்சினாலோ மேதையாலோ அதிகக் கேள்வியினாலோ ஆத்மாவை அடைய முடியாது என்று ஆரம்பித்து 22 வது மந்த்ரத்தில் ஓயாமல் தீய கர்மா செய்பவனோ சாந்தியும் ஏகாக்ர தன்மையுமில்லாதவனோ ஶாந்த மனமில்லாதவனோ அதை அடையமாட்டான் என்று கூறுமிடத்தில் மேலே பிரம்ம, க்ஷத்ரிய ஜாதி இரண்டும் அவருக்கு அன்னமாகும், யமன் கறி காய் ஆவான் என வர்ணிக்கப்படுகிறது.

இங்கு இவைகளை உண்பவனான அக்னியை உபாஸிப்பதா? இவைகளைப் புஜிக்கும் ஒரு தேவதையை உபாஸிப்பதா? அல்லது ஆத்மாவை உபாஸிப்பதா எனசந்தேஹம்.

உண்பது என்பது நம்மைப்போல் சாப்பிடுவது என்பதல்ல. அன்றியும் சராசரமான எல்லாபொருள்களையும் உண்பவரெனக் கூறப்படுகிறது. தனக்குள் அவைகளை லயமாக்கிக் கொள்பவர் என்பது கருத்து. அத்தகையவர் பரமாத்மாதான்.

(प्रकरणाच्च ப்ரகரணாச்ச)

அந்த இடம் ஆத்மஸ்வரூபத்தைக் கூறுமிடமாதலால் பரமாத்மாதான் அத்தா உண்பவர் எனப்படுபவர்.

---

அதனால் தான் வேதவ்யாஸர் என்கிறோம்.

## 3. குஹாதி கரணம். 2 ஸூத்ரமுள்ளது.

**(गुहांप्रविष्टा वात्मानौ हि तद्दर्शनात् குஹாம் ப்ரவிஷ்டா வாத்மாநௌ ஹி தத்தர்ஶநாத்)**

கடோபநிஷத்தில் அவச்யமான கர்ம பலனை, புண்யத்தால் ஸம்பாதிக்கப்பட்ட மநுஷ்ய உடல் எனும் லோகத்தில் மிகச் சிறந்ததான ஹ்ருதயாகாசத்தில் வெயிலும் நிழலும் போலிருப்பவர்கள், என இருவர்களைப்பற்றி ப்ரம்மஞானிகளும், கர்ம மார்க்கத்திலுள்ளவர்களும், மூன்று முறை நாசிகேதசயநம் செய்தவர்களும் கூறுகிறார்கள் என ஒரு மந்த்ரமிருக்கின்றது.

இதில் இருவர் உடலில் ஹ்ருதய ஆகாசத்தில் பரஸ்பரம் விரோதமானவர் கர்மபலனை அநுபவிப்பவர் எனக் கூறப்படுவதால் புத்தியும் ஜீவனுமாக இருக்கலாமா? அல்லது ஜீவனும் ஆத்மாவுமாக இருக்கலாமா? என ஸந்தேஹமுண்டாகிறது.

ஸர்வ வியாபியும் ஒன்றையும் அநுபவிக்காதவருமான ஆத்மாவும் ஜீவனும் என்பது பொருந்தாது. புத்தியும் ஜீவனும் என்பதே எல்லா வகையிலும் பொருந்தும் என பூர்வபக்ஷம்.

ஜடமான புத்தியையும் ஜீவனையும் சேர்த்துக் கூறுது ஶ்ருதி. உலகில் இந்தப்பசுவுக்கு ஜோடியாக வேறொன்று வேண்டுமென்றபோது மற்றொரு பசுவே கோரப்படும். மரத்தையோ மற்றொன்றையோ ஜோடி எனச் சேர்க்க மாட்டார். ஸம்ஸாரியான ஜீவனும் ஸம்ஸாராதிகளில்லா ஆத்மாவும் எப்படிச் சேரும்? எனில் ஜீவனுக்கு ஸம்ஸாரித்வம் அக்ஞானத்தால் வந்ததுதானே? நித்யமானதல்ல. ஆதலால் ஜீவாத்மாக்களே கூறப்படுகிறது இங்கு.

**(विशेषणाच्च விசேஷணச்ச)**

ஜீவனை ரதத்திலுள்ள யஜமாநனாகவும் உடலை ரதமாகவும் வர்ணிக்கின்றது. இதை அறிந்து ஜீவன் வழியைத் தாண்டி பரமாத்மாவை அடைகிறான் என்றுமிருப்பதால் ஜீவனும் ஆத்மாவுமே ஹ்ருதய குகையிலுள்ளவர்.

1¼ லக்ஷம் சுலோகமுள்ள பாரதமியற்றினோர்

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

—————:❀❀:—————

ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## 4. அந்தராதிகரணம் 5 ஸூத்ரங்கள்.

### अन्तर उपपत्ते:

### 13 அந்தர உபபத்தே:

சாந்தோக்ய உபநிஷத்தில் "கண்ணில் காணப்படுகிற ஆத்மா அமிருதமானது. அபயமானது. அது பிரும்மம். கண்ணில் விழும் நீரோ நெய்யோ வழிந்தோடும்." என்ற இடத்தில் உபாஸிக்க வேண்டியவர் பிரதிபிம்ப புருஷனா? கண்ணிற்குத் தேவதையான ஸூர்யனா? பரமாத்மாவா? என்று சந்தேகம் உண்டாகிறது.

கண்ணில் காணப்படுகிறவர் எனப் பிரஸித்தமாகக் கூறப்படுவதால் பிரதிபிம்ப புருஷனே உபாஸிக்கத் தக்கவன். அல்லது ஆதித்யனை உபாஸிக்கலாம் என்று தோன்றும். ஆனால் அமிருத அபயாதி குணங்கள் அவர்களிடம் பொருந்தாது. ஆத்மாவினிடமே மிகப் பொருத்தமுள்ளதாக இருக்கிறது. ஆதலால் ஆத்மாவே கூறப்படுகிறது.

### स्थानादि व्यपदेशाच्च

### 14 ஸ்தாநாதி வ்யபதேசாச்ச

எங்கும் வியாபித்துள்ள பரமாத்மாவை மிகச் சிறிய இடமான கண்ணில் உபாஸிப்பது உசிதமா? எனில் நாமரூப மில்லாத பிரும்மத்திற்கு "உதிதி" என்ற நாமாவையுங் கூட அங்கு கூறுகிறது. உபாஸிப்பதற்கு ஓரிடம் காட்டவே அங்ஙன மமைந்தது. எங்குமுள்ள (வைகுண்டத்திலுள்ள) நாராயணனை சாளக்ராமத்தில் உபாஸி

---

பரஸ்த்ரீயை பரிஹாஸம் செய்தால் குருடாவர்

என்பதுபோல் அங்கு பிரும்மத்தைத்தான் உபாஸிக்கும் ப்டி ஶ்ருதி கூறுகிறது.

## सुखविशिष्टाभिधानादेव च

### 15 ஸுக விஶிஷ்டாபி தாநா தேவ ச

பிரும்மோபதேசம் பெறுவதற்காக உபகோஸலர் குருவை அடுத்து, அவர் பூஜித்துவரும் கார்ஹபத்யம் முதலிய அக்நிகளுக்கு ஶிரத்தையுடன் பணிவிடை செய்தார். அவை ஸந்தோஷமடைந்து அவருக்கு உபதேசம் செய்யும்போது பிரும்மம் ஸுகவடிவமானது என்று கூறியதால் ஸுக-ஆனந்தவடிவனை பரமாத்மாதான் கண்ணிலுள்ள புருஷனாக உபாஸிக்க வேண்டியவர். மேலும் தாமரை இலையில் நீர் ஒட்டாததுபோல் அக்ஷிபுருஷனை உபாஸிப்பவருக்குப் பாபம் ஒட்டாது என மேலே கூறுவதால் ஜநந மரண பாபத்தை அகற்றும் பிரும்மாதான் இங்கு கூறப்படுகிறவர்.

## श्रुतोपनिषत्क गत्यभिधानाच्च

### 16 ஶ்ருதோபநிஷத்க கத்யபிதாநாச்ச

உபநிஷத் விசாரம் செய்தவர் ஜோதிஸ்ஸால் வரவேற்கப்பட்டு உத்தராயணாதி தேவதைகளால் பிரும்மலோகம் செல்கிறார். மறுபடி பிறப்பதில்லை என்று பிரஶ்ந உபநிஷத்தும் கீதையும் கூறுவதுபோல் இங்கும் மேலே அக்ஷி புருஷ உபாஸகனுக்கு அர்ச்சிராதி மார்க்கமே கூறப்படுவதாலும் பிரும்மமே இங்கு உபாஸிக்கத் தக்கதாகக் கூறப்பட்டது.

## अनवस्थिते रसंभवाच्च नेतरः

### 17 அநவஸ்திதே ரஸம்பவாச்ச நேதர:

கண்ணிலுள்ள பிரதிபிம்பமே உபாஸிக்கத்தக்கதெனக் கூறினால் நாம் உபாஸிக்கும் போதெல்லாம் ஒருவரை

---

பக்ஷபாதப் பேச்சு பார்ஶ்வ வாயுவாகும்

எதிரில் உட்காரவைத்து அவர் கண்ணில் தோன்றும் பாபா-பிரதிபிம்பத்தை உபாஸிக்க வேண்டும். அதுவும் அழியக் கூடியது. ஆதலால் அங்ஙனம் உபாஸிப்பது உசிதமில்லை. அன்றியும் சாயா புருஷனிடம் அமிருதம் அபயம் முதலிய விசேஷங்கள் பொருந்தாது.

கண்ணில் காணப்படுகிறதே என்று பிரஸித்தமாகக் கூறியது உபாஸகனுக்கு உத்ஸாஹ மூட்டுவதற்காகவாம்.

## 5. அந்தர்யாம்யதிகரணம் 3 ஸூத்ரங்கள்.

अन्तर्याम्यधिदैवादिषु तद्धर्मव्यपदेशात्

18 அந்தர்யாம்யதி தைவாதிஷு தத்தர்மவ்யபதேஶாத்

பிருஹதாரண்யக உபநிஷத்தில் ஒருவன் இந்த லோகத்தையும் பரலோகத்தையும் ஸர்வ பூதங்களையும் அந்தர்யாமியாக இருந்து அடக்கி ஆள்கிறான் எனத் துவக்கி பிருதிவிக்குள்ளே இருக்கிறான். பிருதிவியை ஆள்கிறான். அவனைப் பிருதிவீ அறியாது. அவனே அந்தர்யாமி. ஆத்மா என்றவிடத்தில் அதி தைவதம், அதி லோகம், அதிவேதம், அதி யக்ஞம், அதி பூதம், அத்யாத்மம் எனக் கூறப்படுகிறது.

அப்படி எல்லாமாயிருப்பவர் ஒரு தேவனா? அணிமாதி ஸித்திகளைப் பெற்ற யோகியா? பரமாத்மாவா? என ஸந்தேஹம் உண்டாகிறது.

அந்தர்யாமி என்று ஒருவர் ப்ரஸித்தமாக இல்லை. மேலே அவருக்கு இருப்பிடம் மநஸ் முதலியன கூறப்படுவதால், ஒரு தேவனோ ஸித்திகளைப்பெற்ற யோகியோ தான் பொருள் மநம் வீடு முதலியவைகள் இல்லாததாலும் ஒருவரை அடக்கி ஆள, கை கால் முதலியன இல்லாததாலும் அவர் பரமாத்மாவாக இருக்க முடியாது எனில்?

---

தங்கத்தைத் திருடினால் சொத்தை நஷ்ட முண்டாகும்

பரமாத்மாதான் அங்கு கூறப்படுகிறவர். மேலே பிரும்மத்திற்கேற்ற தர்மங்கள் கூறப்படுகின்றன. அமிருதம் என்பதும் பிருதிவீ முதலியவைகளால் அறியப் படாதவன் என்பதும் பிரும்மத்தின் ஸ்வரூப மாகும். யாரை அடக்கி ஆள்கிருரோ அவரது கை கால்களைக் கொண்டே அவரை கர்மாக்களைச் செய்யும்படித் தூண்டு கிருர் எனப் பொருள்.

न च स्मार्तं अतद्धर्माभिलापात्

19 ந சஸ்மார்த்தம் அதத்தர்மாபிலாபாத்

ஸாங்க்ய மதத்தில் கூறப்பட்ட பிரதாநம் இங்கு சொன்ன பிருதிவி முதலியதால் அறியப்படாதது என்ற லக்ஷணம் பொருந்தி யிருப்பதால் அந்தர்யாமி பிர தானமே என்று கூறக்கூடாதோ எனில் அது ஒன்ரு லும் காணப்படாவிடினும் அது எல்லாவற்றையும் பார்க் கிறது என்று கூறப்படுவதால் அசேதநமான அது எப்படிப் பார்க்கும்?

शारीर श्चोभयेपिहि भेदेनैनमधीयते

20 ஶாரீரஶ்சோபயேபிஹி பேதேநைநமதீயதே

ஜீவனும் அந்தர்யாமி அல்ல. காண்வ மாத்யந்திந என்ற இரு உபநிஷத்துகளும் ஜீவனுக்குள்ளே அந்தர்யா மியாக இருக்கிருர். அவர் வேறு, ஜீவன் வேறு, என பேதங் கூறுகின்றன. அந்த ஜீவனும் பிரும்மமும் ஒன்ரு யினும் குடத்து நீரும் குளத்துநீரும் போல் பேதமுண்டு. உண்மையில் இரண்டும் ஒன்றுதான். இங்கு பரமாத்மா தான் கூறப்படுகிருர்.

---

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.



ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## 6. அத்ருஶ்யத்வாதி கரணம். 3. ஸூத்ரங்கள்.

### अदृश्यत्वादि गुणको धर्मोक्तेः

### 21 அத்ருஶ்யத்வாதி குணகோதர்மோக்தே:

முண்டகோபநிஷத்தில் — அதபரா எதனால் அக்ஷர நிர்குண ஸ்வரூபம் அடையப்படுமோ அது கூறப்படுகிறது எனத் துவக்கி அந்த அக்ஷரம் கண்ணுல் காண முடியாதது. கோத்ரம் வர்ணம் முதலியன இல்லாதது. அதையே ஸகல பூதங்களுக்கும் காரணம் என க்ஞானிகள் பார்க்கிறுர்கள் எனக் கூறப்படுகிறது. இங்கு உபாஸிக்கத் தக்கதாகக் கூறப்படும் பூதகாரணம் ப்ரதாநமா? அல்லது சரீரமுள்ள ஒரு ஜீவனு? பரப்ரும்மமா என ஸந்தேஹம்.

இதற்கு உதாஹரணமாக எட்டுக்கால் பூச்சி நூலைப் படைத்துத் தனக்குள்ளேயே ஒடுக்கிக் கொள்வது போலும், பூமி செடி கொடிகளைப்படைத்து அவை பூமியிலேயே முடிவடைவதுபோலும் எனக் காட்டப்படுகின்றன. ஷை பூச்சி பூமி இவை அசேதநமான வஸ்து. ஆதலால் அசேதநமான பிரதாநந்தான் உபாஸிக்கத் தக்கது என பூர்வபக்ஷம்.

ஸர்வக்ஞன் அவன் என மேலே பிரும்ம தர்மங்கள் கூறப்படுவதால் பூதங்களுக்குக் காரணம் என பிரும்மமே உபாஸிக்கத் தக்கது. ஜடமான ப்ரதாநத்திற்கு ஸர்வக்ஞ ஶக்தி இல்லை.

---

அது கல்லிலெழுதியது போலாம்

विशेषण भेदव्य च देशाभ्यां च नेतरौ

22 விஶேஷண பேதவ்ய ச தேஶாப்யாஞ்ச நேதரௌ.

மேலே பூதங்களுக்கு காரணமானவன். திவ்ய புருஷன். உடலில்லாதவன் எனக் கூறுவதாலும், அக்ஷரம் எனும் பிரகிருதிக்கு மேலானவன் என பேதத்தைக்காட்டி இருப்பதாலும் ஜீவனோ பிரதானமோ பூதகாரணமல்ல. ஆதலால் அவை உபாஸிக்கத் தக்கவைகளுமல்ல.

रूपोपन्यासाच्च

23 ரூபோபன்யாஸாச்ச.

அன்றியும் இவரிடமிருந்து பிராணிகள் உண்டாயின என்று கூறி மேலும் அந்த பூதகாரணமானவருக்கு அக்நி-தலை, சந்த்ர ஸூர்யர்-கண்கள், திக்குகள் - காது என ரூபத்தைக் கூறுவதால் அது ஸர்வ ரூபியான பரமாத்மாவினிடமே பொருந்தும்.

## 7 வைஶ்வா நராதிகரணம். 9 ஸூத்ரமுள்ளது.

वैश्वानरः साधारण शब्दविशेषात्

24 வைஶ்வாநரஸ் ஸாதாரண ஶப்தவிஶேஷாத்.

சாந்தோக்ய உபநிஷத்தில் யார் ஆத்மா? என ஆரம்பித்து வைஶ்வாநர உபாஸனை கூறப்படுகிறது. வைஶ்வாநர என்ற ஶப்தம், அக்நிக்கும் அக்னியின் அதிஷ்டான தேவதைக்கும் நமது வயிற்றிலிருந்து உணவை ஜீரணம் செய்யும் ஜாடராக்நிக்கும் ஜீவனுக்கும் பிரும்மத்திற்கும் பொதுவானதாகும். ஆதலால் யாரை உபாஸிப்பது? என்ற ஸந்தேஹம் தோன்றுகிறது. வைஶ்வாநர என்பது பொதுவான பெயராயினும் ஆத்மாவினிடம் விஶேஷமாக அமைவதால் வைஶ்வாநரன் பரமாத்மா என்றே உபாஸிக்க வேண்டும். அந்த வைஶ்வாநர ஆத்மாவுக்கு

---

மூர்த்தா ஸுதேஜஸ் எனக் காணப்படுவதால் வைஸ்வாநர ஶப்தம் பிரும்மத்தையே விஶேஷமாகக் கூறுவது பொருத்தமாகும்.

## स्मर्यमाण मनुमानं स्यादिति

25 ஸ்மர்ய மாண மநுமாநம் ஸ்யாதிதி.

எவருக்கு அக்நி-வாயோ, த்யுலோகம் - தலையோ, ஆகாஶம்-நாபியோ, பூமி-காலோ, ஸூர்யன்-கண்ணோ, திக்குகள்-காதோ லோகவடிவனை அவருக்கு நமஸ்காரம் என்ற ஸ்மிருதிவாக்யம் வைஶ்வாநரன் பரமாத்மா என அநுமாநத்தாலும் இது நிச்சயமாகிறது.

## शब्दादिभ्योन्तः प्रतिष्ठानाच्च नेतिचेन्नतथा दृष्ट्युपदेशात् असंभवात् पुरुषमपि चैनमधीयते ।

26 ஶப்தா திப்யோந்த: ப்ரதிஷ்டாநாச்ச நேதி சேந்நததா த்ருஷ்ட்யுபதேசாத் அஸம்பவாத் புருஷமபி சைந மதீயதே.

வைஶ்வாநர என்ற ஶப்தம் மிக ஸுப்ரஸித்தமாக அக்நியைத்தான் கூறும். அதில் பிரும்ம ப்ரதிஷ்டிதம் என்றும் கூறப்படுவதால் இங்கு பரமாத்மோபாஸநம் கூறப்படவில்லை எனில் அப்படியல்ல. அக்னியை பரமாத்மாவாக உபாஸி என்பது மநதை பிரும்மமென உபாஸி எனக் கூறுவதுபோலாகும். ஆதலால் பரமாத்மா தான் இதன் பொருள். அக்நிக்குத் தலை ஸுதேஜஸ் என்பது அக்நி எனக் கூறினல் பொருந்தாது. அன்றியும் அந்த வைஶ்வாநரனிடம் அமைந்துள்ள புருஷனை உபாஸி என்பதால் அக்நி உபாஸனை யல்ல இங்குரைப்பது.

---

அது நீர்மேல் எழுத்துப் போலாம்

अत एव न देवता भूतं च

27 அத ஏவ ந தேவ்தா பூதஞ் ச.

முற்கூறிய காரணத்தால் பஞ்சபூதத்தில் ஒன்ருன அக்நியோ அல்லது அதன் அதிஷ்டான தேவதையோ இங்கு கூறப்படவில்லை. ஆத்மாதான் கூறப்படுவது.

साक्षादप्यविरोधं जैमिनिः

28 ஸாக்ஷாதப்ய விரோதம் ஜைமிநி:

வைஶ்வாநரனே ஆத்மா என்று உபாஸிப்பதிலும் விரோதமில்லை என ஜைமிநி நினைக்கிருர்.

அக்னியில் பிரதிஷ்டிதனுக இருக்கிறேன். ஆத்மா என்பது மரத்தில் கிளை ப்ரதிஷ்டிதமாக இருக்கிறது என்பது போலாகும். அக்நியின் வயிற்றில் ஆத்மா பிரதிஷ்டிதமெனக் கருத அவச்யமில்லை.

अभिव्यक्ते रित्याश्मरथ्यः

29 அபி வ்யக்தே ரித்யாஶ்மரத்ய:

ஆகாஶம் பூமி இரண்டிற்குமிடையே உள்ள ப்ரதேசத்திலிருக்கிருர் ஆத்மா என்பது எப்படிப் பொருந்தும்? எனில், ஆத்மா எங்குமிருந்தாலும் நமது ஹ்ருதய ஆகாஶத்தில் பிரகாசிப்பதுபோல் அங்கு வ்யக்தமாகத் தெரிகிருர் ஆதலால் குற்றமில்லை என ஆஶ்மரத்யர் கூறுகிருர்.

अनुस्मृतेर्बादरिः

30 அநுஸ் மிருதேர் பாதரி:

ப்ராதேசமென்ற ப்ரதேசத்தில் ஆத்மாவை நினைப்பதால் ப்ராதேச மாத்ரன் எனக் கூறுவது குற்றமில்லை என பாதரி முநிவர் கூறுகிருர். ஒருபடி அளவுள்ள தான்யத்தை அது ஒருபடி என்றே கூறுவதுபோலாகும்.

---

பிறர்க்கு உபதேசிப்பதில் சிலர் பண்டிதர்

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி

ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## संपत्तेरिति जैमिनिः तथाहि दर्शयति

**31 ஸம்பத்தேரிதி ஜைமிநி: ததாஹி தர்ஶயதி**

மற்றோர் உபநிஷத்திலும் ஆத்மா ப்ராதேசமாத்ரன் என அவரவயவங்களை வர்ணிப்பதால் அது ஸம்பத்தி நிமித்தம் பொருத்தமுள்ளதே என ஜைமிநி அதைக் கூறுகிறார்

## आमनन्ति चैनमस्मिन्

**32 ஆமநந்தி சைந மஸ்மின்**

ஜாபால உபநிஷத்தில் அநந்தனை ஆத்மா அவிமுக்தத்தில் பிரதிஷ்டிதன் என ஆரம்பித்து புருவத்தின் இடை என்ற ப்ராதேசத்தில் பிரதிஷ்டிதன் என்று வர்ணிப்பதால் வைச்வாநரன் என்பது ஆத்மாதான் என்றே உபாஸிக்க வேண்டும்.

*முதல் அத்யாயம் 2-ம் பாதம் முற்றிற்று.*

## முதலத்யாயம் மூன்றும் பாதம்.

**த்யுப்வாத்யதிகரணம். 7-ஸூத்ரம்.**

## द्युभ्वाद्यायतनं स्वशब्दात्

**33. த்யுப்வாத்யாயதநம் ஸ்வ ஶப்தாத்.**

எதனிடம் த்யௌ: ப்ருதிவீ அந்தரிக்ஷம் முதலியன மனதுடனிருக்கின்றனவோ அவ் வொன்றையே அறி. மற்ற வாக்குகளை விடு. அது அமிருத ஸேது என்று கூறப்படுகிறது. இங்கு அறியவேண்டுமெனப்படுவது

---

ஆலயமெனில் இருப்பிடமென அர்த்தம்

பிரதாநமா? ஜீவனா? ஆத்மாவா என ஸந்தேஹம். அந்த ஆத்மாவை என்று ஸ்வஸப்தம் கூறப்பட்டு இருப்பதால் ஆத்மாவைத்தான் அறியவேண்டும்.

## मुक्तोपसृप्य व्यपदेशात्

34 முக்தோப ஸ்ருப்ய வ்யபதேசாத்.

முக்தி அடைபவன் பெறவேண்டிய இடமது என்று மேலே கூறப்படுவதால் ஆத்மாதான் அறியத்தக்கது.

## नानुमान मतच्छब्दात्

35 நாநுமாந மதச் சப்தாத்.

அநுமானத்தா லறியத் தக்க பிரதாநமே இங்கு அறியத்தக்கதெனக்கூருததால் ஆத்மாவே அறியத்தக்கது.

## प्राणभृच्च

36 ப்ராண பிருச்ச.

த்யு லோகம் முதலியவற்றிற்கு இருப்பிடமானது ஒரு ஜீவனுமல்ல. ஜீவனும், ஸர்வக்ஞன் ஆத்மா என்று கூறப்பட்டபடி ஸர்வக்ஞனில்லாததால் ஜீவனு மறியத் தக்கவனல்ல.

## भेदव्यपदेशात्

37 பேத வ்யபதேசாத்.

ஜீவனை நோக்கி உன்னைவிட வேருன அவனை உபாஸி எனக் கூறப்படுவதால் ஜீவனு மிங்கு கூறப்படவில்லை.

## प्रकरणाच्च

38 ப்ரகரணச்ச.

எதை அறிந்தால் எல்லாமறிந்ததாகும் என ஆத்மாவைப்பற்றிய ப்ரகரணமானதால் ஆத்மாவே அறியத் தக்கவன்.

---

மஹாலயச்ராத்தம் ஸர்வ க்ஷேமத்தைத் தரும்

स्थित्य दनाभ्यांश्च

39 ஸ்தித்யதநாபியாஞ்ச:

உடலெனும் மரத்திலே இரு ஸ்வர்ண பக்ஷிகள் இருக்கின்றன என்றும் ஆத்மா ஒன்றையும் அனுபவிக்காமல் இருப்பதாகவும் ஜீவன் கர்ம பலனை புஜிக்கிறான் எனவும் கூறுவதாலும் அறியத்தக்கது பிரும்மமே.

2 பூமாதி கரணம். 2 ஸூத்ரம்.

भूमासंप्रसादा दध्युपदेशात्

40 பூமாஸம்ப்ரஸாதாதத்யுப தேஶாத்.

சாந்தோக்யத்தில் பூமாவே அறியத்தக்கது என்ற விடத்தில் எங்கும் வியாபகமாக உள்ள ப்ராணனே உபாஸிக்கத்தக்கதா? ஆத்மாவா? என ஸந்தேஹம். ஜீவன் அதனிடம் சேர்ந்து தெளிவுள்ளதாக இருக்கிறது என்று மேலே கூறப்படுவதாலும் அந்த ப்ராணனின் மீது இருப்பதாகக் கூறுவதாலும் ஆத்மாதானிங்கு அறியத்தக்கது.

धर्मोपपत्तेश्च

41 தர்மோப பத்தேஶ்ச.

அதனிடம் ஒரு வ்யவஹாரமும் இல்லை என வர்ணிக்கப்படுகிறது. ஆத்மதர்மந்தானங்கு பொருந்துகிறது.

3 அக்ஷராதிகரணம் 3 ஸூத்ரம்.

अक्षर मंबरान्त धृतेः

42 அக்ஷரமம்பராந்த த்ருதே:

கார்கியை நோக்கி யாக்ஞ்யவல்க்யர் இதுதான் அந்த அக்ஷரமென பிராம்மணர் கூறுகிறார்கள் எனச் சொல்கிறார். அந்த அக்ஷரமென்பது எழுத்தா? ஆத்மாவா? என்று ஸந்தேஹம்.

---

புத்ரனில்லாத விதவையுமதைச் செய்ய வேண்டும்

அந்த அக்ஷரத்தில் ஆகாஸம் குறுக்கும் நெடுக்கும் பின்னப்பட்டது போலிருக்கிறது என மேலே கூறுவதால் ஆத்மாதான் இங்கு கூறப்பட்டது.

## साच प्रशासनात्

### 43 ஸாச ப்ரஸாஸநாத்

பூமி முதல் ஆகாஸம்வரையிலுள்ள எல்லாவற்றையும் தரிப்பது இந்த அக்ஷரத்தின் ஆக்ஞையால் எனக் கூறப்படுவதால் அசேதநமான பிரதாநமோ சாதாரண எழுத்திற்கு இது முடியாது. ஆதலால் அக்ஷரமென்பது பிரும்மமே யாகும்.

## अन्य भाव व्यावृत्तेश्च

### 44 அன்யபாவ வ்யாவிருத்தேஸ்ச

ஆக்ஞை இடுவது பார்ப்பது கேட்பது முதலியவை மற்றவைகளுக்குக் கிடையாது. ஆத்மாவிற்குத்தானுண்டு எனக் கூறப்படுவதால் அக்ஷரமென்பது பிரும்மமே.

## 4 ஈக்ஷதி கர்மவ்யபதேசாதி கரணம்.

## ईक्षति कर्मव्यप देशात् सः

### 45 ஈக்ஷதிகர்ம வ்யபதேசாத் ஸ:

ப்ரஸ்நோபநிஷத்தில் 'ஏதத்வை ஸத்யகாம' என துவக்கி 'த்ரிமாத்ரேண ஓமித் 'யே தே நைவ அக்ஷரேண பரமபுருஷமபித்யாயீத'' என ஒரு உபாஸனை கூறப்படுகிறது. இங்கு பரம் அபரம் என காணப்படுவதாலும் அதற்குப்பலமாக உபாஸகன் பிரும்மலோகம் செல்வான் எனக்கூறப்படுவதாலும் சதுர்முகப்பிரும்மா உபாஸிக்கத்தக்கவர் எனத் தோற்றும். ஆனால் பிரணவத்தால் உபாஸிக்கத்தக்கவன் பரமாத்மாதான். பின்னர் '' புருஷம் ஈக்ஷதே '' என்று பார்க்கிறது. என்ற கார்யம் கூறப்படுவதால் த்யாநம் செய்பவனே பிரும்மஸ்வரூபத்தைப் பார்க்கவேண்டும். பிரும்மலோகத்திலிருந்து க்ரம முக்தி அடையவே பிரும்மலோக ப்ராப்தி கூறுவதாலும் உபாஸிக்கத்தக்கது பிரும்மமே ஆகும். ஹிரண்ய கர்ப்பனல்ல.

---

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

—:o:—

ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## 5 தஹராதிகரணம் – 8 ஸூத்ரம்.

### दहर उत्तरेभ्यः

46 தஹர உத்தரேப்ய:

சாந்தோக்ய உபநிஷத்தில் "ப்ரஹ்மபுரேதஹரம் புண்டரீகம் வேஶ்மதஹரேऽஸ்மிந்நராகாஶ:" என்று ஒரு உபாஸனை உள்ளது. நமது உடலில் ஹ்ருதய புண்டரீகத்திலுள்ள ஆகாஶத்தை உபாஸிக்க வேண்டுமென்பதால் ஆகாஶமென்பது ஐந்து பூதங்களில் ஒன்றுன ஆகாஶத்தை உபாஸிப்பதா? அல்லது பரமாத்மாவை உபாஸிப்பதா? என ஸந்தேஹம். ஆகாஶமென்ற ஶப்தம் பூதாகாஶம் என்றே ப்ரஸித்தமானதால் ஆகாஶமே உபாஸிக்கத் தக்கது எனத் தோன்றும். ஆனல் ஆகாஶம் பூமி எல்லாம் இந்த ஆகாஶத்தில் அடங்கியுள்ளது. அது குற்றமற்ற ஆத்மா என மேலே வர்ணிப்பதால் பரமாத்மாதான் உபாஸிக்கத்தக்கது. ஆகாஶமல்ல.

### गति शब्दाभ्यां तथाहि दृष्टं लिंगं च

47 கதி ஶப்தாப்யாம் ததாஹித்ருஷ்டம் லிங்கஞ் ச ||

ப்ரஜைகள் தினந்தோறும் இந்த பிரும்மலோகத்தை அடைந்தாலும் பிரும்மத்தை அறிவதில்லை என்று மேலே கூறப்பட்டிருப்பதால் தூக்கத்தில் ஜீவன் தஹராகாரமான ஆத்மாவையே அடைகின்றுன். பிரும்மம் என்ற

---

ஶப்தமும் கதியும் கூறப்படுவதால் பிரும்மமே உபாஸிக்கத்தக்கது. அன்றியும் நித்யம் காம் பிரும்மலோகம் போகவில்லை. லோக ஸ்வரூபியான ஆத்மாவை அடைவதாலும் அதற்கேற்ற பிரமாண மிருப்பதாலும் பரப்ரும்மமே ஆகாஶமாக உபாஸிக்கத் தக்கது.

## धृतेश्च महिम्नोस्य अस्मिन्नुपलब्धेः

48 த்ருதேஶ்ச மஹிம்நோஸ்ய அஸ்மிந்நு பலப்தே:

ஆகாஶத்தை உபமானமாகக் காட்டி உலகமழியாமல் அதை தரிக்கிறது எனக் கூறப்படுவதாலும் அவனது மஹிமை வர்ணிக்கப்படுவதாலும் பரமாத்மாவையே உபாஸிக்கவேண்டும்.

## प्रसिद्धेश्च

49 ப்ரஸித்தேஶ்ச ॥

பல இடங்களில் ஆத்மாவுக்கு ஆகாஶமென்ற பெயர் பிரஸித்தமாக இருக்கின்றது உபநிஷத்துக்களில்.

## इतर परामर्शात् स इतिचेन्न संभवात्

50 இதர பராமர்ஶாத்ஸ இதிசேந்ந அஸம்பவாத் ॥

மேலே உள்ள வாக்யங்களைக் கொண்டு பிரும்மம் என நிர்ணயிப்பதானல் மற்றும் மேலேயுள்ள சில வாக்யங்கள் ஜீவனைப்பற்றியுங் காணப்படுவதால் பூதாகாஶமில்லாவிடினும் ஆகாஶத்திலுள்ள ஹிரண்யகர்ப்பஜீவனை உபாஸிக்கும்படி இங்குக் கூறப்பட்டது எனக் கூறலாம் எனில் முடியாது. புத்தியுடன் கூடிய ஜீவன் மிகச் சிறியதாதலால் ஆகாஶத்திற்கு ஸமமானவன் என்ற பெயரும் குற்றமற்ற பரமாத்மா என அவனிடம் பெயர் பொருந்தாது வேறெங்கும்.

---

## उत्तरा चेदाविर्भावस्वरूपस्तु

### 51 உத்தராஸ்சே தாவிர்பாவ ஸ்வரூபஸ்து

தஹரோ பாவனையில் மேலே காணப்படும் சில உப நிஷத்வாக்யங்கள், ஜாக்ரதவஸ்தையில் பாபமில்லாதவன் முதலிய சில ஜீவ குணங்கள் கூறப்பட்டிருப்பதால் ஜீவனே உபாஸிக்கத்தக்கவனென ஏன் கொள்ளக்கூடாது எனில் ஜீவன் பரமாத்ம ஸ்வரூபமான பின் அந்த ஆத்ம குணங்கள் ஜீவனுக்குக் கூறப்படுவதால் ஆத்மாவே உபா ஸிக்கத்தக்கவன்.

( இங்கு ஆதி ஆசார்யாள் மறுபடியும் மறுபடியும் இந்த பூர்வ பக்ஷம், அமிருதத்தை அளித்தவுடன் இறந்த வன் எழுந்து வருவது போல் மறுபடியும் தோன்றுகிறது, என்று வேடிக்கையாகக் கூறுகிறார்.

## अन्यार्थश्च परामर्शः

### 52. அன்யார்த்தஸ் ச பராமர்ஸ:

தஹர வித்யையில் ஆத்மாவையே உபாஸிக்க வேண்டுமென்றால் அங்கு ஸம்ப்ரஸாத: என்று ஜீவனைப் பற்றிக் கூறி இருப்பது வீணல்லவா? எனில் வீணில்லை, ஜீவன் ஜாக்ரத்வஸ்தையில் ஶரீராபிமானியாக இருக்கிறானல்லவா? அதை விட்டு ஸுஷுப்தியில் ஆத்ம ஜோதிஸ்ஸுடன் சேருகிறான் என்பதற்காகக் கூறப்பட்டது. ஸம்ப்ரஸாத என்றஸுப்தம்.

## अल्प श्रुतेरितिचेत् तदुक्तम् ॥

### 53. அல்பஶ்ருதேரிதிசேத்ததுக்தம்

மிகப் பெரிய பரமாத்மா மிகச் சிறிய [illegible] ஹ்ருதய ஆகாஶத்தில் எப்படி அடங்கும்! எனில் எங்கு மிருப்பவரை ஹிருதய ஆகாஶத்திலும் இருப்பதாக

உபாஸிக்கலாம். அரண்மனையில் ஓரிடத்தில் இருக்கும் அரசனை ராஜதானியில் இருக்கிறார் என வில்லையா?

## 6 அநுக்ருத்யதிகரணம் – 2 ஸூத்ரம்

### अनुकृते स्तस्य च

### 54. அநுக்ருதேஸ்தஸ்ய ச

அங்கு ஸூர்யன் சந்த்ரன் நக்ஷத்ரம் மின்னல் முதலியவைகளே பிரகாசிப்பதில்லை. இந்த அக்நியா ப்ரகாசிக்கப்போகிறது? பிரகாசமான அந்த வஸ்துவை அநுஸரித்தே எல்லாம் பிரகாசிக்கின்றன. அதனுடைய காந்தியால் தான் எல்லாவற்றிற்கும் பிரகாசம் உண்டாகிறது, (முண்டகோபநிஷத்). அந்த வஸ்து ஸூர்யமண்டலாதிகளை விட விசேஷமான ஒரு தாது மண்டலமா? அல்லது பரமாத்மாவா என ஸந்தேஹம் உண்டாகிறது.

ஆத்மா ஸ்வயம் ஜோதிஸ்ஸாக பிரகாசிக்கிறார். அவரைத் தொடர்ந்து மற்றவை பிரகாசிக்கின்றன. போகிறவனை அநுஸரித்துப் போகிறான் என்ற விடத்தில் முதலில் கூறப்பட்டவன் போகிறவனாக இருக்கவேண்டும் அல்லவா? அதைப்போல் ஆத்மாதான் பிரகாசமானது. ஆத்ம காந்தியால் தான் மற்றவைகள் பிரகாசிக்கின்றன என்பதே பொருத்தமானது.

### अपिच स्मर्यते

### 55. அபி ச ஸ்மர்யதே

மேலும், "ந தத் பாஸயதே ஸூர்ய:" ஸூர்யன் சந்த்ரன் அக்நி இவை எங்கு சென்று திரும்புகின்றனவோ! அந்த பரஞ்ஜோதிஸ் என்னுடையதென்றும்; சந்த்ர ஸூர்யாக்நிகளிடமுள்ள தேஜஸ் என்னுடையது என பகவான் கீதையில் கூறுவதாலும் அந்த ஜோதிஸ் ஆத்ம ஜோதிஸ்ஸேயாம்.

---

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## 7. ப்ரமிதாதிகரணம்–2 ஸூத்ரம்.

### शब्दादेव प्रमितः

56 ஶப்தாதேவ ப்ரமித:

அங்குஷ்டமாத்ரனை புருஷன் சரீரத்தின் நடுவில் இருக்கிறான். அவன் புகையில்லா ஜோதிஸ் போலிருக்கிறான். உலகில் உண்டானது உண்டாகப்போவது முதலிய எல்லாவற்றிற்கும் அவன் ஈசானன்; என்று காணப்படும் உபநிஷத் வாக்யத்தில் கட்டைவிரல் அளவு என்று இருப்பதாலும் அங்குஷ்டமாத்ரமான ஜீவனை யமன்கொண்டு செல்கிறான் எனப்புராணம் கூறுவதாலும் ஜீவனே அங்கு வர்ணிக்கப்படுகிறான் என்பது பூர்வபக்ஷம்.

கட்டை விரல் அளவுள்ளவன் ஜீவன் என்பது உண்மையானாலும் அதனருகிலுள்ள "ஈஶானோ பூதபவ்யஸ்ய" என்ற வேத வாக்யம் ஜீவனிடம் பொருந்தாது. ஆத்மாவிடமே பொருந்தும்.

### हृद्यपेक्षया तु मनुष्याधिकारत्वात्

57. ஹ்ருத்ய பேக்ஷயா து மநுஷ்யாதிகாரத்வாத்.

எங்கும் நிறைந்துள்ள ஆத்மாவை அங்குஷ்டமாத்ரம் என்று கூறுவதேன்? அன்றியும் ஜீவாத்மாக்களின் ஹ்ருதயம் ஒரே அளவுள்ளதாக இல்லை. பெரிதும் சிறிதுமாக இருக்கும். ஆதலால் அங்குஷ்டமாத்ரன் என்பதெப்படிப் பொருந்தும்? எனில்

---

உபாஸனை என்பது மநுஷ்யர்களை உத்தேசித்தே தோன்றியது. மிருகங்களுக்கோ ஸுராஸுரர்களுக்கோ ஏற்பட்டதில்லை. பெரும்பாலும், மனிதர்களது ஹ்ருதயம் ஒரே அளவுள்ளதாகவே இருக்கும். அதில் அங்குஷ்ட மாத்ரனாக ஆத்மா இருக்கிறான் என்பது ஜீவாத்மாவை பரமாத்மாவாக உபாஸிப்பதற்காகக் கூறப்படுவதாம்.

## 8 தேவதாதிகரணம் — 8 ஸூத்ரம்.

तदुपर्यपि बादरायणः संभवात्

58 ததுபர்யபி பாதராயண: ஸம்பவாத்.

உபாஸனை மனிதர்க்கு மேலான தேவர்களுக்கும் பொருந்தும் என பாதராயணர் அபிப்ராயப்படுகிறார். உபாஸனைக்கு வேண்டிய ஸாமர்த்யம், விருப்பம், முன் ஜன்ம வாஸனையால்தோன்றும். வேதம் முதலியன இருப்பதால் அங்குஷ்டமாத்ரமாக பிரும்ம உபாஸநம் அவர்களுக்கும் உண்டு. நமது உடலை விடப்பெரிய ஶரீரமுள்ளவராயினும் அந்த அளவுள்ள அங்குஷ்டமாத்ரனை உபாஸிக்கலாம். தேவர்களுக்கு அவர்களே தேவரானதால் இதர தேவதைகளில்லாததாலும் கர்மாவில் அதிகாரம் இல்லை. தேவர்களுக்கு ஶரீரமுண்டென வேதம் கூறுகிறது.

विरोधः कर्मणीति चेन्न अनेक प्रतिपत्ते दर्शनात्

59. விரோத: கர்மணீதி சேந்ந அநேக ப்ரதிபத்தேர் தர்ஶநாத்.

பல இடங்களில் யாகம் நடப்பதால் தேவதைகள் எந்த யாகத்திற்குப் போவர்? ஆதலால் ஸ்வாஹாந்த ஶப்தமே தான் ரூபம் என்பது ஒரு ஸித்தாந்தம். அப்படி அல்ல, பிருஹதாரண்யகத்தில் எத்தனை தேவதை? என்று

3 பானைகளைத் தலையில் வைத்துக்கொண்டு விழாமல்

கேட்டு 3 – 303—3003 என வர்ணித்து 33 ரூபமே 3003 ஆகிறதெனக் கூறுவதாலும், அநேகர் ஒருவரை ஏககாலத்தில் நமஸ்கரிக்கலாமாதலாலும் தேவதைகளுக்கு சரீரமுண்டு. உபாஸனையிலீடுபடலாம்.

## शब्द इति चेन्नातः प्रभवात् प्रत्यक्षानु मानाभ्यां

60 ஶப்த இதி சேந்நஅத: ப்ரபவாத் ப்ரத்யக்ஷ அநுமாநாப்யாம்

தேவதைகளுக்கு ஶரீரமிருப்பதாக ஒத்துக்கொண்டால் யாக கர்மாவில் விரோதமில்லாவிடினும் வேத ஶப்தத்தில் விரோதமேற்படுகிறது. வேதம் நித்யமானது. தேவர்களது சரீரம் உண்டானால் அழிவது நிச்சயம். அழியக்கூடிய அநித்யத்தைக் கூறுகிறது நித்யமான வேதம் என்ற விரோதம் ஏற்படுகிறதே! என்று ஸந்தேஹம் தோன்ற இந்த ஸூத்ரம் பரிகாரம் கூறுகிறது.

வேதத்திலும் விரோதமில்லை. எப்படி? அந்த வேத ஶப்தத்திலிருந்தே ஸகல உலகமும் தேவரும் உண்டாகின்றனர். உலக மழிந்தாலும் வேதமழிவதில்லை. வேத சப்தத்திற்கும் அதன் அர்த்தத்தை விளக்கும் தேவதைகளின் ஆகிருதிக்குமுள்ள ஸம்பந்தம் நித்யமானதால் விரோதமில்லை. உலக ஆக்ருதி நித்யம். வ்யக்திதான் அழியும். ஒருபானை உடைந்தாலும் பானை என்று கூறினால் பானை இப்படி இருக்கும் என்ற நினைவு அழிவதில்லை. இதர ப்ரமாணத்தை அபேக்ஷிக்காமல், தானே ஸ்வத: ப்ரமாணமாக இருப்பதால் வேதத்திற்கு ப்ரத்யக்ஷமென்றும் வேதத்தைத் தழுவியே ப்ரமாணமானதால் ஸ்மிருதிக்கு அநுமாநம் என்றும் பெயரிடப்பட்டுள்ளது. வேதத்தாலும் ஸ்மிருதிகளாலும் உலகம் வேதசப்தத்திலிருந்தே படைக்கப்பட்டதெனக் கூறப்படுகின்றன.

# अत एव च नित्यत्वम्

## 61 அத ஏவ ச நித்யத்வம்

தேவதைகளை உண்டுபண்ணியதால் வேதமும் கூட ஒரு ஸமயம் உண்டானதோ என்ற ஸந்தேஹத்தை அகற்றி வேதம் நித்யம் என்பதை ஸ்தாபிக்கிறது இந்த ஸூத்ரம். ஒவ்வோர் கல்பத்திலும் அழிந்து போகும் உலகை ஸ்ருஷ்டிக்கக் காரணமாயிருப்பதால் வேதம் நித்யமேயாகும். இதைச் செய்தவர் ஒருவருமில்லாததால் இது அபௌருஷேயமென ஸித்தம். அதை த்ருடப் படுத்துகிறது இது.

# समान नाम रूपत्वाच्च आवृत्तावप्यविरोधः दर्शनात्स्मृतेश्च

## 62 ஸமாந நாமரூபத்வாச்ச ஆவிருத்தாவப்ய விரோத: தர்ஶநாத் ஸ்மிருதேஶ்ச

மஹா ப்ரளய காலத்தில் ரூபம் ஆக்ருதியெல்லாமழிவதால் அநித்ய வஸ்துவைக் கூறும் நித்ய வேத ஶப்தத்துடன் விரோதமிருக்கின்றதே எனத் தோன்ற, விரோதமில்லை எனக்கூறுகிறது இந்த ஸூத்ரம். தூங்குவது, விழித்துக் கொள்வது இரவு பகல். இதுபோலாகும் ப்ரளயமும் ஸ்ருஷ்டியும். தூங்குவதற்கு முன்னிருந்த விஷயத்தின் நினைவு எழுந்தவுடன் உண்டாவது போல் ஆகிருதி அழியாமலிருக்கிறது. முன் கல்பத்திலிருந்தது போலவே நாமரூபம் இந்த கல்பத்தில் ஸமாநமாகவே இருப்பதால் எத்தனை ப்ரளயம் வந்தாலும் ஆக்ருதி அவித்யைபோல் அழிவதில்லை.

ஸம்ஸ்கார வடிவமாக ப்ரபஞ்சமெல்லாம் அவித்யையில் லயமாகின்றன. மறுபடி அதேபோல் உண்டாகின்றன. பலமுறை தோன்றும் ஸ்ருஷ்டிகளில் பூர்வகல்பத்திலிருந்தபடியே பிரும்மா படைக்கிறார் என்று வேதமும் ஸ்மிருதிகளும் கூறுகின்றன.

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## मध्वादिष्वनधिकारं जैमिनिः

### 63 மத்வாதிஷ்வநதிகாரம் ஜைமிநி:

தேவதைகளுக்குக் கர்மாவில் அதிகாரமிருந்தாலும் இந்த ஆதித்யனை தேவ மதுவாக உபாஸி, எனக்கூறும் பிரும்ம வித்யைகளில் அதிகாரமில்லை, ஏன்? ஸூர்யனே ஸூர்யனை அப்படி உபாஸிக்க முடியாது, என்கிறார் ஜைமினி முனிவர்.

## ज्योतिषि भावाच्च

### 64 ஜ்யோதிஷி பாவாச்ச

ஆதித்யன் என்ற சொல்லும் பொருளும் ஸூர்ய மண்டலத்திலேயே பிரஸித்தமாக இருக்கிறது. அது அசேதநமானது. அதில் உருவத்துடன் ஒரு தேவதை இருக்கிறார் என்பது போன்ற மந்திரம் வேறு அர்த்த முள்ளதாகும். ஆதலால் மதுவித்யை போன்ற பிரும்ம வித்யைகளில் தேவர்களுக்கு அதிகாரமில்லை. என ஜைமினியின் கொள்கை.

## भावं तु बादरायणोऽस्ति हि

### 65 பாவந்து பாதராய ணோஸ்திஹி

முன்னிரு ஸூத்ரங்கள் ஜைமினி முனிவரின் அபிப்ரா யம் என்று கூறி அதை மறுத்துத் தன் அபிப்ராயத் தைக் கூறுகிறார் வியாஸர்.

மது வித்யையில் ஆதித்யனுக்கு அதிகார மில்லை என்பதற்காகத் தேவர்களுக்கே பிரும்மவித்யையில் அதிகாரமில்லை எனக் கூறமுடியாது. நிர்குண பிரும்ம

---

காண்டக் கூடாது. அது அசுத்தமாம்

வித்யையில் அதிகார முண்டு. ஸூர்யமண்டலம் அசேதந மாயினும் அதற்குள் தேவஶரீரம் பொருந்தியவர் இருப்ப தால் அந்த மந்த்ரத்திற்கு வேறு பொருள் கூறுவது பொருந்தாது. ஆதலால் ஸூர்யனுக்கும் மற்ற தேவர் களுக்கும் பிரும்ம வித்யையில் அதிகாரமுண்டு. மது வித்யையில் ஆதித்யனுக்கு அதிகாரமில்லை.

## 9. அபஶூத்ராதிகரணம்—5 ஸூத்ரம்.

शुगस्य तदनादर श्रवणात्तदा द्रवणात्सूच्यते हि

66 ஶுகஸ்ய ததநாதர ஶ்ரவணாத்ததா த்ரவணாத் ஸூச்யதே ஹி ॥

சாந்தோக்ய உபநிஷத்தில் ஸம்வர்க்க வித்யா ப்ரகர ணத்தில் ஜாநஶ்ருதி என்பவனை நோக்கி, ரைக்வர் எனும் குரு, அடே ஶூத்ரா! நீ கொடுத்த காணிக்கை கோ, உன்னிடமே இருக்கட்டும் என்றார்.

ஆதலால் பிரும்மவித்யையில் அவர்களுக்கும் அதி காரமுண்டோ? என ஸந்தேஹம். பிரும்மோபதேசம் உபநயநம் ஆனவர்க்கே உபநிஷத் ரூபமான பிரும்ம வித்தையில் அதிகாரமுண்டு. மற்றவர்க்கில்லை.

அன்றியும் ஜாநஶ்ருதி என்ற க்ஷத்ரியனைப் பார்த்து ஹம்ஸ ரூபமான தேவர்கள் ரைக்வரை விட இவன் தாழ்ந் தவன் எனக் கூறியதால் அவனுக்குத் தன்னிடம் அநாதரவு தோன்றி அதனால் ஶுக் - துக்கம் ஏற்பட்டது. அதைத் தான் அறிந்திருப்பதையும் அந்த ஶுக்-துக்கத்தை அகற் றிக்கொள்ள துத்ராவ ஓடிவந்தான் என்றதையுமறிந்தே அப்படி அழைத்தார். அவன் ஶூத்ரனல்லன்.

क्षत्रियत्व गतेश्चोत्तरत्र चैत्ररथेन लिंगात्

67 க்ஷத்ரியத்வ கதேஶ் சோத்தரத்ர சைத்ரரதேந லிங்காத் ॥

மேலே இந்த வித்யா ப்ரகரணத்தில் சைத்ரரதன் என்ற க்ஷத்ரியனைப் பற்றியும் கூறுவதால் ஜாநஶ்ருதியும் க்ஷத்ரியனாகத்தா னிருக்கவேண்டும். அவர் ரைக்வரை அழைத்து வரத் தேரோட்டியை அனுப்பினான். அன்னதாந கோதாநாதிகளைச் செய்து ஜனங்களால் (காதில் பிரஸித்தமாக)க் கேட்கப்பட்டவர் ஆதலாலும் க்ஷத்ரியன் என்றே தெரிகிறது.

## संस्कार परामर्शात्त दभावाभिलापाच्च

68 ஸம்ஸ்கார பராமர்ஶாத் ததபாவாபிலாபாச்ச.

உபநிஷத் வித்யை பற்றிக் கூறுமிட மெல்லாம் உபநயநம் என்ற ஸம்ஸ்காரம் கூறப்பட்டிருப்பதாலும், அது பிரும்ம க்ஷத்ரிய வைஶ்ய என்ற மூவருக்கே த்விஜ என்ற உபநயநத்தால் உண்டாகும் இருபிறப்பு ஏற்படுவதாலும் மற்றவருக்கு ஏகஜ என்ற ஒரே பிறப்புங் கூறி உபநயநமில்லை எனக் கூறப்பட்டிருப்பதாலும் மற்றவருக்கு பிரும்மவித்யையில் அதிகாரமில்லை.

## तदभाव निर्धारणे च प्रवृत्तेः

69 ததபாவ நிர்தாரணே ச ப்ரவிருத்தே:

ஜாபாலன் என்ற சிறுவன் கௌதமரிடம் வந்து எனக்கு உபநயநம் செய்து வேதமோதி வையுங்கள் என்றான். அவர் உனது கோத்ரமென்ன ? எனத் தாயைக் கேட்டுவா என்றார். ஜாபாலன் கேட்டுவந்து, அவளுக்குந் தெரியாதாம் என்றான். நீ ஸத்யத்தைக் கூறினதால் நீ பிராம்மணனே என உபநயனம் செய்து வைத்தார். அவன் பிராம்மணனா ? இல்லையா ? என நிர்த்தாரணம் செய்தபின்பே அவர் உபநயன உபதேசாதிகளில் முனைந்தார். ஆதலாலும் மற்றவர்களுக்கு அதிகாரமில்லை.

---

[illegible]

## श्रवणाध्ययनार्थ प्रतिषेधात् स्मृतेश्च

70 ஶ்ரவணாத்யயநார்த்த ப்ரதிஷேதாத் ஸ்ம்ருதேஶ்ச,

வேதத்தை மற்றவர் கேட்கவோ கற்கவோ அர்த்த முணர்ந்து அநுஷ்டிக்கவோ கூடாதென ஸ்மிருதிகள் கூறுவதாலும் மற்றவர்களுக்கு அதிகாரமில்லை.

[வேத ஶாஸ்த்ரங்கள் எல்லோருக்கும் நன்மை புரியவே தோன்றின. நமது மநுஷ்ய புத்திக் கெட்டாத சில காரணங்களால் வேதவித்யை சிலருக்கு வேண்டா மென்றது. இதிஹாஸ புராணங்கள் மூலமாக வேதாந் தத்தைக் கேட்கலாமவர்கள். வேதம் உபநிஷத்துக்களை வாயால் கூறக்கூடாது என்றது ]

விதுரரைப்போல் க்ஞாநி இல்லை. தர்மவியாதனைப் போன்ற தர்மக்ஞரில்லை. திருதராஷ்ட்ரன் துக்கத்தினால் தூக்கம் வராமல் தவித்தான். விதுரரை அழைத்து வேதாந்தம் கூறும்படி வேண்டினான். நான் வேறு பிறவி யில் தோன்றியவன். நான் வேதோபநிஷத் அர்த்தங்களைக் கூறுவதற்கில்லை என்று ஸநத் ஸுஜாதீயரை அழைத்து உபதேசம் செய்வித்தார். தவவலிமையால் காட்டில் நடந்த கொக்கை எரித்த விஷயத்தை அறிந்த தர்மவியா தனும் ஸநத்குமாரரை அழைத்த விதுரரும் தர்மசாஸ்த் ரத்தை மீறவில்லை. ஆபத்காலத்தில் கூறப்பட்ட வியா பாரத்திலும் பிராமணன் அரிசி விற்காதே என்று சாஸ்த்ரம் கூறுகிறது. இதைச்செய் இதைச் செய்யாதே என்ற வ்யவஸ்தையில் சாஸ்த்ரம்தான் பிரமாணம் என கீதை கூறுகிறது. ஸத்வகுணமுள்ள புத்திக்கு ஶாஸ்த்ரம் ப்ரமாண மென்றே தோன்றும். சாஸ்திரத்தில் [illegible] இடம் ப்ரமாணம். சிலது அப்ரமாணமென நினைப்பது பாதி சுரைக்காய் கறிக்கு பாதி சுரைக்காய் விதைக்கு என்று கூறுவது போலாகும்.]

---

தீபமேற்றுத பூஜை குருடனுக்கும்

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## 10. கம்பநாதி கரணம்.

### कंपनात्

### 71 கம்பனுத்.

உலகில் காணப்படும் வஸ்துவெல்லாம் ப்ராணனிடமிருந்து உண்டாகி அது தூண்டும்போதுதான் தனது வேலையைச் செய்கிறது. இடிபோல் அதனிடம் பயப்படுகிறது என்று கடோபநிஷத்தில் காணப்படுகிறது. அங்குள்ள ப்ராண ஶப்தத்தின் பொருள் யாதென விசாரிக்கப்படுகிறது. ப்ராண என்பது ப்ரஸித்தமான ப்ராணபானுதி வடிவமான வாயு. இடி என்பதும் மேகத்திஞல் உண்டுபண்ணப்படும் இடியே எனத் தோன்ற, அசைவது என்பது ஸகல ஜகத்தையும் அது அதன் கடமையைச் செய்யும்படிச் செய்வது என்று பொருள். இடி தன் தலைமீது விழுமோ என்று நாம் பயப்படுவது போல் ஐம்பூதங்களும் தேவர்களும் பரமாத்மாவினிடம் பயந்து தன் கடமையைக் செய்கிறுர்கள். ஆதலால் இங்கு கூறப்படுவது பரமாத்மாதான்.

## 11 ஜ்யோதி ரதிகரணம்.

### ज्योतिर्दर्शनात्

### 72 ஜ்யோதிர் தர்ஶநாத்,

இந்த ஶரீரத்திலிருந்து ஜீவன் கிளம்பி பரம் ஜோதிஸ்ஸை அடைந்து தனது ரூபத்துடன் சேருகிறது என்று சாந்தோக்ய உபநிஷத் கூறுகிறது.

ஜ்யோதிஶ் சரணுபிதாநாத் என்ற விடத்தில் ஜ்யோதிஸ் என்று பிரஸித்தமானதை விட்டு ப்ரகரண பலத்தை

ஒட்டி பரமாத்மா என்று பொருள் கூறப்பட்டது. மோக்ஷமடைபவன் ஸூர்யமண்டலத்தின் வழியாக பிரும்ம லோகம் செல்வதால், இங்கு ஜ்யோதிஸ் ஸூர்யனே என்று தோன்றவில்லை. இங்கும் பிரும்மந்தான் பொருள். மேலே "அது குற்றமற்றது. தேடத்தக்கது. அதை அடைந்து சரீரமில்லாதவனை இன்ப துன்பம் அணுகாது." இதுபோன்ற ஆத்ம ஸம்பந்தமான குணங்கள் கூறப்படுவதால் ஆத்மாதான் இதன் பொருள்.

## 12. அர்த்தாந்தரத்வாதி வ்யபதேசாதிகரணம்

## आकाशोऽर्थान्तरत्वादि व्यप देशात् ।

### 73 ஆகாஸோர்த்தாந்தர த்வாதி வ்யபதேசாத்

சாந்தோக்ய உபநிஷத்தில்- "ஆகாஸோ வை நாம நாமரூபயோர் நிர்வஹிதா" என ஒரு உபாஸனை கூறப்படுகிறது. இங்கு ஆகாஸமென்பது பிரும்மமா? அல்லது 5 பூதங்களில் ஒன்றான ஆகாஸந்தானா? என ஸந்தேஹம் பிரஸித்தமான பூதாகாசமே ஏற்கத்தக்கதெனத் தோன்ற நாமரூபமுள்ள பூதங்களை நிர்வஹிப்பது என்ற பொருள் கொண்ட வாக்யங்கள் நிர்க்குணமான பிரும்மம் ஆகாஸத்தைக்கொண்டு ஆகாஸத்திற்குள்ளிருந்து உலகை ஸ்ருஷ்டிக்கிறது என்ற பொருள் படக்கூறுவதால் பிரும்மம் என்றே அர்த்தம். பூதாகாஸமல்ல.

## 13. ஸுஷுப்தி உத்க்ராந்த்யதிகரணம்-2 ஸூத்ரம்.

## सुषुप्त्युत्क्रान्त्योर्भेदेन

### 74 ஸுஷுப்த்யுத்க்ராந்த்யோர்பேதேந

பிருஹதாரண்யக உபநிஷத்தில் "எது ஆத்மா? எது விக்ஞாநமயனாக ப்ராணனில் ஹ்ருதயத்தில் உள்ளே ஜ்யோதிஸ்ஸாக இருக்கும் புருஷன்? என்று ஆத்மா விஸ்தரிக்கப்படுகிறது. ப்ராணன் மநம் முதலிய இடங்களில் இருப்பதாகக் கூறப்படுவதால் ஜீவனே இங்கு

கூறப்படுகிருன் எனத் தோற்றும். ஆனல் தூங்கும் போதும் உடலை விட்டுக் கிளம்பும்போதும் ஜீவனுடன் சேர்ந்து ஒன்றையும் அறிவதில்லை என்று ஜீவனைவிட வேருகக் கூறப்படுவதால் இங்கு பிரும்மமே கூறப்படுகிறது. ஜீவனல்ல.

पत्यादि शब्देभ्यः

75 பத்யாதி ஶப்தேப்ய:

மேலே உள்ள வாக்யங்கள் இவர் எல்லாவற்றிற்கும் பதி எனவும் கூறுவதால் பிரும்மம் என்றே நிச்சயிக்கப் படுகிறது.

## 1 வது அத்தியாயம் 4 வது பாதம்

### ஆநுமாநிக அதிகரணம்–7 ஸூத்ரம்.

आनुमानिक मप्येकेषामितिचेन्न शरीर रूपक विन्यस्त गृहीते दर्शयति च

**76 ஆநுமாநிக மப்யேகேஷாமிதிசேந்ந ஶரீர ரூபக விந்யஸ்த க்ருஹீதேர் தர்ஶயதி ச.**

கபில முனிவர் ஸாங்க்யமெனும் மதத்தை இயற்றியவர். அவர் அவ்யக்தம் ப்ரதாநம் என்ற ஸத்வரஜஸ் தமஸ்ஸுகளின் சேர்க்கையே ஜகத்திற்குக் காரணம். புருஷன் ஸ்ருஷ்டி கார்யத்திலீடுபடாமல் தாமரை இலை மீதுள்ள ஜலம்போலிருக்கிருன் என வர்ணிக்கிருர்.

முதலத்யாயத்தில் பிரும்மத்திற்கு லக்ஷணம் உலக ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம். அந்தக் கார்யத்தைச் செய்வது பிரதாநமென்று கூறமுடியாது. அந்த ஸ்ருஷ்டி காரண வஸ்து. பார்த்துப் படைத்தது என வேதங் கூறுகிறது. ஜடமான பிரதாநம் பார்க்காது. வேத ப்ரமாணமில்லாததால் ஸாங்க்யர் கூறும் பிரதாநம் உலக காரணமல்ல எனத் தீர்மானிக்கப் பட்டது.

---

அவ்யக்தம் என்ற பிரதாநத்தைப் பற்றி காடக உப நிஷத்தில் கூறப்படுவதால் வேத ப்ரமாணமிருக்கிறது. வேத ப்ரமாணத்துடன் அநுமாநப்ரமாணத்தால் அறியத் தக்க பிரதாநம் ஜகத்காரணமாகும் என ஸாங்க்யமதத் தினர் கூற மறுபடியும் இந்த அதிகரணம் 7 ஸூத்ரங்க ளாலும் அதை மறுத்து அவ்யக்த ஶப்தத்திற்கு பிரதாந மர்த்தமில்லை என கூறப்படுகிறது. கட வல்லியில் மஹத் தைவிட மேலானது அவ்யக்தம். அவ்யக்த்தத்தைவிட மேலானவன் புருஷன் எனக் கூறப்படுகிறது.

இந்த மஹத் அவ்யக்தம் என்றஶப்தங்கள் எல்லாம் ஸாங்க்ய மதத்தில் பிரஸித்தமானவை. ஆதலால் அநு மாநத்தால் அறியத்தக்க பிரதாநமே அந்த உபநிஷத்திலும் பிரத்யக்ஷமாகக் கூறப்படுகிறது. ஆதலால் வேதப்ரமாண முண்டு என பூர்வபக்ஷி கூறுகிருர்.

ஸித்தாந்தி அதை மறுத்து இந்த உபநிஷத்தில் ஶரீ ரத்தை ஒருதேராக வர்ணித்து மேலே அவ்யக்தம் என காணப்படுகிறது. அது அந்த உடலையே அவ்யக்தம் என்று கூறுகிறதே தவிர பிரதாநத்தைக் கூறவில்லை. பின்னற் காணப்படும் வாக்கியங்களும் உடலையே அவ் யக்தமெனக் கூறுவதாகக் காணப்படுகின்றன. அதை மறுத்துரைக்கிருர். வ்யக்தமாகக் காணப்படும் சரீ ரத்தை அவ்யக்தமென எப்படிக் கூறுவது ? எனில்

सूक्ष्मं तु तदर्हत्वात्

77 ஸூக்ஷ்மந்து ததர்ஹத்வாத்

தேஹம் வ்யக்தமாகக் காணப்படினும் அந்த உடலை ஆரம்பிக்கக் காரணமான 5 பூதங்களின் தன்மாத்ரைக ளாலுண்டான ஸூக்ஷ்மதேஹம் கண்ணுக்குப் புலப்படாத தால் அதை அவ்யக்தமென வேதங்கூறுகிறது.

அதேபோல் பசுவோடு சேர், ஸோமரஸத்தை என்ற வேதத்திற்கு பசுவின் பாலுடன் சேர் எனப் பொருள் கூறப்படுகிறது.

# பிரம்மஸூத்ர வ்ருத்தி.



ஸதாசிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## तदधीनत्वादर्थवत्

### 78 தததீநத்வா தர்த்தவத்.

உடலுக்குக் காரணமான ஐம் பூதங்களின் ஸூக்ஷ்மாம்சம் அவ்யக்தமெனில் அதையே ஸாங்க்யர் அவ்யக்தமென்பதால் அதே ஜகத்காரணமென ஏன் ஏற்கக்கூடாது?

அவ்யக்தம் காரணமென்ருலும் அது ஜடமாநதால் ஸ்வதந்தரமான காரணமல்ல. பரமனுக்கு அநேகமானதால் அதை மாத்ரம் காரணமாகக் கூறமுடியாது. ஆனுல் ஈஶ்வரனே காரணமாக இருக்கட்டுமே? அவ்யக்தமென கூற வேண்டும்? எனில் மாயை ப்ரக்ருதி, மாயையை ஸ்வாதினமாக்கியவன் மாயீ மஹேஶ்வன் என வேதம் வர்ணிக்கிறது. மாயையை ஸஹாயமாகக் கொண்டே படைக்கின்ருன் பகவான்.

## ज्ञेयत्वा वचनाच्च

### 79 க்ஞேயத்வா வசநாச்ச.

ஸாங்க்யர்கள் ப்ரதாந புருஷ விவேகத்தால் முக்தி என்கிருர்கள். இங்கு பிரதானத்தை அறிய வேண்டுமென்று வாக்கியமே இல்லை. ஆதலால் இங்குள்ள அவ்யக்த ஶப்தம் உடலையே கூறுகிறது. உடலை அறியும்படியும் கூறவில்லையே? எனில் உடலை ரதமாக வர்ணித்து ஆத்மாவை ரதத்திலுள்ள யஜமானனுகக் கூறி அவனை அடைய வழி கூறுகிறது.

## वदतीति चेन्न प्राज्ञो हि प्रकरणात्

### 80 வததீதி சேந்ந ப்ராக்ஞோஹி ப்ரகரணுத்.

பிரதாநத்தை அறியும்படிக் கூறவில்லை என்று முன்னே சொல்லப்பட்டதல்லவா? "மஹத்திற்கு

மேலான சாச்வதமானதை அறிந்து மரணத்திலிருந்து விடுபடுகிறான் என்ற வாக்யத்தைக் காட்டி '' பிரதாநமே அவ்யக்த சப்தத்தின் பொருள் என்று கூறி வேத ப்ரமாண முண்டென ஸாங்க்யர் கூற, இங்கு புருஷனே சிறந்தவன். அவனுக்குமேல் வேறொரு பொருளுமில்லை எனப் பரமாத்மாவைக் கூறும் பிரகரணமானதால் பிரதாநத்தை அறியும்படிக் கூறவில்லை.

## त्रयाणामेव चैवमुपन्यासः प्रश्नश्च

81 த்ரயாணாமேவ சைவமுபன்யாஸ: ப்ரஶ்நஶ்ச.

இங்கு நசிகேதர் யமனை நாடி மூன்று விஷயங்களை கேட்கிறார். (1) தந்தை தன்னிடம் கோபமில்லா திருக்க வேண்டும், (2) ஸ்வர்க்கத்தைத் தரும் யாகம். (3) ஆத்மா எது? என்ற கேள்விகளுக்கு இங்கு கேட்ட விஷயங்களுக்கேற்ற பதில் கூறுவதும் அவைபற்றிப் பேசுவதுந் தான் உசிதம். பிரதானம் பற்றிக் கேள்வியு மில்லை. உபன்யாசமு மில்லை. ஆதலின் அவ்யக்த மென்பது ஸௌக்ஷ்ம சரீரம் பற்றியதே யாகும்.

## महद्वच्च

82 மஹத்வச்ச.

புத்தியைவிட ஆத்மா மஹான்பரன். மஹான் விபு ஆத்மா. வேதாஹ மேதம் புருஷம் மஹாந்தம் என்ற இடங்களில் மஹத் என்பதற்குப் பிரதானமர்த்த மில்லை என நிர்ணயிப்பது போல் இங்கும் அவ்யக்த சப்தமும் மஹத் ஶப்தமும் பிரதாநம் என்ற பொருள் உள்ளதல்ல.

---

**ஸ்ரீ யஜ்வா ஆராதனம் :** நமது ஆசிரியர் வழக்கப் படி திருவிடைமருதூரையடுத்த கல்யாணபுரத்தில் ஸ்ரீகாம கோடி பீடாதிபதிகளைத் தரிசித்து பிக்ஷா கைங்கர்யம் நடத்தினார்.

---

ஸேதுபந்தே து ராமேசம்

# பிரம்மஸூத்ர வ்ருத்தி.



ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## சமஸாதிகரணம்–3 ஸூத்ரங்கள்.

### चमसवद् विशेषात्

83 சமஸவத விஶேஷாத்.

ஶ்வேதாஶ்வதர உபநிஷத்தில் ஒரு அஜா (ஆடு). அது லோஹித ஶுக்ல வர்ணமுள்ளது. தனக்கு ஸம மான அநேக ப்ரஜைகளைப் படைப்பது ஒரு அஜம். அதை ப்ரேமையுடன் அநுஸரித்து அதனருகே படுத்திருக்கிறது மற்றொரு அஜம். போகத்தை அநுபவித்த அஜையை விட்டுவிடுகிறது என்றோர் மந்த்ரமிருக்கிறது.

இங்குள்ள அஜா என்ற ஶப்தம் கபிலரிஷி கூறும் ஸாங்க்ய மத ப்ரதாநத்தைக் கூறுகிறது. "அது ஸத்வ ரஜஸ் தமோகுணமுள்ளது. பிறப்பில்லாதது. பல ப்ரஜைகளைப்படைப்பது. அதில் ஸம்மந்தப்படாமல் அதைவிட்டவன் புருஷன்" என்ற ஸித்தாந்தத்தையே கூறுகிறது. அதற்கு அடையாளம் இந்த மந்த்ர சொற்கள் என ஸாங்க்யர் கூறுவதைமறுத்து ஸூத்ரம் கூறுகிறது. இந்த சொற்கள் மாத்ரம் ஸாங்க்ய ப்ரகிருதி எனக் கூறுவதற்குப் போதுமான ப்ரமாண மாகாது. ஏன்? "முன்னே சந்துள்ளது சமஸம்" என்ற சொல், சமஸம் என்ற யாக பாத்ரம் இத்தகையது என்று நிர்த்தாரணம் செய்யப் போதுமான பிரமாணம் இல்லை. முன்னே சந்துள்ளது மலையின் குழைவு கூட இருக்கிறது. அதைப்போல் 'அஜாமேகாம்' என்ற மந்த்ரம் ஸாங்க்ய ப்ரதாநத்தைத் தான் கூறுகிறதென நிச்சயிக்கப் போதிய ப்ரமாணமாகாது. ஆனால் அஜா என்பதற்கு என்னதான் பொருள்?

ज्योति रुपक्रमातु तथाह्यधीयत एके

84 ஜ்யோதி ருபக்ரமாதுததாஹ்யதீயத ஏகே.

சமஸம் எது என்று குறிப்பாகக் கூற வேறிடத்தில் சில வாக்கிய மிருப்பதுபோல் அஜா என்பதை விவரிக்க சாமவேதிகள் தேஜஸ் ஜலம் பிருதிவீ என்பதை லோஹித சுக்லக்ருஷ்ண என்று கூறுகின்றனர். அன்றியும் பரமாத்மாவின் ஶக்தி அஜா என வர்ணிக்கப்படுகிறது.

कल्पनोपदेशाच्च मध्वादिवद् अविरोधः

85 கல்பனோப தேஶாச்ச மத்வாதி வத் அவிரோத:.

அஜா என்பது ஆடு என்பது ப்ரஸித்தம். ப்ரகரணத்தை ஒட்டி மாயையை ஆடுபோல் கல்பித்து உபதேசிக்கின்றது அந்த மந்த்ரம். ஸூர்யனை மது என உபாஸி. வாக்கைத் தேநு என உபாஸி என எப்படி உபநிஷத் கூறுகின்றதோ அப்படிப்போல் பகவானதுமாயையை, ஆடு எனக் கல்பிக்கின்றது ஶ்ருதி. ஆதலால் 'அஜா மேகாம்' என்ற மந்த்ரம் ஸாங்க்யர் கூறும் பிரதாநத்தைக் கூறவில்லை.

## ஸாங்க்ய உபஸங்க்ரஹாதிகரணம்–3 ஸூத்ரங்கள்

नसंख्योप संग्रहादपि नानाभावादतिरेकाच्च

86 நஸங்க்யோப ஸங்க்ரஹாதபி
நாநா பாவா ததிரேகாச்ச.

பிருஹதாரண்யத்தில் "யஸ்மின் பஞ்ச பஞ்சாஜநா ஆகாஶஸ்ச ப்ரதிஷ்டித:" என்றோர் மந்திரமுளது. அங்கு ஐய்யைந்து இருபத்தைந்து என ஸாங்க்ய மதங் கூறும் தத்துவமுள்ள் பிரதாநமே கூறப்படுகிறது என ஸாங்க்யர் கூறுவதை இல்லை என மறுக்கிறது இந்த ஸூத்ரம்.

இங்கு ஒவ்வொரு ஐந்திலும் பலபல பேதம் [illegible] படுவதால் இங்கு இருபத்தைந்து என்று [illegible] வதற்கில்லை. அன்றியும், இருபத் [illegible] எனவும் இரண்டு கூற [illegible] இருபத்தேழாகின்றது. ஆதலாலங்கு ஸாங்க்ய தத்வம் கூறப்படவில்லை என்பது நிச்சயம்.

---

*சிவன் ஸபாபதி என வேதங்கள் கூறுகிறது*

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸதாசிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

प्राणादयो वाक्यशेषात्

87 ப்ராணாதயோ வாக்ய ஶேஷாத்.

ஐந்து ஐந்து ஜநம் என்பதன் கருத்தென்ன? எனில் பிரும்ம ஸ்வரூபத்தை விளக்கும் ப்ரகரண மானதால் ஐந்து பிராணனைத் தான் பஞ்சஜநா என்ற சொல் கூறு கிறது. முன்னுலுள்ள வாக்கியங்கள் இதை நிர்த்தாரணம் செய்கின்றன.

ज्योतिषैकेषा मसत्यन्ने

88 ஜ்யோதிஷ் யேகேஷா மஸத்யன்யே.

கண்வஶாகிகள் பூர்வ வாக்யத்திலுள்ள ஜோதிஷாம் ஜோதி: என்ற ஜோதிஸ்ஸை ஐந்து ஜந என்று கொள்வ தாலும் ஸாங்க்யமத 25 தத்வ மிங்கு கூறப்படவில்லை.

காரணத்வாதி கரணம் — 2 ஸூத்ரம்.

कारणत्वेन चाकाशादिषु यथाव्यपदिष्टोक्तेः

89 காரணத்வேந சாகாஶாதிஷு யதாவ்ய பதிஷ்டோக்தே:

உலக ஸ்ருஷ்டிக்குக் காரணம் ப்ரும்மம் எனத் தீர்மா னிக்கப்பட்டது. ஆனுல் ஓரிடத்தில் ஆத்மாவினிடமிருந்து ஆகாஶம் உண்டானது என்றும், இன்னோரிடத்தில் தேஜஸ்ஸை ஸ்ருஷ்டித்தார் என்றும், இன்னோரிடத்தில் பிராணனைப் படைத்தார் என்றும், பலவாருகக் காணப் படுவதால் பிரும்மம் ஜகத் ஸ்ருஷ்டி காரணமல்ல. பிரதாந மல்லது வேறென்று காரணமாக இருக்கலாம் என்று கூற அங்ஙனமல்ல.

---

ஒரு உபநிஷத்தில் கூறியபடியே ஆத்மா ஸர்வக்ஞன். ஸ்ருஷ்டி காரணன் என்று மற்ற உபநிஷத்துக்களிலும் கூறப்பட்டிருப்பதால் ஆத்மாதான் ஸ்ருஷ்டி காரணம்.

## समाकर्षात्

### 90 ஸமாகர்ஷாத்.

அஸத்துதான் முதலில் இருந்தது. அதிலிருந்து ஸத் உண்டானது என்று கூறினும் ஸ்ருஷ்டி காரணமான பிரும்மமே அஸத்தானது. அதாவது நாமரூபமுள்ள பிரபஞ்ச மில்லாததாக இருந்தது. அதிலிருந்து ஸத்து போல் காணப்படும் பிரபஞ்ச முண்டானது. ஒவ்வொரு பொருளிலும் உள்ளே நுழைந்து நிறைந்திருக்கிறார் என்றும் கூறப்படுவதால் ஆத்மாதான் காரணம்.

## பாலாக்யதிகரணம் — 3 ஸூத்ரம்.

## जगद्वाचित्वात्

### 91 ஜகத்வாசித்வாத்.

கௌஷீதகீ பிராம்மணத்தில் அஜாத ஶத்ரு என்பவர் பாலாகி என்பவரை நோக்கிக் கூறும், "இந்த புருஷர்களுக்கு கர்த்தா யாரோ, யாருடைய கர்மாவோ இது, அவனே அறிய வேண்டியவன்" என்ற வாக்கியத்தில் உபாஸிக்க வேண்டியவன் யார்? என ஸந்தேஹ மெழ ஆத்மாவுக்குக் கர்மாவோ கர்த்ருத்வமோ இல்லை. ஆதலால் எல்லோரையும் கர்மா செய்யும்படிச் செய்கிற பிராணனே உபாஸிக்கத் தக்கது எனப் பூர்வ பக்ஷிகள் கூற, அப்படியல்ல, பரமாத்மாதான் புருஷர்களுக்குக் கர்த்தா. எப்படி எனில்? பாலாகி ஆதித்யன் முதலிய புருஷர்களை முக்ய ப்ரும்மமென்று கூற, அவர்களுக்கும் கர்த்தா வேறு, அவரை உபாஸிக்க வேண்டும் என்று கூறுவதால், கர்மா என்பது கேவலம் அசைவதல்ல. உலகைப் படைக்கும் கர்மா ஆதலாலும் பிரும்மமே இங்கு கூறப்படுவது.

---

தீயதைப் பார்த்தால் அன்று தீமை உண்டாகும்

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.



ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

जीव मुख्य प्राण लिंगान्नेतिचेत्तद्व्याख्यातम्

92 ஜீவ முக்ய ப்ராண லிங்கான் நேதி
சேத்தத்வ்யாக்யாதம்.

ஜீவன் முக்ய ப்ராணன். இவைகளுக்குரிய அடையாளங்கள் காணப்படுகிறதே எனில் (1-1-31)ல் எற்கனவே மூன்று உபாஸனைகளை ஒன்ருகக் கூருது ச்ருதி என பதில் கூறப்பட்டுவிட்டது.

अन्यार्थं तु जैमिनिः प्रश्नव्याख्यानाभ्यामपिचैवमेके

93 அன்யார்த்தந்து ஜைமினி: ப்ரஶ்ந
வ்யாக்யாநாப்யாமபி சைவமேகே ॥

இந்த ப்ரகரணத்தில் ஜைமினி ஆசார்யாள் ஜீவனைக் குறித்திருப்பது பிரும்மத்தை அடைவதற்காக என்கிருர். பாலாகி, ஜீவனே ஆத்மா என்று கூற, அஜாத ஶத்ரு அவரை அழைத்துக்கொண்டு ஒரு தூங்குகிறவனிடம் சென்று அவன் பெயரைக் கூறிக் கூப்பிட்டார். அவன் எழுந்திருக்க வில்லை. அப்பொழுது அஜாதஶத்ரு கேட்கிருர். பாலாகி! ஜீவன் எங்கே போயிருந்தான்? நீ கூப்பிடும்போது? எனக் கேட்கிருர். அவன் ஆத்மாவினிடம் லயித்திருந்தான் எனக் கூற, ஜீவனை விட பரமாத்மா வேறு என ஸ்பஷ்டமாகக் கூறப்படுகிறது. அன்றியும் வாஜஸநேய உபநிஷத்தில் இதே ஸமயத்தில் விக்ஞாநமயன் ஜீவன். அவனைத் தவிர பரமாத்மா வேருனவன் என வர்ணிக்கப்படுகிறது.

---

அந்த ப்ரம்பரையில் பல ரிஷிகள் தோன்றினர்.

## वाक्यान्वयात्

### 94 வாக்யான் வயாத்.

முன்னர் ஒரு உபாஸனையின் ஆரம்பத்தில் பிரும்ம என்ற சப்தமிருப்பதால் அங்கு கூறப்படுவது பிரும்மம் என நிர்ணயம் கூறப்பட்டது. அதேபோல், "ஆத்மாவைக் காணவேணும், கேட்கவேணும், நினைக்கவேண்டும்" என்று யாக்ஞ்ய வல்க்யர் மைத்ரேயிக்குக் கூறும் உபாஸனையில் பார்க்கத் தக்கது ஆத்மா என்று உபக்ரமிக்கப்படுவதால் இங்கு உபாஸிக்கத்தக்கது ஜீவாத்மாவா? பரமாத்மாவா? என ஸந்தேஹம் உதிக்கின்றது. ஆரம்பமாகும் பதத்தைக்கொண்டு மாத்ரம் முடிவு கூற முடியாது. வாக்ய ஆரம்பத்தில் மைத்ரேயி "அமிருத மளிக்காத பொருள் எனக்கு வேண்டாம்" என்று பரப்ரும்மத்தைப் பற்றியே ஆரம்பித் திருப்பதால் பிரும்மமே உபாஸிக்கத் தக்க தென்பது ஸித்தாந்தம்.

## प्रतिज्ञासिद्धे लिङ्गं माश्मरथ्यः

### 95 ப்ரதிக்ஞா ஸித்தேர் லிங்கம் ஆஶ்மரத்ய :

பதி ஸதி தநம் போகம் முதலிய அடையாளங்கள் ஜீவனை உபாஸிக்க வேண்டுமெனக் கூறவில்லையா? என்று ஸந்தேஹம் தோன்ற ஆஶ்மரத்யர் என்ற ஆசார்யர் கூறும் ஸமாதாநத்தைக் கூறுகிறது இந்த ஸூத்ரம். பிரும்மம் ஒன்றை அறிந்தால் உலகில் எல்லாவற்றையும் அறியலாம் என்று முதலில் ப்ரதிக்ஞை செய்தது உபநிஷத்து. உண்மையில் பேதமில்லாததும் ஆனால் பேதம் போல் தோற்றுவதுமான ஜீவனை நாடி ப்ரதிக்ஞை செய்ததால் ஜீவன் மற்றவை எல்லாம் கூறப்பட்டது. உபாஸனைக்காகக் கூறப்படவில்லை.

---

சதுர்முகனது மாநஸிக புத்ரர் சிலர்.

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.



ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## उत्क्रमिष्यत: एवं भावादिति औडुलोमि:

96 உத்க்ர மிஷ்யத: ஏவம் பாவாதிதி ஔடு லோமி:

உண்மையில் ஜீவன் வேறு, ஆத்மாவே றல்ல. மாயையால் பேதமும் இன்ப துன்பமும் தோன்றுகின்றன. உபாஸனையால் இந்த ஜீவனிடமுள்ள கார்ய காரணக் கூட்டத்தை விட்டு, உதரிக் கிளம்பும்போதும் பேதம். பிரும்மத்துடன் சேர்ந்தபின் அபேதமாகும். அந்த ஜீவன் அதற்காக ஆரம்பத்தில் கூறப்பட்டதென உடுலோம புத்ரரான ஆசார்யர் கூறுகிறார்.

## अवस्थिते रिति काशकृत्स्न:

97 அவஸ்திதே ரிதி காஶக்ருத்ஸ்ந:

ஜீவ ஸ்வரூபியாகவே ஆத்மா இருப்பதால் அந்த ஜீவனை முதலில் கூறி ஆத்மாவைப் பற்றிக் கூறுவதால் இங்கு பரப்ரும்மோபாஸனை கூறப்படுகிறது என காஶக்ருத்ஸ்நர் என்ற ஆசார்யர் கூறுகிறார்.

இங்கு ஆசார்யாள் ஆஶ்மரத்யர் ஔடுலோமி காஶக்ருத்ஸ்நர் என்ற மூன்று அத்வைதாசார்யாளின் கருத்தையும் எடுத்துக் காட்டுகிறார்கள். இவர்களது கொள்கைகளில் ஸ்வல்ப பேதமே உள்ளது.

கார்யாவஸ்தையில் ஜீவன் பிரும்மாவினிட மிருந்து வேறானவன். காரணாவஸ்தையில் அபேதமானவர். ஆதலால் பேதாபேத வாதி அவர். ஸம்ஸார காலத்தில் ஜீவன் பேதமுள்ளவன். முக்தியில் பேதமில்லாதவன் என்பது ஔடுலோமியின் மதம். ஆஶ்மரத்யரைப்போல்

ஜீவ அவஸ்தையிலும் அவன் பரமாத்மாவே என்பது ஆசார்யாளின் மதம்.

## ப்ரக்ருத்யதி கரணம்—5-ஸூத்ரம்.

## प्रकृतिश्च प्रतिज्ञा दृष्टान्तानुरोधात्

98 ப்ரக்ருதிஶ்ச ப்ரதிக்ஞா த்ருஷ்டாந்தாநுரோதாத்.

உலகிற்குக் காரணம் பிரும்மம் என்பது ஸித்தாந்தம். உபாதாந காரணம் நிமித்த காரணம் என இருவகைப் படும். காரணம் : பானைக்கு மண் உபாதாந காரணம். அதை ப்ரகிருதி என்றும் கூறுவர். குயவன் நிமித்த காரணம் பானைக்கு. உலகைப் படைக்கும் பிரகரணத்தில் பிரும்மம் பார்த்தது, யோசித்தது என்பது போல பல காணப்படுகின்றன. குயவன் யோசித்துப் பார்த்துப் பானை செய்வது போல் பிரும்மமும் செய்வதால் அது நிமித்த காரணமாகத்தான் இருக்க வேண்டும் என்று தோன்ற, பிரும்மம் உலகத்திற்கு உபாதாந காரணமும் நிமித்த காரணமுமாகும். உபநிஷத் "ஒன்றை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்ததாகும்." அந்த ஒன்று பிரும்மம் என்று பிரதிக்ஞை செய்திருப்பதாலும், தங்கத்தை அறிந்தால் அதனாலாகிய நகைகளை எல்லாம் அறிந்ததாகும் என்று உதாஹரணத்தைக் காட்டி இருப்பதாலும் பிரும்மம் உலகிற்கு உபாதாந காரணமும் நிமித்த காரணமுமாகும் என்பது ஸித்தாந்தம்.

## अभिध्योप देशाच

99. அபித்யோப தேசாச்ச.

ஸ்ருஷ்டிக்கு முன் அவர் விரும்பினார் பார்த்தார் என்பது அவர் கர்தா எனக் காட்டுகிறது. "எல்லாமாகத் தான் ஆகவேண்டும்" என்பது உபாதாந காரணம் என்பதைக் காட்டுகிறது.

---

## साक्षाच्चोभयाम्नानात्

### 100 ஸாக்ஷாச்ச உபய ஆம்நாநாத்.

எல்லா பூதங்களும் பிரும்மத்தினிடமிருந்தே உண்டாகின்றன. அங்கேயே லயமாகின்றன என்று உபநிஷத் ப்ரத்யக்ஷமாகக் கூறுவதால் பிரும்மம் உபாதாந காரணமேயாம். ஒரு பொருள் உண்டாவதற்கு எது காரணமோ அதே லயத்திற்கும் காரணம் என்பது உலக ஸித்தமான நியாயம். பூமி தான் பயிர்கள் உண்டாகக் காரணம். பூமியில்தான் பயிர்கள் மடிந்து மூடிகின்றன.

## आत्मकृतेः परिणामात्

### 101 ஆத்ம கிருதே: பரிணாமாத்.

அந்த பிரும்மம் தன்னைத்தானே உலகமாகச் செய்து கொண்டது என்று கூறப்படுவதாலும் ஆத்மா உலகிற்கு பிரக்ருதி அல்லது உபாதாந காரணம். ஸ்வயம் (தானே) என்பது வேறு எவரும் காரணமல்ல, தானே நிமித்த காரணமுமாவார் என விளக்குகிறது. ஆத்மாதான் ஏற்கனவே ஸித்தமாக இருக்கிறாரே, தன்னைத்தான் எப்படிச் செய்து கொள்வது? ஏற்கனவே உள்ள தன்னை உலகமாகப் பரிணமிக்கும்படிச் செய்தார் என்று பொருள்.

## योनिश्च हि गीयते

### 102 யோநிர்ச ஹிகீயதே

"எதை பூதங்களுக்குக் காரணமாக க்ஞானிகள் காண்கிறார்களோ" என உபநிஷத் கூறுவதால் பிரும்ம நிமித்த காரணமும் உபாதான காரணமுமாகும். உலகில் நிமித்தகாரணமான குயவன் பானைக்கு உபாதான காரணமாகக் காணவில்லையே எனில்? வேதமப்படிக் கூறுகிறது. நாம் அநுமாநத்தால் அல்லது உபமாநத்தால் அதை மாற்ற முடியாது.

---

.63

## 8 ஸர்வ வ்யாக்யாநாதி கரணம்.

एतेन सर्वे व्याख्याता व्याख्याताः

103 ஏதேந ஸர்வேவ்யாக்யாதா வ்யாக்யாதா:

முதல் அத்தியாயம் முதல் பாதத்தில் "ஈக்ஷதேர் நாஶப்தம்" என்ற ஸூத்ரம் முதல் இதுவரை ஸாங்க்யர் கூறும் ப்ரக்ருதி உலககாரணமல்ல! பிரும்மமே காரணம் என்று வ்யாக்யாநம் கூறப்பட்டது. இதனால் பரமாணுவே ஜகத்திற்குக் காரணம். சூன்யமே காரணமென்று கூறுபவர்களுக்கெல்லாம் பதில் கூறியாகி விட்டது. முக்ய மல்லனை ஜயித்தால் எல்லோரையும் ஜயித்தது போலாகும். அத்யாய முடிவைக் காட்டுவது 2 முறை வ்யாக்யாதா என்பது.

*இத்துடன் முதல் அத்யாயம் நாலாம் பாதமும் முதல் அத்யாயமும் பூர்ணமானது.*

---

## புத்தக விமர்சனம்.

ஸ்ரீ ராமநாத ஸுப்ரபாதம்: பிரும்மஸ்ரீ P. மஹாதேவ சாஸ்திரிகள் அழகாக ப்ரபத்தி சரணாகதிகளுடன் இயற்றிய சுலோகங்கள் கோவிலில் பாடப்படுகிறது. மிக அழகாக அமைந்ததை அச்சிட்டு கோவில் அதிகாரிகள், பக்தர்களுக்கு வழங்கலாம். இடமில்லாததால் நம் பத்ரிகையில் பிரசுரிக்காததற்கு வருந்துகிறோம்.

## வரப் பெற்றோம்.

தர்மவசனீ : மலையாள, ஆங்கில மாதப் பத்திரிகை, N. S. பரமேச்வரய்யா, New Saraswathi Printing Works, Trichur என்ற விலாசத்தில் விபரம் அறியவும்.

குரோதி வருஷ வாக்ய பஞ்சாங்கம்: யாழ்ப்பாணம், கொக்குவில் ஸ்ரீ R. S. ரகுநாதய்யரால் கணிக்கப்பட்டது. ஜோதிட பரிபாலனமடம், கொக்குவில் (Po,) இலங்கை என்ற விடத்தில் ரூ. 1—50 ந. பைக்கு கிடைக்கும். ரிஜிஸ்டரில் ரூ. 2—15 ந. பை. அனுப்பி பெற்றுக்கொள்ளலாம். ஸகல விஷயங்களும் அமைந்தது.

---

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.



ஸ்ரீ ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

**2-வது அத்தியாயம் 1 பாதம் 1 அதிகரணம்.**
**ஸ்மிருத்யதிகரணம் 2-ஸூத்ரம்.**

स्मृत्यनवकाश दोष प्रसंगः इति चेन्न अन्य स्मृत्यनवकाश दोष प्रसंगात् ॥

1 ஸ்மிருத்யநவகாஶ தோஷப்ரஸங்க: இதிசேந்ந அந்ய ஸ்மிருத்யநவகாஶதோஷ ப்ரஸங்காத்,

கபில மஹர்ஷி பற்றி கபில தேவ ஹூதீஸம்வாதப்ரகரணத்தில் பாகவதத்தில் அவர் கூறும் வேதாந்தத்தைக் காணலாம். அது ஸாங்க்யமதம் எனப்படும். வேதார்த்தங்களை ஸ்மரித்து-நினைத்து எழுதியதால் ஸ்மிருதி என்ற நூல்கள் தோன்றின. அவை நமக்கு பிரமாணமானவை.

கபிலர் ஸத்வ ரஜஸ் தமஸ் என்ற குணங்களின் சேர்க்கையே ப்ரக்ருதி. அது ஜடமாயினும் ஒன்றிலும் ஸம்பந்தப்படாமல் தாமரை இலைமேல் உள்ள நீர்போல் இருக்கும் பிரும்மத்தின் ஸன்னதியால் உலகையெலாம் படைத்துப் பாலித்து தனக்குள் ஒடுக்கிக்கொள்கிறது என்கிறார். அது உலகிற்குக் காரணமில்லை என்றால் மஹர்ஷி கூறிய ஸ்மிருதிக்கு இடமளிக்கவில்லை என்ற குற்றமேற்படும். ஆதலால் ப்ரக்ருதியே உலக காரணம் எனக் கூறவேண்டுமென்பது வாதம்.

கபில ஸ்மிருதிக்கு அவகாசமில்லாமல் போகிறதே என்பதற்காக ப்ரக்ருதியே காரணமென்று ஒத்துக் கொண்டால் முற்றிலும் வேதார்த்தத்தைக் கொண்டே மற்ற முனிவர்கள் இயற்றிய ஸ்மிருதிகளுக்கு அவகாஶம் இல்லை என்ற தோஷமேற்படுமே! ஆதலால் வேதத்தை

தழுவி அதற்கு விரோதமில்லாமல் கூறும் ஸ்மிருதிகளை யே ப்ரமாணமாக ஏற்கவேண்டும். வேத ப்ரமாண மில்லாத கபிலாதி முனிவர் மதம் எற்கதக்கதல்ல,

इतरेषां च अनुपलब्धेः

2 இதரேஷாஞ்ச அநுபலப்தே:

ப்ரதாநந்தவிர மஹத் முதலியவை வேதத்திலும் உலகத்திலும் காணவில்லை. ஆதலால் கபில ஸ்மிருதிக்கு அவகாசமில்லை அத்வைத சாஸ்த்ரத்தில்.

### யோக ப்ரத்யுக்தி அதிகரணம்.

एतेन योगः प्रत्युक्तः ।

3 ஏதேந யோக: ப்ரத்யுக்த:

பரமாத்மாவே ஜகத்காரணம். அவரை அறிவதே மோக்ஷ ஸாதநம். அது வேதாந்த வாக்யங்களால் தான் உண்டாகக் கூடியது என்ற வேத ஸித்தாந்தத்திற்கு ஒத்து வராததால் யோக சாஸ்த்ரத்தையும் அத்வைத மதம் ஏற்பதற்கில்லை. ஸாங்க்யருக்குச் சொன்ன பதிலி னாலேயே யோக மதமும் நிராகரிக்கப்பட்டது.

வேதாந்த விரோதமில்லாத அம்ஸங்களை ஸாங்க்யத் திலிருந்தும் யோகத்திலிருந்தும் ஏற்றுக் கொள்கிறோம்.

### விலக்ஷணத்வ அதிகரணம் 8 ஸூத்ரம்.

न विलक्षणत्वादस्य तथात्वं च शब्दात्

4 ந விலக்ஷணத்வாதஸ்ய ததாத்வஞ்ச ஶப்தாத்

ஸாங்க்ய மதம் யோகமதம் இரண்டும் சில அம்சத் தில் ஏற்றுக்கொள்ளத் தக்கவைகளே. தவிர பூர்ணமாக அப்படியே ஏற்றுக்கொள்ள தக்கதல்ல. என இரு அதி கரணங்களால் கூறப்பட்டது.

நாலாவது ஸூத்ரம் முதல் பதினோராவது ஸூத்ரம் வரை தர்க்கமதத்தைப் பரிஶீலனை செய்து அதுவும் முன்னவைகள் போல் பூர்ணமாக ஏற்றுக்கொள்ளத்தக்க

தல்ல என இந்த அதிகரணம் கூறுகிறது. முதல் இரு ஸூத்ரங்கள் பூர்வபக்ஷமாகும்.

உலகிற்கு சைதன்யரூபியான பரமாத்மா காரணமாகமாட்டார். ஏன் என்ருல் ஒரு வஸ்துவிலிருந்து உண்டாகும் கார்ய வஸ்து காரண வஸ்துவைப்போல்தானிருக்கும் என்பது தர்க்கத்தால் நிர்ணயிக்கப்பட்ட உண்மை. நூலினுல் உண்டாகும் வஸ்து வஸ்த்ரமாக இருக்குமே அல்லாது பானையாக இருக்காது. மண்ணிஞல் உண்டாகும் வஸ்து வஸ்த்ரமாக இராது.

சுத்த க்ஞான-சைதன்ய-வடிவமான பரமாத்மாவின் இடமிருந்தே உலகம் உண்டானது என்ருல் ஒரே க்ஞானமயமாக அல்லவா உலகம் இருக்கவேண்டும்? கொஞ்சம் அறிவுள்ளதாகவும் ஜடவடிவமாகவுமன்ரோ உலகம் இருக்கின்றது. விலக்ஷணமாக இருக்கிறது. வேதமும் '' விக்ஞாநமாகவும் அவிக்ஞாநமாகவுமிருக்கிறது '' எனக் கூறுவதால் பிரும்மம் ஜகத்காரணமல்ல.

अभिमानिव्यपदेशस्तु विशेषानुगतिभ्याम्.

5 அபிமாநிவ்யபதேஶஸ்து விஶேஷாநுகதிப்யாம்.

''மண்பேசிற்று'' என்பதுபோல் ஜடமான வஸ்துவும் உலகில் சேதநகார்யமான பேசுவது பார்ப்பது முதலிய கார்யங்களைச் செய்வதால் பிரும்மமே ஜகத் காரணம் என்பதில் ஆக்ஷேபம் இல்லை எனில் அதில்லை. மண் பேசுகிறது என்றவிடத்தில் ஜடமான மண் பேசவில்லை. அதற்கு அபிமான தேவதைதான் பேசுகிறது. கண் காது முதலிய இந்த்ரியங்களும் பிராணனும் நானே சிறந்தவன் நானே சிறந்தவன் என்று விவாதம் செய்வதாகக் கூறும் உபநிஷத்தில் பிராண தேவதை கண் தேவதை என இந்திரியங்களுக்கும் தேவதைகள் விஶேஷணமாகவே கூறப்படுகின்றன. அந்த தேவதையால் தான் இந்த்ரியங்கள் பேசுகின்றன. அன்றியும் '' அக்நி வாக்கில் புகுந்தது என்பது போன்ற அநுகமனம்-பின் தொடர்வது கூறப்

பட்டிருக்கின்றது. ஆதலால் ஜடமான உலகத்திற்கு சைதன்யமயமான பிரும்மம் காரணமல்ல, என இரு ஸூத்ரங்களாலும் கூறப்பட்டதை மறுத்து மேலே வரும் ஸூத்ரங்கள் பிரும்மமே ஜகத்காரணம் என்பதை ஸ்திர படுத்துகின்றன.

## दृश्यते तु

### 6. த்ருஶ்யதே து.

சேதனஸ்வரூபியான பிரும்மத்தினிடமிருந்து அசேதநமான உலகம் உண்டாகக் கூடாது என்று நியமமில்லை. நமது உடல் சேதநன் என்று தானே நினைக்கிறோம். அதிலிருந்து ஜடமான உணர்ச்சியில்லாத நகமும் கேசமும் உண்டாகவில்லையா? ஜடமான சாணியிலிருந்து புழு தேள் முதலிய சேதந வஸ்து உண்டாகக் காண்கிறோம். ஆதலால் சைதன்ய ஸ்வரூபியான பிரும்மத்தினிடமிருந்து அசேதனமான உலகம் உண்டாவது ஆகாதகார்யமில்லை.

உபநிஷத்தில் "ஆத்மாவை தர்சிக்க வேண்டும். அதற்கு உபகாரமாகக் கேட்கவேண்டும். மநநம் செய்ய வேண்டு" மெனக் கூறுவதால் தர்க்க சாஸ்திரத்திற்கு இடமுண்டு. அது பிரதாநம் காரணமென்பதற்கு உபபலமாகும் எனில் இல்லை. வேதங்கூறிய விஷயத்தில் தான் தர்க்கத்தால் ஊஹிக்கலாமேதவிர மற்றவிடத்தில் தர்க்கத்திற்கு இடமில்லை.

## असदितिचेन्न प्रतिषेधमात्रत्वात्

### 7 அஸதிதிசேந்நப்ரதிஷேதமாத்ரத்வாத்

நாம ரூபமில்லாத சேதநம் நாம ரூப்முள்ள ஜகத்திற்குக் காரணம் என்றால் உத்பத்திக்கு முன் உலகம் அஸத்தாக இருந்தது. அஸத்திலிருந்து ஸத் உண்டானது என்ற தோஷம் வருமோ எனில் இல்லை. அஸத் என்ற சொல் அப்பொழுது ஜகத் இல்லை என நிஷேதம் செய்யவில்லை. நாம ரூபத்துடன் இப்படி இப்போதிருப்பது போலில்லை. ஸூக்ஷ்மமாக இருந்தது என்றுதான் பொருள். அதனால் அஸத்திலிருந்து ஸத் உண்டானது என வாதிப்போருக்கு இடமில்லை.

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸ்ரீ ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## अपीतौ तद्वत् प्रसंगात् असमंजसम्

8 அபீதௌ தத்வத் ப்ரஸங்காத் அஸமஞ்ஜஸம்.

சுத்தமான பிரும்மமே உலகிற்கு முக்கிய காரணம் என்றால் பிரளயத்தில் கார்யமான உலகம் பிரும்மத்தினிடம் சேர்ந்து சுத்தமான பிரும்மத்தையும் தன்னைப் போல் அசுத்தமாக்கி விடும். ஆதலால் பிரும்மம் உலகிற்குக் காரணம் என்பது பொருத்தமில்லை என ஆக்ஷேபிக்க.

## न तु दृष्टान्तभावात्

9 நது திருஷ்டாந்த பாவாத்,

ஒரு கார்ய வஸ்து தனது காரணத்தில் லயமாகும் போது காரண வஸ்துவைத் தன்னைப் போல் செய்வதில்லை. மண்ணாலான பானை உடைந்து மண்ணானால், பானையைப்போலிருப்பதில்லை. ஆதலால் பொருத்தம் இல்லை எனக் கூறியது தவறு.

## स्वपक्ष दोषाच्च

10 ஸ்வபக்ஷ தோஷாச்ச,

ஸாங்க்ய மதத்திலும் தன்னைவிட விலக்ஷணமான ப்ரதாநத்திலிருந்து உலகம் உண்டானதென்றால் அசேதநமான பிரகிருதியிலிருந்து சேதநம் உண்டானது. உற்பத்திக்கு முன் உலகம் அஸத்தாக இருந்தது. பிரளய காலத்தில் உலகம் தன்னைப் போல் காரண வஸ்துவைச் செய்கிறது ஆகிய ஸகல தோஷங்களும் இருக்கின்றன.

## तर्काप्रतिष्ठानात् अप्यन्यथा अनुमेयमिति चेत्एवमप्यनिर्मोक्षप्रसंगः

11 தர்காப்ரதிஷ்டாநாத் அப்யந்யதா அநுமேயமிதி சேத் ஏவமப்யநிர்மோக்ஷப்ரஸங்க:

வேண்டாத பல கேள்விகள் கேட்பரிப்படி

ஒரு தார்கிகன் அநுமானம் செய்ததை மற்ெருரு சிறந்த தார்கிகன் மாற்றுவதால் வேதானுசாரமில்லாத தர்க்கம் ஒரே நிலேயில் நிற்பதில்லே. மற்றவர் கூறிய தர்க்கம் வேதப்ரமாணமில்லாத தர்க்கமாஞல் அதுவும் நிலேத்திருக் காது. கபிலர், கண்வர் முதலியவர்களின் தர்க்கம் ஒன்ருே டொன்று சேராமல் வேறுபட்டிருப்பதால் தர்க்கம் ப்ரமாணமாகாது.

### ஶிஷ்டாபரிக்ரஹாதிகரணம் 1.

## एतेन शिष्टापरिग्रहा अपि व्याख्याताः

12 ஏதேந ஶிஷ்டா பரிக்ரஹா அபிவ்யாக்யா தா: ।

தர்க்க பலத்தைக் கொண்டு பிரதாநம் ஜகத்திற்குக் காரணம் பிரும்மமில்லே என்ற ஸாங்க்ய மத ஸித்தாந் தத்தை, வேதத்தைப்ரமாணமாகக் கொண்ட மநுமுதலிய ஶிஷ்டர்கள் ஏற்கவில்லே. அதே காரணத்தைக்கொண்டு அணுதான் ஜகத்திற்குக் காரணம் என்றது போன்ற மற்ற மதங்களேயும் வேதாந்திகள் ஏற்பதற்கில்லே என நிராகரித்தார்.

மல்ல யுத்தத்தில் பிரதாநமானவனே ஜயித்தால் மற்றவர்களேயும் ஜயித்ததாகும் என்ற நியாயம்போல் தர்க்கத்தையே ப்ரமாணமெனக் கருதுபவரில் ஸாங்க்ய னுக்குப் பதில் சொல்லப்பட்டது. அதே பதில்தான் மற்றவர்களுக்கும்.

### போகா பத்யதி கரணம்.

## भोक्त्रापत्ते रविभागश्चेत् स्याल्लोकवत्

13 போக்த்ரா பத்தே ரவிபாகஶ்
சேத் ஸ்யாத் லோகவத் ।

வேத ப்ரமாணத்தால் பிரும்மமே உலகிற்கு உபா தாந காரணமும் நிமித்த காரணமுமாகும், எனில் பிரத் யக்ஷமாக ஒரு விஷயத்தை அனுபவிக்கிறவர் ஒருவர், விஷயம் ஒன்று என்ற பேதமில்லாமல் போகுமே. உண் பவனே உணவாகவும், உணவே உண்பவனுகவும் ஆகுமே. ஆதலால் பிரும்மம் காரணமல்ல என்று ஒரு ஆக்ஷேபம் தோன்றுகிறது.

---

ஸமாதானம்: உலகில் மண்ணலான ஸகல பாத்ரங்களுக்கும் மண்தான் காரணம், என்பதில் ஆக்ஷேபமில்லை. கடலிலிருந்து தோன்றும் அலை, சுழல், நுரை எல்லாவற்றிற்கும் காரணம் ஸமுத்திரந்தான். ஆனாலும் வ்யவஹார தசையில், மண், கலசம், மடக்கு, அகல் முதலிய பேதங்களைக் காண்கிறோம். அதேபோல் கடலிலிருந்து தோன்றிய அலை, சுழல், நுரை முதலியவைகளைத் தனித் தனியாகவே கூறுவோம். இதெல்லாம் ஸமுத்ரந்தான் என்றும் கூறுவோம். அதாவது வ்யவஹார நிலையில் பேதம் உண்டு. அது கல்பிதமே தவிர உண்மையல்ல. ஆதலால் பிரத்யக்ஷ விரோதமில்லை.

### ஆரம்பணாதிகரணம் 7-ஸூத்ரம்.

## तदनन्यत्वं आरंभण शब्दादिभ्यः

14 ததநன்யத்வம் ஆரம்பண ஶப்தாதிப்ய: ।

வ்யவஹார நிலையில் உண்பவன், உணவு என்ற பேதமிருப்பதை ஏற்று, உலக வ்யவஹாரம்போல் பேதமிருக்கலாம் என்று முன் கூறப்பட்டது. இந்த அதிகரணத்தால் வ்யவஹார நிலையிலும் பேதமில்லை. அது வெறுந் தோற்றமே எனக் கூறப்படுகிறது.

சாந்தோக்ய உபநிஷத்தில், ஒரு மண்கட்டியை அறிந்தால் எல்லா மிருண்மயமானவைகளையும் அறிந்ததாகும். வாக்கினாலே இது பானை மடக்கு என்று கூறப்படுகிறதே தவிர அதெல்லாம் மண்ணுதான் என்பது ஸத்யம் எனக் கூறப்படுவதால் வ்யவஹார நிலையிலுங் கூட, பானைக்கும் பானைக்குக் காரணமான மிருத்திகைக்கும் பேதமில்லை. மண்ணைவிடப் பானை வேறல்ல. பிரும்மத்தைவிட உலகம் வேறல்ல.

மரம் என்ற போது அதன் கிளை, தண்டு, வேர் முதலியவைகளைப் பிரிக்காமல் அபேதமாகக் கருதுகிறோம். கிளை தண்டு வேர் என்ற பேதத்தைப் பார்க்கும் போது அபேதமான மரம் எனக் கூறுவதில்லை. ஆதலால் பிரும்மம் பேதாபேத ஸ்வரூபமானது எனக் கூறலாமே என சிலரது வாதம்.

---

இரண்டாவது ஜன்மாவை அடைகிறான்

இந்த ஆத்ம வடிவமானதெல்லாம் ஸத்யம், ''சுவேத கேதோநீ அந்த ஆத்மாதான்,'' ''எல்லாம் ஆத்மாவாக இருக்கும்பொழுது யார் யாரைப் பார்ப்பான்?'' என்பது போன்ற உபநிஷத் வாக்கியங்கள் பேதத்தை ஸத்யமென ஏற்காததால் பேதாபேத வாதம் சரியல்ல. ''பேதத்தைப் பார்ப்பவனுக்கு மரண ஜநந மரண ப்ரவாஹம் ஒழியா தென்றும் ச்ருதி கூறுகிறது.'' ''பேத மெல்லாம் அந்ருதம்'' எனவும் வர்ணிக்கிறது.

குரு சிஷ்யன் வேதாந்த உபதேசம் இந்த பேதமெல்லாம் அந்ருதம் என்றால், இந்த அந்ருதத்தினால் ஸத்யமான க்ஞானமோ மோக்ஷமோ எப்படி ஏற்படும்? பழுதையைப் பாம்பெனக் கருதி அது கடித்ததாகக் கருதியவன் மரண மடைவானு? அந்த பிராந்தியால் சிலர் மரணமடையக் கூடும். கனவு பொய்யானாலும் மெய்யான சில பலன் களைக்கொடுக்கிறது.

'' ஒரு காம்ய கர்மா நடக்கும் பொழுது அழகிய ஸ்த்ரீ யைக் கனவில் பார்த்தால் அந்த கர்மா ஸமிருத்தியுள்ள தாகிறது.''

''கனவில் கறுப்பான க்ரூரபுருஷன் நம்மைக் கொல்வ தாகக் கண்டால், விரைவில் மரணம் உண்டாகும்'' என வேதம் வர்ணிக்கிறது.

பொய்யான ஸ்வப்நம் மெய்யான பலமுண்டாவ தற்கு ஸூசகமாக இருக்கிறது. அங்ஙனம் குரு சிஷ்ய உபதேசம் அந்ருதமானாலும் கூட ஸத்யமான க்ஞானத் தைத் தரும். ஸ்வப்ந காலத்தில் அதை ஸத்யம் என்றே நினைக்கிறோம். எழுந்த பிறகும் கூட ஸ்வப்ந வ்யவ ஹாரம் பொய்யானாலும் ஸ்வப்ந க்ஞானம் பொய்யாவ தில்லை.

நானே ஆத்மா என்ற சிறந்த அநுபவ ஆத்மக்ஞானம் வரும்வரை பேதமெல்லாம் ஸத்யமே ஆகும். பொய் யல்ல. க்ஞானம் வந்த பிறகுதான் இவை எல்லாம் பொய். இவை என்ற தனி க்ஞானமே தோன்றுது. இதுவரை ஸத்யமென் றெண்ணினோமே அதெல்லாம் அந்ருதம் என ஒரு க்ஷணம் எண்ணுவான். பிரும்மத்தில் லயிப்பான்.

---

அது வேறு பிறப்பானதால் முற்பிறவி

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸ்ரீ ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## भावे चोपलब्धेः

### 15 பாவே சோப லப்தே;

காரண வஸ்து ஒன்று இருந்தால்தான் கார்யத்தைக் காணலாம். மண் இருந்தால்தான் அதில் பானையைக் காணலாம். பிரும்மமென்ற காரண வஸ்து இருந்தால் தான் கார்யமான உலகத்தைக் காணமுடியும். ஆதலால் கார்யம் காரணத்தைவிட வேறல்ல.

## सत्वाच्चावरस्य

### 16 ஸத்வாச்சாவ ரஸ்ய

கார்யம் காரண வஸ்துவில் முன்னமேயே இருந்தால் தான் கார்யம் உண்டாகும். "இந்த உலகம் முன்னே ஆத்மா என்ற ஒன்றுகவே இருந்தது" என உபநிஷத் கூறுகிறது. எள்ளில் எண்ணெய் முன்னமிருப்பதால் தான், அதைச் செக்கிலிட்டு ஆட்டும் பொழுது கார்ய மான எண்ணெய் உண்டாகிறது. மணலை எத்தனைமுறை செக்கிலிட்டு ஆட்டினுலும் எண்ணெய் உண்டாவதில்லை. ஆதலால் காரண வஸ்துவில் கார்யமிருக்கிறது. இது இரண்டும் ஒன்றேதான். பேதமில்லை.

## असद्व्यपदेशान्नेतिचेन्नधर्मान्तरेण वाक्यशेषात्

### 17 அஸத்வ்யபதே ஶாந் நேதி சேந்ந। தர்மாந்தரேண வாக்ய ஶேஷாத்॥

"இது முன்னே அஸத்தாகவே இருந்தது," என சாந் தோக்யம். "அஸத்தாக இது முன்னே இருந்தது" என

75

தைத்திரிய உபநிஷத்துங் கூறுவதால் கார்ய வஸ்துவான உலகம் காரணமான பிருமத்தினிட மிருந்தது என எப்படிக் கூறுவது ? எனில், அப்படியல்ல அதன் கருத்து! காரணத்தில் அடியோடு கார்யமில்லை என அது கூற வில்லை. அது ஸூக்ஷ்மமாக இருந்தது ! என அந்த பிர கரணத்திலுள்ள வாக்ய ஶேஷம் கூறுவதால் காரணத்தில் கார்ய மிருந்தது. அவைகளில் பேதமில்லை என்பது ஸ்பஷ்டம்.

## युक्तेः शब्दान्तराच्च

### 18 யுக்தே ஶப்தாந்தராச்ச

வேத மிருக்கட்டும், வெறும் யுக்தியாகப் பார்த்தா லும் கூட காரணத்தில் கார்யம் ஸூக்ஷ்மமாக இருக் கின்றது என்பதை ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும். தயிர் வேண்டு மென்பவன் பாலைத் தேடிக் காய்ச்சித் தோய்க்கிறான். பானையை வேண்டுபவன் பாலைத் தேடுவதில்லை. மண்ணைத்தான் தேடுகிறான். ஸ்வர்ணாப ரணம் அணிய விரும்புபவன் தங்கத்தையேதான் தேடு கிறான். மண்ணைத் தேடுவதில்லை. ஏன்? பாலில் பானை இல்லை ? மண்ணில் தயிரில்லை ? மரத்தில் தங்க ஆபரண மில்லை ? "இந்த உலகம் ஸத்தாகவே இருந்தது" என வும் சுருதி கூறுகிறது.

## पटवच्च

### 19 படவச்ச

மடித்து வைத்திருந்த வஸ்த்ரம் எவ்வளவு அகலம் ? எவ்வளவு நீளம் ? எனத் தெரியாமல் அவ்யக்தமாக இருப் பது போல் காரணத்தில் கார்யமிருக்கிறது. பிரித்தபின் வ்யக்தமாகிறதல்லா ?

---

76

## यथाच प्राणादि

20 யதாச ப்ராணுதி

ப்ராணுயாமம் செய்து பிராணுபாநாதிகளை உள்ளே அடக்கும் போது உடல் உயிருடன் வாழமாத்திரம் ஸாதகமாக இருக்கிறது. மற்றபொழுது வெளியில் போகிறது. உள்ளே வருகிறது. இந்த ஶக்தி உள்ளே பிராணனிடம் ஸூக்ஷ்மமாக இருக்கிறது. பிறகு கார்யமாக வருகிறது. அதைப்போல் உலகம் காரணவஸ்துவில் ஸூக்ஷ்மமாக இருக்கிறது.

## இதர வ்யபதேசாதிகரணம் 3 ஸூத்ரம்.

## इतर व्यपदेशात् हिता करणादि दोषप्रसक्तिः

21 இதர வ்யபதேசாத் ஹிதாகரணுதி தோஷப்ரஸக்தி:

பிரும்மமே ஜகத் காரணம் என்ருல் தனக்கே அது கஷ்டத்தை உண்டு பண்ணிக்கொள்வதாகும். எப்படி எனில் பிரும்மத்தினிடம் ஜீவன் லயமாகிருன். அல்லது பிரும்மே ஜீவனுகிருன் என உபநிஷத்துகள் கூறுவதால் ஜீவனும் பிரும்மமும் ஒன்றென ஆகின்றது. அத்தகைய பிரும்மமே ஜகத்தைப் படைக்கிறது என்ருல், ஜீவனை தனக்குக் கிழத்தன்மை மரணம் முதலிய கஷ்டங்களைத் தானே தேடிக்கொள்கின்றது என்ற தோஷம் ஏற்படுகிறது. ஆதலால், பிரும்மமே ஜகத் காரணம் என்பது சரியல்ல என்று தார்க்கிகர் ஆக்ஷேபம் சொல்கின்றனர். இது பூர்வபக்ஷ ஸூத்ரமாகும்.

## अधिकंतु भेद निर्देशात्

22 அதிகந்து பேத நிர்தேஶாத்

பிரும்மம் ஜீவனுக ஆனலும் ஜீவன் பிரும்மமாக ஆனலும் ஜீவனைவிட அதிகமானபின் பிரும்மா. அவனே

---

பிறந்த வீட்டிலிருந்து பணம் கொண்டுவா என

ஜகத்தைப் படைக்கிறுன் என்பதால் தனக்கு அஹித மானதைத் தானே தேடிக்கொள்கிறுன் என்ற தோஷத் திற்கு இடமில்லை.

ஆத்மாவிற்கும் ஜீவனுக்கும் பேதமுண்டு என்று பலவிடங்களில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஜீவன் பிரும் மத்துடன் ஐக்யமானபோது ஸ்ருஷ்டி முதலிய வியவ ஹாரங்களுக்கே இடமில்லையே. ஜீவன் பிரும்ம ஸ்வரூபி யாகிவிட்டாலும் உலகஸ்ருஷ்டி முதலிய வியவஹாரங்கள் அதற்குக் கிடையாது.

## अश्मादिवत्च तदनुपपत्तिः

### 23 அஶ்மாதிவத்ச ததநுப பத்தி:

எந்தவிதவான மாறுதலுமில்லாத ஒரே ரூபமான பிரும்மமே ஜகத்காரணமானுல் காரணவஸ்துவைப்போல் கார்ய வஸ்துவும் எந்தவித மாறுதலுமின்றி ஒரே மாதிரி யாக அல்லவோ இருக்கவேண்டும்? அப்படி இல்லையே!

ஆண், பெண், மண், விண், ஸுரர், அஸுரர் முதலிய பல விசித்திரமாக இருப்பதால் பிரம்மம் உலகக் காரண மாகாது என்று ஆக்ஷேபிக்க ஸமாதானம் கூறுகிறது இந்த ஸூத்ரம்.

ஒரே மண்ணில் விலையுயர்ந்த வைரக்கல் ஸாதாரண மான கருங்கல். அதிலும் சந்தனக்கல், கூழாங்கல், மாக் கல் முதலிய பல விசித்ரமான கற்கள் இருப்பதுபோல் ஒரே பிரும்மத்தினிடமிருந்து விசித்ரமான பலவகைஉலக முண்டாகலாம். கார்ய பொருளைக் கொண்டு காரண வஸ்துவும் விசித்ரமாயிருக்க வேண்டுமென நிச்சயிக்க முடியாது.

---

அடிக்கின்றனர் சிலர். மாமியார் மாமனும்

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸ்ரீ ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

உபஸம்ஹார தர்ஶந அதிகரணம் 2 ஸூத்ரம்.

## उपसंहार दर्शनात् नेतिचेन्न क्षीरवत् हि

24 உபஸம்ஹார தர்ஶநாத் நேதி சேந்நக்ஷீரவத்ஹி.

ஒரு கார்யத்தைச் செய்யப் பல கருவிகளைக் கைக் கொள்ள வேண்டி இருக்கிறது. ஒரு பானையைச் செய்ய, குயவன், மண், தண்டம், சக்ரம் முதலியவைகளைக் கொண்டே செய்கிருன். பிரும்மம் ஒன்றே இருக்கிறது. அதைத் தவிர வேறு வஸ்து இல்லை என்பதால் அது உலகிற்குக் காரணமாக இருக்கமுடியாதென ஆக்ஷேபம். அப்படி இல்லை.

தன்னைத் தவிர வேறு ஸஹாயத்தை அபேக்ஷிக்காமலே. பால் தயிராவதையும், ஜலம் பனியாவதையும் காண்கிறோம். தற்சமயம் பால்விரைவில் தயிராவதற்காக புரை-மோர்-குத்துகிறோம். அப்படிச் செய்யாவிட்டாலும் கொஞ்ச காலத்தில் பால் தயிராகிறது. நீர் பனியாகிறது. அதேபோல் வேறு சாதனமின்றி பிரும்மம் உலகாகிறது.

உஷ்ணத்தால் அவை அப்படியாகின்றன எனில் வாயுவோ, ஆகாசமோ, மற்றெந்த வஸ்துவோ அந்த உஷ்ணத்தால் தயிராக, பனியாக ஆவதில்லை. விசித்ரமான உலகைப் படைக்கத்தக்க சக்தி பிரும்மத்தினிடமே இருக்கிறது. அது பூர்ணமான வஸ்து.

## देवादिवदपि लोके

25 தேவாதி வதபிலோகே.

சைதன்யமில்லாத ஜடமான பால் தயிராகலாம். சேதனமான ப்ரும்மம், ஸஹாயமில்லாமல் எப்படி

---

கு எனில் இருள், ரு எனில் அதை அகற்றுவது

விசித்ரமான உலகைப் படைக்குமெனில்? சேதனர்களான தேவர் பித்ருக்கள் ரிஷிகள் வேறு ஒரு ஸாதநமுமில்லாமலே தனது தபஸ் ஸித்தியால் வேறு சரீரத்தையும் வீட்டையும் பொருளையும் மற்றவைகளையும் படைப்பதுபோல் பிரும்மம் விசித்ரமான உலகை வேறு ஸாதநமின்றி படைக்கின்றது.

சிலந்திப்பூச்சி தானே நூலைப் படைத்து வலைபோல் பின்னி அதில் சிக்கிக் கொள்ளும் ஈ முதலியவைகளைச் சாப்பிட்டு, பிறகு அந்த நூலை தனக்குள்ளே லயப்படுத்திக் கொள்கிறது. கொக்கு புருஷ ஸம்பந்தமில்லாமல் தானே கர்ப்பமாகிறது.

### க்ரத்ஸ்நப்ரஸக்த்யதிகரணம் 4-ஸூத்ரம்.

## कृत्स्न प्रसक्ति निरवयवत्व शब्द कोपोवा

26 க்ருத்ஸ்நப்ரஸக்தி: நிரவயவத்வ ஶப்தகோபோவா

பிரும்மமே உலகாக ஆகின்றது என்பதை ஆக்ஷேபிக்கும் ஸூத்ரமிது. பிரும்ம ஸ்வரூபம் எல்லாம் உலகமயமாகின்றது என்றால் உலகம் தவிர வேறு பிரும்மம் இல்லாததால் மோக்ஷமடைவதற்காக "பிரும்மத்தைக் காண்! கேள்! நினை, என்பது போன்ற வேத வாக்யங்களெல்லாம் பயனின்றி வீணாகும். பாதி பிரும்மம் உலகமாக மாறுகிறது. மிகுதியான பாதி பிரும்மத்தைப் பெறலாம். அதற்காகத்தான் ஆத்மாவைக் காண். கேள்! என வேதம் கூறுகிறது என்றால் ஆத்மாவிற்கு அவயவம் கிடையாது. அது பூர்ணமானப்பகுதி. கால் அரைக்கால்— என்று பிரிக்க முடியாத -"பூர்ணவஸ்து என்ற உபநிஷத்துகள் அர்த்தமில்லாததாகும். ஆதலால் பிரும்மம் உலக்காரணமாக இருக்க முடியாது என்று ஆக்ஷேபிக்க அடுத்த ஸூத்ரங்கள் இதற்குப் பரிஹாரம் கூறி பிரும்மமே உலககாரணம் என ஸித்தாந்தம் கூறுகின்றன. இது பூர்வபக்ஷ ஸூத்ரமாகும்.

---

80

## श्रुतेस्तु शब्द मूलत्वात्

### 27 ஶ்ருதேஸ்து ஶப்த மூலத்வாத்

"உலகமாக பரிணாமமடைய, நான் இந்த மும்மூர்த்திகளாகி இந்த ஜீவனான ஆத்மாவால் பிரவேசித்து நாம ரூபங்களை விவரமாகச் செய்கிறேன்.'' இதன் மஹிமை அத்தகையது. அதனால் மூத்தவனானவன் புருஷன். அவனது பாதமே ஸகல ப்ராணிகளுமாகும். மூன்று பாதம் அழிவில்லாமல் ஆகாயத்திலிருக்கிறது என்பது போன்ற வியவகாரங்கள் அதற்குக் கிடையாது.

## अश्मादिवत् च तदनुपपत्तिः

### 28 அஶ்மாதிவத்ச ததநுபபத்தி:

எந்தவிதமான மாறுதலுமில்லாத ஒரே ரூபமான பிரும்மமே ஜகத்காரணமானால் காரண வஸ்துவை வேத வாக்யங்கள் கூறுகின்றன. பிரும்மம் பூரணமாய் கார்ய ஸ்வரூபமாக இருந்தால் தூங்கும்போது ஜீவன் ஆத்மாவினிடம் சேருகிறது என்ற உபநிஷத் அர்த்தமில்லாமல் போகும். கண்ணுக்கோ மற்ற இந்திரியங்களுக்கோ புலப்படாத விஷயத்தில் வேதந்தான் பிரமாணம். வேதமோ பிரும்மம். பூர்ணமாகவோ ஏகதேசமாகவோ உலகமாக மாறவில்லை. உலகமாக மாறிற்று என்பதெல்லாம் மாயையால், கல்பிதமே தவிர உண்மையிலல்ல. பிரும்ம ஸ்வரூபமே வேதஶப்தத்தால்தான் அறியத்தக்கது. அந்த வேதம் சுத்த பிரும்மம், பூர்ண உலகமாக மாறவில்லை என்று கூறுவதால் முன் கூறிய தோஷங்கள் தோன்றாது.

## आत्मनि चैवं विचित्राश्च हि

### 29 ஆத்மநி சைவம் விசித்ராஶ்சஹி.

ஆத்மஸ்வரூபம் சிறிதுகூட மாறாமல் உலகைப்படைக்கின்றது. கனவு காண்கின்றவன் தனது ஆத்மாவிற்கு

யாதொரு மாறுதலுமின்றி, தேர் குதிரை வழி முதலியவைகளைப் படைத்து, அதில் ஸஞ்சாரம் செய்வதாக அவைகளைப் படைப்பதைப் பார்க்கின்றோம். அதேபோல் தேவர்களும் மாயாவிகளும் தனது ஸ்வரூபத்திற்கு யாதொரு மாறுதலுமின்றி வஸ்துக்களைப் படைக்கின்றனரல்லவா? ஸர்வ வல்லமையுள்ள பரமன் அப்படிப் படைப்பதில் ஆஶ்சர்யமென்ன?

## स्वपक्षदोषाच्च

### 30 ஸ்வபக்ஷ தோஷாச்ச

ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற மூன்று குணங்களும் ஸமமாகச் சேர்ந்தது பிரதாநம். அதிலிருந்தே உலகம் உண்டாகின்றது, என்ற ஸாங்க்ய மதத்திலும் அணுவே ஜகத் காரணம். அணுவுடன் அணு சேர்ந்து த்வயணுகம் முதலியவைகளால் ஜகத் ஸ்ருஷ்டிக்கப்படுகின்றது என்ற அணுவாதிகள் விஷயத்திலும் முன்னே கூறப்பட்ட தோஷங்கள் இருக்கின்றன. நமது பிரும்மமே ஜகத் காரணம் என்ற மதத்தில் நாம் பரிஹாரம் கூறிவிட்டோம். ஆதலால் பிரும்மமே ஜகத்காரணம் என்பது மிகப் பொருத்தமானது, தோஷமில்லாதது.

### ஸர்வோபேதாதி கரணம் 2 ஸூத்ரம்.

## सर्वोपेताचतद्दर्शनात्

### 31 ஸர்வோபேதா ச தத்தர்ஶநாத் ।

பரமாத்மா விசித்ரமான உலகைப் படைக்கத் தக்க ஶக்தி வாய்ந்தவர் என உபநிஷத்துகள் கூறுகின்றன. ஸர்வ கர்மா, ஸத்ய காமன், ஸத்ய ஸங்கல்பன், ஸர்வக்ஞன், அவனது ஆணைப்படி சந்த்ர ஸூர்யர் நடக்கின்றனர் என்பது போன்ற கருத்துகள் அவரது பெருமையை விளக்குகின்றன. அத்தகைய ஶக்தியைக் கொண்டு தனது ஸ்வரூபத்தில் யாதொரு மாறுதலுமின்றி விசித்ரமான உலகைப் படைக்கிறார் பரமாத்மா.

---

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸ்ரீ ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## विकरणत्वात् नेति चेत्तदुक्तम्

## 32 விகரணத்வாத் நேதி சேத்ததுக்தம்

"கண்ணில்லாதது, காதில்லாதது, மநமில்லாதது, வாக்கில்லாதது, ஆத்மா" என வேதங் கூறுவதால் எப்படி விசித்திரமான உலகைப் படைப்பார்? தேவதைகளும் மாயாவிகளும் ஆத்யாத்மிகம் ஆதி தைய்விகம் முதலிய ஸஹாயங்களைக்கொண்டு படைக்கின்றனர். பிரும்மத்தினிடம் "அதுவு மில்லை, இதுவு மில்லை" என்று ஒன்றுமே இல்லை என ஶ்ருதி கூறுவதால் ஆத்மா எப்படி விசித்திர உலகைப் படைக்கும்? என்றால், தேவாதிவதபி லோகே! என்ற ஸூத்திரத்தில் பதில் கூறப்பட்டது. ஜீவனுக்குக் கரணாதிகள் இல்லாமல் ஒரு கார்யமும் செய்ய முடியாது என்றதால், ஸர்வஶக்தி வாய்ந்த பிரும்மத்தாலும் முடியாதெனக் கூறலாமா?

"அபாணி பாத! கையில்லாவிடினும், காலில்லாவிடினும் வேகமாகச் செல்வான், பிடிப்பான்" என்று உபநிஷத் கூறுகின்றது.

## ப்ரயோஜநவத்வாதிகரணம் 2 ஸூத்ரம்.

## न प्रयोजनवत्वात्

## 33 நப்ரயோஜநவத்வாத்.

ஸர்வ க்ஞானியான பரமாத்மா இந்த உலகைப் படைத்தார் என்பது பொருத்தமல்ல. அறிவுள்ள ஒருவன் ஏதேனும் ஒரு பிரயோஜநமுமில்லாமல் ஒரு கார்யத்தைச் செய்யமாட்டான். அப்படிச் செய்தால் அவன்

---

பித்தனுவான். ஸர்வக்ஞனை பரமாத்மா இந்த உலகைப் படைப்பதால் என்ன பயனை அடைகிருர்? நித்ய த்ருப்தனுக பூர்ணனுக இருக்கிருர். ஆத்மா எனக் கூறுவதால் இந்த உலகைப் படைத்து அவர் யாதொரு பயனையும் அடையப்போவதில்லை. ஆதலால் ஆத்மா உலகைப் படைத்தார் என்பது பொருத்தமில்லை என்று இந்த ஸூத்ரத்தால் பூர்வ பக்ஷம் கூறப்படுகிறது.

## लोकवत्तु लीलाकैवल्यम्

## 34 லோகவத்து லீலா கைவல்யம்.

ஸர்வ ஸுகத்தையும் அனுபவிக்கும் அரசன் யாதொரு பலனையும் விரும்பாமல் விளையாட்டாக சில கார்யங்களைச்செய்வது போலும் யாதொரு பயனையும் விரும்பாமல் நமது நாஸியிலிருந்து காற்று உள்ளும் புறமும் போவது போலும், ஆத்மா ஒருவித பலனையும் கோராமல் விளையாட்டாக உலகைப் படைக்கிருர்.

மற்றவர் பெரிய பலனை நாடி விளையாடாவிட்டாலும் விளையாட்டில் ஒரு ஜயம் ஏற்பட்டால் ஸந்தோஷமும் பொழுது போக்குமாவது, ஏற்படும். நித்ய த்ருப்தனை, பரிபூர்ண காமனை ஆத்மாவிற்கு அந்தப் பயனுமில்லை. ஸ்ருஷ்டியும் கூட பரமார்த்த ஸத்ய நிலையில் ஸ்ருஷ்டிக்கவில்லை. ஸ்வப்நத்தில் தோன்றுவதுபோல் ஸ்ருஷ்டியும் வாஸ்தவமல்ல.

## வைஷம்ய நைர்க்ருண்யாதி கரணம்.

## वैषम्य नैर्घृण्ये न सापेक्षत्वात्तथाहि दर्शयति

## 35 வைஷம்ய நைர்க்ருண்யே ந ஸாபேக்ஷ த்வாத்ததாஹி தர்ஶயதி.

பரமாத்மா லீலையாக உலகைப் படைத்தார் எனில் அது பொருத்தமில்லை. எல்லோரிடமும் அவர் ஸமமாக

இல்லாமல் ஸுகத்தையே அனுபவிக்கும் தேவரையும், துக்கத்தையே அனுபவிக்கும் பசு, பக்ஷி, மிருகங்களை யும் இன்ப துன்பங்களைக் கலந்து அனுபவிக்கும் மநுஷ்யரையும் படைக்கிறார். பிரளய காலத்தில் எல்லோரையும் அழித்துத் தனக்குள் லயப்படுத்திக் கொள்கிறார், என்ற தோஷங்கள் ஏற்படுவதால் பிரும்மம் உலக ஸ்ருஷ்டி ஸ்திதி லயங்களுக்குக் காரணம் எனக் கூறக் கூடாது, என்று ஆக்ஷேபிக்க பதில் கூறப்படுகிறது.

தன்னிஷ்டப்படி ஈச்வரன் உலகைப் படைப்பதானால் இந்த தோஷம் தோன்றும். அவர் பிராணிகள் செய்யும் தர்மாதர்மங்களுக்கேற்றபடி ஸ்ருஷ்டிக்கிறார். ஸுகத்தையே அனுபவிக்கும் தேவர் முன்னர் தர்மத்தையே செய்திருப்பர். அதர்மத்தையே செய்திருந்தால் துன்பத்தையே அனுபவிக்கும் பசு பக்ஷிகளாகப் படைக்கப் படுகிறார். தர்ம அதர்மங்களைக் கலந்து செய்பவர் இன்ப துன்பங்களை அனுபவிக்கும் மனிதராக ஸ்ருஷ்டிக் கப் படுகிறார். அவரவர் கர்மாவிற்கேற்றபடி படைப்பதால் பிரும்மம் ஸமமானவரே. தயையுள்ளவரே.

ஈச்வரன் மழைபோல் பொதுவானவர். நெல்லை விதைத்தால் நெல், கொள்ளை விதைத்தால் கொள், முள் விதை விதைத்தால் முள் செடி, உண்டாகின்றது. அதிலும் நல்ல விதையானால் நன்கு விளைகிறது. பிஞ்சு விதையானால் முளைத்துக் கருகிப் போகிறது. ஒரே மழையால் தென்னை மரம் கரும்பு தித்திப்பான நீரைத் தருகிறது, எட்டி வேப்ப மரம் கசப்பான கனி தரும் ?

## न कर्मविभागादितिचेन्न अनादित्वात्

**36 ந கர்ம விபாகாதிதிசேந்ந அநாதித்வாத்.**

பரமாத்மா அவரவர் கர்மாவிற்கேற்றபடி ஏற்றத் தாழ்வுடன் உலகைப் படைக்கிறார் எனில் உலகம் ஸ்ருஷ்டி

---

ஆவதற்கு முந்தி கர்மா ஏது? முதல் ஸ்ருஷ்டியில் ஏற்றத் தாழ்வுடன் தானே படைக்கிறார்? எனில்! அதற்கு முந்திய பிறவியில் செய்த புண்ய பாபங்களுக் கேற்றபடி படைப்பதால் பகவான் பக்ஷபாதியல்ல உலகம் அநாதியானது.

## उपपद्यते चाप्युपलभ्यते च

37 உபபத்யதே சாப்யுபலப்யதே ச.

உலகம் அநாதி என்பது மிகப் பொருத்தமானதே. ஒரு காரணமுமின்றி பகவான் படைக்கிறார் என்றால் ஜீவன்முக்தர்கள் கூடப் படைக்கப்படுவார் என்றாகும். காரணமின்றி ஒருவனைத் துக்கமுள்ளவனாகவும் ஒருவனை சுகப்படுபவனாகவும் படைக்க மாட்டார். வேதமும் உலகமநாதி முன்னிருந்தபடியே உலகைப் படைத்தார், எனக் கூறுவதால் மரமும் விதையும் போல் உலகமநாதி யேயாம்.

## ஸர்வ தர்மஉபபத்யதிகரணம்.

## सर्वधर्मोपपत्तेश्च

38 ஸர்வதர்மோபபத்தேஶ்ச

பூர்வ கர்மாவைக்கொண்டே ஏற்றக் குறைவாக உலகைப் படைக்கிறார் எனப்பட்டதல்லவா, அப்படியே உலகாகமாறி உலகைப் படைக்கும் பரமாத்மாவினிடம் காரணஸாதனமான குணங்கள் இருக்கவேண்டுமே. அவன் நிர்குணன் அல்லவா? எனில் நிர்குணனானாலும் ஸர்வக்ஞன், ஸர்வஶக்தி உள்ளவன். எனவே ஸ்ருஷ்டிகாலத்தில் அந்த தர்மங்களை ஏற்றுக்கொள்வதால் பரமனே உலககாரணம், ப்ரதாநாதிகளல்ல, என்ற விஷயம் மிகப் பொருத்தமானது.

**இரண்டாம் அத்யாயம் முதல்பாதம் முற்றிற்று.**

---

எப்படிப் பூஜிக்கலாம் தேவியை?

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸ்ரீ ஸதாசிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## இரண்டாம் அத்யாயம்—2-ம் பாதம்.

8 அதிகரணம்—45 ஸூத்ரம்.

பர மதத்தை நிராகரிப்பது இந்த பாதம்.

---

### ரசந அநுபத்தி அதிகரணம்—10 ஸூத்ரம்.

रचन अनुपपत्तेश्च नानुमानम्

ரசந அநுப பத்தேஶ்சந அநுமாநம் ।

மோக்ஷத்தை அடைய விரும்புகின்றவனுக்கு வேதாந்த ஸித்தாந்தத்தை மாத்ரம் அறிந்தால் போதாதா? மற்ற மதத்தின் கருத்தை அறிந்து, அது சரியல்ல எனக் கண்டிப்பது அவஶ்யமா? எனில் — ஆம், மிக ப்ரஸித்தமான ஸாங்க்யம் முதலிய சாஸ்த்ரங்கள் அழகாக வாதம்செய்து யுக்திகளைக் கூறுவதால், அவைகளையும் மோக்ஷ ஸாதநமென ஒரு சிலர் கருதலாம். அதற்கு வேத ப்ரமாணம் இல்லாததால் அதை ஏற்கக் கூடாது என்பதற்காகவே அவைகளைக் கண்டிக்கவேண்டியிருக்கிறது.

முதலத்யாயம் முதற் பாதத்திலேயே பிரதாநம் (என ஸாங்யர் கூறுவது) உலக ஸ்ருஷ்டிக்குக் காரணமில்லை எனக் கூறப்பட்டதே! மறுபடியுமதை விசாரிப்பதேன்? முன்னர் வேதப்ரமாணத்தைக்கூறி அது மறுக்கப்பட்டது. இங்கு யுக்தியினலும் பிரதாநம் உலக காரணமல்ல எனக் கூறப்படுகிறது.

---

ஸ்நாநமாடித் தங்கள் பாபத்தை நீக்குகின்றன

ஸாங்க்யாதிகள் பிரமாணமா? அல்லவா? என விசாரித்து பிரமாண மல்ல என இங்கு கூறப்படுகிறது. ஸுகம் துக்கம் முதலிய மாறுபாடுகள் நிறைந்த இந்த உலகை, ஸத்வம் ரஜஸ் தமஸ் முதலியவைகளின் ஸம சேர்க்கையான பிரதாநமே படைத்தது என்பது பொருத்தம் என்பது அவர்களது வாதம்.

அசேதநமான பொருள் சிறந்த சில்பிகளால் கூட அமைக்க முடியாத அதி விசித்ரமான உலகை எப்படிப் படைக்கும்? இந்தக் காரணத்தால் இந்தக் காரியத்தை இப்படி அமைக்க வேண்டும் என்ற அறிவுள்ளவனே சிறந்த அரண்மனையை அமைக்கிருன். மிக மிக விசித்ரமான விசாலமான இந்த 14 உலகை ஜடமான ப்ரதாநமே படைக்கிறது என்று கூறும் ஸாங்க்ய ஶாஸ்த்ரம் ப்ரமாணமல்ல.

### प्रवृत्तेश्च

### உ ப்ரவிருத்தேஶ்ச ।

ஜடமான மண் கடமாக ஆவதற்குத் தானே முயற்சிப்பதில்லை. மூன்று குணங்களின் ஸமநிலையான பிரதாநம் அசேதநமானதால் உலகைப் படைக்கும் முயற்சி அதனிட மில்லை! ஆதலின் பிரதாநம் உலக காரணம் என்ற ஸாங்க்ய மதம் ஏற்கத் தக்கதல்ல,

### पयोऽम्बुवत् चेत्तत्रापि

### ௩ பயோம்புவத் சேத்தத்ராபி ।

அசேதநமான பால் குழந்தைகளை வளர்ப்பது போலும், ஜடமான ஜலம் உலகில் பெருகித் தானே உலகை ரக்ஷிப்பதுபோலும் ஜடமான ப்ரதாநம் உலகிற்குக் காரணமாகலாம் எனில், பாலும் நீரும் ஜடமானலும் அவைகளில் சேதநனை பரமாத்மா தங்கி உலகை

---

88

ரக்ஷிக்கிறார். ஆதலால் கேவல ஜடவஸ்து எதையும் செய்யாது.

## व्यतिरेक अनवस्थितेश्च अनपेक्षत्वात्

4 வ்யதிரேக அநவஸ்திதேஸ்ச அநபேக்ஷத்வாத் ।

ப்ரதாநத்தில் மூன்று குணங்களின் ஸம நிலை தவிர வேறு வஸ்து கூறப்படவில்லை. அந்த ஸித்தாந்தத்தில் கூறப்படும் புருஷனே ஒன்றையும் அபேக்ஷிப்பதில்லை. பற்றற்றவனாய் உதாஸீநனாக இருக்கிறான் என்பதால் ஜலத்தினுள்ளே இருந்து பிரும்மம் உலகில் பிரவிருத்தி செய்விப்பதுபோல் பிரதாநத்திலிருந்து புருஷன் பிரவிருத்தி செய்விக்கிறான் என அந்த மதம் ஏற்காததால் அந்த மதம் பிரமாணமல்ல.

## अन्यत्राभावाच्च न तृणादिवत् ।

5 அன்யத்ர அபாவாச்ச ந த்ருணாதிவத் ।

வேறொன்றையும் அபேக்ஷிக்காமல் புல் பாலாக மாறுவது போல் பிரதாநம் ஒன்றையும் அபேக்ஷிக்காமலேயே உலக காரணமாகலாமெனில் அப்படியல்ல. பசுவைத் தவிர காளையினிடம் புல் பாலாவதில்லை. பசுவை அபேக்ஷித்துத்தான் புல் பாலாகிறது.

## अभ्युपगमेपि अर्थाभावात्

6 அப்யுபகமேபி அர்த்தாபாவாத் ।

ஸ்வதந்த்ரமாகவே பிரதாநத்திற்கு உலகைப் படைக்கும் பிரவிருத்தி இருக்கிறது என்று ஒத்துக்கொண்டால் கூட ஒன்றையும் அபேக்ஷிக்காதது, ஜீவனுக்குப் புருஷார்த்தத்தையுந் தான் அபேக்ஷிக்காது. பிரதாநம் புருஷார்த்த ஸாதகம் என்ற அந்த மதக் கொள்கையும் வீணாகுமல்லவா ?

---

எல்லோருக்குமது சுலபமாகக் கிடைப்பதில்லை

## पुरुषाश्मवत् इति चेत्तथापि

7 புருஷாஶ்மவத் இதி சேத்ததாபி।

காலில்லாத மனிதன் ஒருவன், கண்ணில்லாத மனிதன் தோளில் அமர்ந்து, இந்த வழியாகப் போ என்று போகச் சொல்கிறான் குருடனை. அயஸ்காந்தக்கல் தான் அசையாமலிருந்தாலும் அருகில் வரும் இரும்பு ஊசியை அசையச் செய்வது போலும் ப்ரதாநம் ஜடமாக அசையாததாக இருந்தாலும் புருஷனுடைய ஸன்னிதாநத்தால் பிரவிருத்தி யுள்ளதாகச் செய்கிறது என்றாலும் பிரதாநம் ஸ்வதந்தரமானது தானே; பிரவிருத்திக்கச் செய்வது என்ற ஸித்தாந்தத்திற்கு விரோதமாகும். புருஷன் தாமரை இலையிலுள்ள நீர் போல் பற்றற்றவன் என்ற கொள்கைக்கும் முரணாகும்.

## अङ्गित्वानुपपत्तेश्च

8 அங்கித்வ அநுபபத்தேஶ்ச।

மூன்று குணங்களும் ஸமமாக இருத்தலே பிரதாநமாதலால் அது ஏற்றத்தாழ்வுள்ள உலகைப் படைக்கிறதென்றால் ஒன்று அங்கமாகவும், ஒன்று அங்கியாகவும் இருத்தல் வேண்டுமல்லவா? பிரதாநத்தில் அது பொருந்தாது. பிரதாநத்திற்கே படைக்கும் சக்தி உண்டெனில் எப்போதுமது படைத்துக்கொண்டே இருக்க வேண்டும். புருஷனால் அந்த சக்தி எனில் அவனே பற்றற்றவனென்கிறீர்கள். ஆதலால் பிரதாநம் உலக ஸ்ருஷ்டி காரணம் அல்ல.

## अन्यथा अनुमितौ च ज्ञशक्ति वियोगात्

9 அன்யதா அநுமிதௌ ச க்ஞஶக்தி வியோகாத்।

எப்போது உலகம் உண்டாகிறதோ அப்போதுதான் ஶக்தி உண்டாகிறது என்று அநுமாநம் செய்தாலும் கூட ஜடமான பிரதாநத்திற்கு க்ஞாந ஶக்தி இல்லாததால் அதுவும் பொருந்தாது.

---

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸ்ரீ ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## विप्रतिषेधाच्च असमञ्जसम्

10 விப்ரதிஷேதாச்ச அஸமஞ்ஜஸம்.

ஓரிடத்தில் மஹத் என்பதிலிருந்து பஞ்சதன்மாத்ரைகளுண்டாகின்றன என்றும், மற்றோரிடத்தில் அஹங்காரத்திலிருந்தென்றும், ஓரிடத்தில் பதினோரு இந்திரியங்கள் என்றும், மற்றோரிடத்தில் பாஹ்யேந்திரியங்களை த்வக் இந்திரியத்திலடக்கி ஏழே இந்திரியங்கள்தான் எனவும் பரஸ்பர விரோதமாகக் கூறுவதால் ஸாங்க்ய மதம் அஸமஞ்ஜஸமானது — பொருத்தமில்லாதது — ஏற்கத்தக்கதல்ல.

### மஹத் தீர்க்காதிகரணம்—1 ஸூத்ரம்.

## महद्दीर्घवद्वा ह्रस्व परिमण्डलाभ्यां

11 மஹத் தீர்க்கவத்வா ஹ்ரஸ்வ பரிமண்டலாப்யாம்.

ப்ரதானமே ஜகத்திற்குக் காரணம் என்ற வாதம் சென்ற அதிகாரத்தால் நிராகரிக்கப்பட்டது. அணுவே ஜகத்திற்குக் காரணம். பிரும்மமல்ல என்ற வாதத்தை இதனால் நிராகரிக்கிறது இந்த ஸூத்ரம்.

சேதநமான பிரும்மம் ஜகத்திற்குக் காரணமென்றால் "காரண குணம் கார்யத்திலிருக்கும்" என்ற நியாயப்படி உலகெல்லாம் சேதந மயமாக அல்லவோ இருக்க வேண்டும்? ஆதலால், ஜடமான உலகைப் பிரும்மம் படைக்கவில்லை. அணுவே ஜகத்திற்குக் காரணம் என்கின்றனர் தார்க்கிகர்.

---

உன் மதத்திலும் காரணகுணம் கார்யத்தில் காணப் படவில்லையே ! காரணகுணமான அணு தன்மை கார்யமான உலகில் மஹத்தாகவும் தீர்க்கமாகவுமன்றோ இருக்கிறது ! அணுவாக ஹ்ரஸ்வமாகவும் இல்லையே ! தார்கிகரே ! காரண குணம் கார்யத்திலில்லை என ஏற்றுக்கொள்ள நேரிடுவதால், வேதாந்திகளுக்கும் காரண குணம் கார்யத்தில் இருக்கவேண்டும் என்ற அவச்யமில்லை. ஆதலால். பிரும்மம் அசேதநமான உலகைப் படைத்ததென்பதில் தோஷமில்லை.

## பரமாணு ஜகத்காரணமல்ல. — 6 ஸூத்ரம்.

## उभयथापि न कर्म अतस्तदभावः

12 உபயதாபி ந கர்ம அதஸ்ததபாவ: ॥

அணுவே உலக காரணம் என்ற வைஶேஷிக-தர்கர்-மதம் பிரமாணமல்ல என இங்கு கூறப்படுகிறது.

அசைவற்ற இரு பரமாணுக்கள் ஒன்று சேர்ந்து த்வ்யணுக த்ரயணுக மூலமாக உலகைப் படைக்கின்றன என்பது அந்த மத ஸித்தாந்தம். அப்படி அந்த பரமாணு ஒன்று சேரக் காரணமென்ன ?

ஒரு நிமித்தமில்லாமல் அசையாத பரமாணு ஒன்று சேருது. அதிலிருந்து த்வ்யணுகம் மஹத் முதலியன்வோ உலகோ உண்டானதென எப்படிக் கூறுவது ? படைக்கப்படும் உலகினது கர்மாவே காரணமென்னில், படைக்கப்படுவதற்குமுன் உலகம் இல்லாததால் யாதொரு கர்மாவுமில்லை. அணுவிற்கும் கர்மா இல்லை. உலகிற்கும் கர்மா இல்லை. ஆதலால் அணு உலக ஸிருஷ்டிக்கும் லயத்திற்கும் காரணமில்லை; ஆத்மாதான் காரணம்.

## समवायाभ्युपगमाच्च साम्यादनवस्थितेः

13 ஸமவாயாப்யுபகமாச்ச ஸாம்யாதநவஸ்திதே: ॥

இதனாலும் அணு உலக காரணமென ஏற்பதற்கில்லை.

---

எதையும் வாயில் போட்டு போகக்கூடாது

92

தனித் தனியான இரு பரமாணுக்கள் ஒன்று சேர்ந்து த்வ்யணுகத்தை உண்டுபண்ணுகின்றன. அது உலகைப் படைக்கிறது என்கின்றனர் அணுஸ்ருஷ்டி வாதிகள்.

இரண்டு அணுக்களால் உண்டுபண்ணப்படும் த்வ்யணுகம் பரமாணுவைவிட அத்யந்த பேதமுள்ளது. அதனால் அது ஸமவாய ஸம்மந்த முள்ளது. ஸமவாயமும் அந்த த்வ்யணுகங்களும் அத்யந்த பின்னமாக இருப்பதால் அது ஒரு ஸமவாய ஸம்மந்தத்தால் ஏற்பட்டது எனக் கூறவேண்டும். இப்படி ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு ஸம்மந்தம் கல்பித்துக்கொண்டே போனால் முடிவே இல்லை என்ற தோஷமேற்படும். ஆதலால் அணு உலக காரணம் எனக் கூறுவது சரியல்ல.

(ஸம்மந்த மல்லது காரணம் ஸமவாய அஸமவாய நிமித்த என மூவ்வகைப் படும். ஒரு பானை செய்யப் படும்போது களிமண் பானைக்கு ஸமவாயி காரணம். பானையும் மண்ணும் ஸமவாய ஸம்மந்தத்துட னிருக்கின்றன. பானையைச் செய்யும்போது குயவன் சக்ரம் சிறிய தடி இவைகளைக் கொண்டே செய்கிறான். அவை அஸமவாயி காரணம். அதாவது, அவை கார்யத்தைப் (பானையை) உண்டுபண்ணிவிட்டு பானையில் மண் ஒட்டிக் கொண்டிருப்பது போலில்லாமல் விலகி விடுகின்றன. அதேபோல் அதைச் செய்யும் குயவன் நிமித்த காரணமாவான். முறையே பானையில் மண் ஸமவாயி ஸம்மந்தம் சக்ரம் தண்டம் அஸமவாயி ஸம்மந்தம் குயவன் நிமித்த ஸம்மந்த முள்ளவனாகும் என்பது தர்க்க சாஸ்த்ர விதியாம்.

## नित्यमेव च भावात्

### 14 நித்ய மேவ ச பாவாத் ।

அணு உலகைப் படைக்கிறது என்பவரை நாடி 4 கேள்விகளைக் கேட்கிறோம். அதாவது, அணுவுக்கு

பிர்விருத்தி, அதாவது உலகைப்படைக்கும் குணம் (ஸதா) ஸ்வபாவமாக இருக்கின்றதா? அப்படியானால் எப்போதும் உலகைப் படைத்துக்கொண்டே இருக்க வேண்டுமே! அதில்லை. நிவிருத்தி ஸ்வபாவம் என்கிறாயா? அப்படியானால் ஸதா உலகை அழித்துக்கொண்டேயிருக்க வேண்டும். அப்படியில்லாததால் அணு நிவிருத்தி ஸ்வபாவமுள்ளது எனவுங் கூற முடியாது. பிரவிருத்தி நிவிருத்தி என்ற இரு ஸ்வபாவமுமுள்ளது எனவுங் கூறமுடியாது. பிரவிருத்தியிருந்தால் நிவிருத்தி இருக்காது. நிவிருத்தி இருந்தால் பிரவிருத்தி இருக்காது. இரண்டும் பரஸ்பர விரோதமானவை. இரண்டுமில்லாதது ஏதோ அதிருஷ்ட வசத்தால் உலகைப் படைக்கிறதென்றால் அந்த அதிருஷ்டம் ஸதா இருப்பதால் ஸதா ஸ்ருஷ்டித்துக்கொண்டே இருக்கவேண்டும். அதிருஷ்டம் நிமித்தமில்லை என்றால் எப்போதும் ஸ்ருஷ்டியே யிருக்காது. ஆதலால் அணு உலகைப் படைக்கிறதென்பது ஏற்றுக்கொள்வதற்கில்லை.

## रूपादिमत्वाच्च विपर्ययो दर्शनात्

### 15 ரூபாதிமத்வாச்ச விபர்யயோ தர்சநாத் ||

நான்கு வகையான ரூபாதிகளுமுள்ள (4 பூதங்களை) வஸ்துக்களைப் படைக்கும் பரமாணுவுக்கு ரூபாதிகள் உண்டு என தார்க்கிகள் கூறுகின்றனர். அது உலகைப் படைக்கின்றது என்று ஒத்துக்கொண்டால், அது அவயவமில்லாதது—நித்யமானது—அணுவானது—எனக் கூற முடியாது. அது அவயவமுள்ளது, அழிவுள்ளது என்க் கூறும்படி ஏற்படுகிறது. ஏனெனில்? நூலால் உண்டாகிறது வஸ்த்ரம். வஸ்த்ர காரணமான நூலுக்கு அவயவம் உண்டு. அழிவுமுண்டு என்பதைக் கண்ணால் காண்கிறோம். அவயவமில்லாதது நித்யமானதென்ற தர்க்க சாஸ்த்ர கொள்கைக்கு நேர் மாறாக இருப்பதால் அணு உலகக் காரணமில்லை.

---

# பிரம்மஸூத்ர வ்ருத்தி.

ஸதாசிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## उभयथाचदोषात्

16 உபயதா ச தோஷாத் ।

(கந்த ரூப ரஸஸ்பர்ச) வாஸனை உருவம் ருசி ஸ்பர்சம் என்ற நான்கு குணமுள்ள பிருதிவீ ஸ்தூல மானது. ரூபம் ரஸம் ஸ்பர்சம் என்ற மூன்று குணங்களுடையது ஜலம். அது ஸூக்ஷ்மமாகும். ரூபம் ஸ்பர்சம் என்ற இரு குண முள்ள தேஜஸ் ஸூக்ஷ்மதர மெனப் படும். ஸ்பர்ச குணம்மாத்ரம் உள்ள வாயு ஸூக்ஷ்ம தம மெனப்படும். இப்படிப்பட்ட பஞ்சபூதங்களிலிருந்தே உலகம் படைக்கப்படுகிறது. அணுவே உலகைப் படைக்கிறதென்றால் இப்படி அதிக குணங்களும் குறைவான குணங்களும் பரமாணுவிடம் இருப்பதாக ஒத்துக்கொள்ள வேண்டும். ஒத்துக்கொண்டால் அதிக குணமுடையவைகளுக்கு ரூபம் இருக்கவேண்டுமே. அப்பொழுது அணு என்ற ஸ்வரூபமே மாறிவிடுமே! ஆதலால் குணங்களால் அணுவுக்கு விருத்தியோ குறைவோ இருக்கிறதெனக் கூறமுடியாது.

அத்தகைய குணங்களில்லை. ஒவ்வொரு குணம் தானிருக்கிறது என்றால் தேஜஸ்ஸில் ரூபந்தானிருக்கும். ஸ்பர்சமிராது. நீரில் ரூப ஸ்பர்சங்களிராது. பிருதிவியில் கந்தந்தவிர மற்ற குணங்களிராது. நான்கு குணங்களுமே இருப்பதாக ஏற்றுக்கொண்டால் ஜலத்தில் வாஸனை தேஜஸில் கந்தரஸம், வாயுவில் கந்த ரூப ரஸங்கள் இருக்க வேண்டுமே. அப்படி இல்லையே! ஆதலால் இரண்டு வகையிலும் தோஷமிருப்பதால் அணு உலகிற்குக் காரணமில்லை.

---

உடனே ஸ்ரீநிவாஸனது படுக்கை உள்ளிருந்து

अपरिग्रहाच्च अत्यन्तमनपेक्षा ।

17 அபரிக்ரஹாச்ச அத்யந்த மநபேக்ஷா |

வேத ப்ரமாணத்தை ஏற்பவரில் மநு முதலிய சிலர், பிரதாநமே ஜகத்காரணம் என்று கூறும் ஸாங்க்ய மதத்தில் சில அம்ஸங்களையாவது ஒத்துக் கொள்கிறார்கள். அணுவே ஜகத்காரணம் என்று கூறும், தர்க்க மதத்தை வேதத்தை ப்ரமாணமாகக் கொண்ட எந்த சிஷ்டரும் ஒரு சிறுபாகத்தைக் கூட பிரமாணமாக ஏற்றுக் கொள்ளவில்லை. ஆதலால் மோக்ஷத்தை விரும்புவோர் இந்த தர்க்க மதத்தைச் சிறிதுகூட அபேக்ஷிக்கவில்லை. ஆதலின் இந்த ஸித்தாந்தம் சரியல்ல. பிராந்தியால் ஏற்பட்டதாகும்.

ஸமுதாயாதி கரணம்—10 ஸூத்ரம்.

समुदाय उभय हेतुकेऽपि तदप्राप्तिः ।

18 ஸமுதாய உபயஹேதுகேபி ததப்ராப்தி:

புத்தருக்கு வைபாஷிக, ஸௌத்ராந்திக, விஞ்ஞாநவாதி, ஸர்வ ஸூன்யவாதி என நான்கு சிஷ்யர்களுண்டு. இவர்களுடைய மதம் பிரமாணமா இல்லையா என்று விசாரித்து பிரமாணமில்லை என இங்கு கூறப்படுகிறது.

பரமாணுக்கள் ஒன்று சேர்ந்து பஞ்சபூத ஸமுதாயமாகின்றது. இந்த பூதங்களால் உண்டாகும் விஷயங்களும் இந்திரியங்களும் பரமாணு ஸமுதாயங்களே என்பது அவர்களின் ஸித்தாந்தம்.

கேவல பரமாணுக்கள் தானே சேர்ந்து பூதங்களாகவோ, இந்திரியங்களாகவோ ஆக முடியாது. இரண்டும் அசேதநமானதால் எப்படி சேர்ந்து ஸமுதாயமாகும்? இதைச் சேர்க்கும் சேதநனை அவர்கள் ஒத்துக் கொள்வதில்லை.

---

# பிரம்மஸூத்ர வ்ருத்தி.

ஸதாசிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

इतरेतर प्रत्ययत्वादिति चेन्नउत्पत्तिमात्रनिमित्तत्वात् ।

19 இதரேதர ப்ரத்யயத்வாதிதி சேந்ந உத்பத்தி மாத்ர நிமித்தத்வாத் |

உடல் உண்டாக, அவித்யா ஸம்ஸ்காரம் விக்ஞானம் நாமரூபம் முதலியன ஒன்றுக்கொன்று காரணம் என்று கூறினல், இவை ஒன்றை ஒன்று உண்டுபண்ண நிமித்தமாக இருக்கலாம். ஆனல் இந்த உடலில் ஜீவன் உண்டாகவேண்டும் என்பதற்கு என்ன காரணம்? ஜீவனது பூர்வ கர்மா பகவதிச்சைக் காரணமே தவிர அணு ஸமுதாயம் காரணமாகாது.

उत्तरोत्पादे च पूर्वनिरोधात् ।

20 உத்தரோத்பாதே ச பூர்வ நிரோதாத் |

கரசரணுதி ஸங்கம்–ஸமுதாயம்–உண்டாக அவித்யா அணு முதலியன காரணம் என்று கூறும் பௌத்த சிஷ்யர்கள் ஒவ்வொன்றும் ஒரு க்ஷணந்தானிருக்கும், அடுத்த க்ஷணத்தில் அது அழிந்து விடும் என்று கூறுவதால் காரணம் கார்யத்திலிருக்கவேண்டும். பானைக்குக் காரணமான மண் பானையிலிருப்பது போல, அணு அந்த ஸமுதாயமான உடலிலிருக்கவேண்டுமே! அந்த அணு க்ஷணந்தானே இருக்கும். அது அழிந்துவிட்டால் உடல் இல்லாமல்லவோ இருக்கவேண்டும். ஆதலால் இவை காரணமல்ல.

---

ஸுப்ரபாதம் உண்டி, உண்டி என்னுவது

## असति प्रतिज्ञोपरोधः यौगपद्यमन्यदा ।

21 அஸதி ப்ரதிக்ஞோபரோத: யௌகபத்ய மன்யதா |

காரணமே இல்லாமல் உண்டாகிறது எனில் அதுவும் பொருந்தாது. ஏனெனில் விஷயம் கரணம் ஸஹகாரி, ஸம்ஸ் என்ற நான்கு காரணங்களால் உண்டாகின்றது என்ற பௌத்த சிஷ்ய ப்ரதிக்ஞைக்கு பங்கம் வரும்! காரணம் கார்யம் வரையிலிருக்கும் என்றால் காரணம் உள்ளபோதே கார்யமும் ஒரே காலத்திலிருக்கும் என ஏற்கவேண்டும். ஒரு க்ஷணந்தானிருக்கும் என்ற க்ஷணிக வாதம் நிலைக்காது.

## प्रति संख्या प्रति संख्या निरोधा प्राप्तिरविच्छेदात् ।

22 ப்ரதி ஸங்க்யா ப்ரதி ஸங்க்யா நிரோதா ப்ராப்தி ரவிச்சேதாத் |

புத்தி பூர்வகமான நாஶம் அபுத்திபூர்வக நாஶம் என இரு நாஶங்களைக் கூறுகின்றனர். அதுவும் பொருந்தாது. பானையிடம் இதைப் பார்ப்போம். பானையும் பானையின் காரணமான மண்ணும் நம் கண்ணுக்குப் புலப்படுவதால் இருவகை நாஶமும் பொருந்தாது.

## उभयथा च दोषात् ।

23 உபயதா ச தோஷாத் |

ஒவ்வொரு பொருளும் ஒவ்வொரு க்ஷணத்திலும் நாஶமாகி மறுபடி உண்டாகின்றது என்பது க்ஷணிக வாதிகளின் கொள்கை. க்ஷணத்தில் அழியும் வஸ்துவை நித்யமானது என்று நினைப்பது அவித்யை என்கின்றனர். அவர்களை நாடி இந்த அவித்யை வித்யோபதேசத்தால் போகுமா? தானே போகுமா? என்று கேட்டால், க்ஞானோபதேசத்தால் போகுமென்றால் அவித்யை தானே அழியக் கூடியது என்ற அவர்கள் கொள்கைக்கு

---

ஸஹஸ்ர கலசாபிஷேகமெல்லாமதில்தான்

97

விரோதம் ஏற்படும். தானே போகுமெனில் க்ஞானோபதேசம் அவச்யமில்லை என்றாகும். ஆதலால் இரண்டுவகையாலும் அந்த மதம் ஏற்கத்தக்கதல்ல.

## आकाशे चाविशेषात् ।

### 24 ஆகாஶே சாவிஶேஷாத் |

வைநாஶிகர் என்ற பௌத்த மதத்தினர் வஸ்துக்களின் புத்தி பூர்வக நாஶம், அபுத்தி பூர்வமாக நாஶம் ஆகாஶம் மூன்றும் நிருபாக்யம் என்கின்றனர். ஆத்மாவினிடமிருந்து ஆகாஶ முண்டானது என்று வேதங் கூறுவதால் ஶப்தம் என்ற குணம் அதில் இருப்பதால் பிருதிவீ முதலியன போல் ஆகாஶமும் நிருபாக்யமல்ல. கூறத்தக்கதே. வியவஹரிக்கத்தக்கதே.

## अनुस्मृतेश्च ।

### 25 அநுஸ்மிருதேஶ்ச |

நமது ஆத்மாவும் க்ஷணிகம். அதாவது ஒரு க்ஷணமிருந்து அடுத்த க்ஷணத்தில் நாஶமாகும். உடனே உண்டாகும் என்கின்றனர். முன் க்ஷணத்தில் அனுபவித்த விஷயம் அடுத்த க்ஷணத்திலுள்ள ஆத்மாவிடம் தொடர்ந்து வருவதால் ஆத்மாவும் க்ஷணிகமல்ல. புதிதாக உண்டாகும் ஆத்மா வேறு. முன் க்ஷணமிருந்த ஆத்மா வேறு. ஒருவர் அனுபவித்தது மற்றவருக்கு எப்படி நினைவு வரும்? ஆதலால் ஆத்மா க்ஷணிகன் என்ற வாதமும் தவறு.

## नासतोऽदृष्टत्वात् ।

### 26 நாஸதோத்ருஷ்டத்வாத் |

அபூர்வ மல்லது அஸத்திலிருந்து ஶரீரம், பானை முதலியன உண்டாகின்றன என்று கூறும் பௌத்தரை நோக்கி முயல் கொம்பு அபாவம் அஸத்து. அதிலிருந்து

ஏதேனும் பொருள் உண்டாவதாகக் காணவில்லை. ஆதலால் உங்கள் வாதம் ஏற்கத்தக்கதில்லை.

उदासीनानामपि चैवं सिद्धिः ।

27 உதாஸீநாநாமபி சைவம் ஸித்தி: |

அபாவத்திலிருந்து வஸ்து உண்டாகிறது என்றால் குயவன் மண்ணைத் தொடாமலிருந்தாலே பானை உண்டாக வேண்டும். உழவாளி உழைக்காமல் இருக்கும்பொழுதே பயிர் வளர வேண்டுமே! அப்படி காரணமின்றி கார்ய ஸித்தி ஏற்படாததால் இந்த வாதம் ஏற்றுக்கொள்வதற்கில்லை.

அபாவாதிகரணம்—5 ஸூத்ரங்கள்.

नाभाव उपलब्धेः ।

28 நாபாவ உபலப்தே: |

விக்ஞாந வாதி என்ற பௌத்தன், பானை என்ற க்ஞானத்தைத் தவிர வேறு வஸ்து இல்லை, விக்ஞாநந்தானது எனக் கூறி, க்ஞாநத்தைத் தவிர வஸ்து இல்லை என்று கூறுவதும் சரியல்ல. நம் கண்ணெதிரில் பானை முதலிய வஸ்து இருப்பதால் விக்ஞாந வாதமும் பிரமாணமல்ல.

वैधर्म्याच्च न स्वप्नादिवत् ।

29 வைதர்ம்யாச்ச ந ஸ்வப்நாதிவத் ।

ஸ்வப்நத்தில் கண்ட வஸ்துக்களில்லாமல் மறைந்து விடுவதுபோல், விழித்திருக்கும்பொழுதும் நாம் காணும் பொருள் இல்லை, என்று விக்ஞாந வாதி உதாஹரணம் காட்ட அதுவும் பொருந்தாது. விழிப்பிலுள்ள பொருளுக்கும் கனவில் காணும் பொருளுக்கும் ரொம்ப பேதமிருப்பதால் அது உதாஹரணமாகாது. பொருத்தமில்லாதது.

---

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## न भावः अनुपलब्धेः

30 ந பாவ: அநுபலப்தே:

எதிரில் பாணையில்லை என்றாலும், பாணையைப் பார்த்த வாஸனையால் பாணை தோன்றுகின்றது என்று கூறுவதும் சரியல்ல. பாணை ஸத்யமாக இருந்து அதைப் பார்த்த பின்பல்லவா வாஸனை உண்டாக வேண்டும்? பாணையே இல்லாதபோது வாஸனை எப்படி இருக்கும்?

## क्षणिकत्वाच्च ।

31 க்ஷணிகத்வாச்ச

நான் என்ற க்ஞாநம் (இதை ஆலயக்ஞாநமென்பர்) நமக்கிருப்பதால் அதை அண்டி பாணை என்ற வாஸனை உண்டாகிறதென்றால் அதுவும் சரியல்ல. ஆலயக்ஞாநமும் க்ஷணந்தானிருக்கும் என்ற கொள்கையுள்ளவருக்கு எப்படி அது ஆச்சர்யமாக இருக்கமுடியும்?

## सर्वथा अनुपपत्तेश्च ।

32 ஸர்வதா அநுபபத்தேஶ்ச

எந்த வகையில் பார்த்தாலும் இந்த மதம் பொருத்தமேயில்லை. அர்த்தம் யுக்தி இவைகள்தான் பொருத்தமில்லை எனில் அவர் கூறும் ஶப்தங்களும் சரியல்ல. மணல் கிணறுபோல் சரிந்து சரிந்து விழுவதால் நிலைக்கு நிற்காததால் இதை நன்மைவேண்டுமென்பவர் ஆதரிக்கக் கூடாது.

---

அதிலிருந்து ஜலம் வந்த வண்ணமிருக்கிறது

## ஏகஸ்மின் அஸம்பவாதிகரணம்—5 ஸூத்ரங்கள்.

नैकस्मिन्नसंभवात् ।

33 நைகஸ்மின்னஸம்பவாத்.

புத்தமதத்தைச் சார்ந்த திகம்பரர் என்ற ஒரு வகுப் புண்டு. அவர்களது ஆசார்யன் வஸ்த்ரம் உடுத்துவது இல்லை. அவர்கள் வஸ்த்ரம் இருக்கலாம் இல்லாமலிருக்க லாம். இருந்தும் இல்லாமலுமிருக்கலாம், இப்படிக் கூறுவதால் அந்த மதத்தை ஏற்கலாமா? கூடாதா? என விசாரித்து அதை வைதிகர் ஏற்கக் கூடாதெனப்படு கிறது ஏன்? ஒரு வஸ்து இருக்கிறதென்றால் இருக்கத் தான் வேண்டும். இல்லாமலிருக்கலாமெனில், அது இல்லைதான். ஒரே வஸ்துவினிடம் இருக்கலாம் இல்லாமல் இருக்கலாம் என்பது யுக்திக்கும் ஶாஸ்த்ரத்திற்கும் ஒத்து வராததால் திகம்பரமதம் ஏற்கத்தக்கதல்ல.

एवं चात्मा अकात्स्न्र्यं ।

34 ஏவஞ்ச ஆத்மா அகார்த்ஸ்ந்ர்யம்

அன்றியும் திகம்பரமதம் சரீரம் உள்ள அளவே ஆத்மாவும் என்கின்றது. அப்பொழுது, ஆத்மா சின்ன அளவுள்ளவன். பானை முதலியவைகள் போலாகிறான். அவை அழியக்கூடியவை. ஓரளவுள்ளதாக இருப்பதால் ஒரு சரீரத்திலுள்ள ஆத்மா வேறு யானை முதலிய உடலை எடுக்க நேர்ந்தால், அவ்வளவு பெரிய உடலில் சிறிய உடலளவு இருந்த ஆத்மா யானையில் ஓரிடத்தில்தான் தங்கமுடியும். பூர்ணமாக இருக்கமுடியாது. ஆதலாலும் திகம்பர மதம் ஏற்பதற்கில்லை.

न च पर्यायादपि अविरोधः विकारादिभ्यः ।

35 ந ச பர்யாயாதபி அவிரோத: விகாராதிப்ய:

ஆத்மாவுக்கு அவயவமுண்டு. ஆதலால் சின்ன உடலில் இருக்கும்போது ஆத்மா சுருங்கும். பெரிய உடலிலிருக்கும்போது வளர்ந்து பூர்ணமாக இருக்கும்

---

வருபவர் காலை அது, தானே அலம்புகிறது

என்று கூறுவாரானால் அப்பொழுது, ஆத்மா மாறுதல் உள்ளது என ஏற்படும். அப்படி மாறக்கூடியது அழியக் கூடும். ஆதலால் பந்தம் மோக்ஷம் என்ற பேச்சிற்கே இடமில்லாமல் போகும்.

न च पर्याया दप्यविरोधः विकारादिभ्यः ।

36 ந ச பர்யாயாதப்ய விரோத: விகாராதிப்ய:

சின்ன ஶரீரத்திலுள்ள ஜீவனுக்கு அவயவங்கள் சில குறைவதாகவும் பெரிய சரீரத்தில் அதிக அவயவங்களுண்டாகிறதென்றும் அங்கீகரித்தால் ஆத்மாவில் முன் கூறிய தோஷம் ஏற்படாது என்றால் அதிலும் சில தோஷங்களுண்டு. அவயவங்கள் எங்கிருந்து உண்டாகின்றன? அவை உண்டாவதென்றால் அது அழியக் கூடியதாகும். அநித்யமாயின் பந்தம் மோக்ஷம் என்ற பேச்சுக்கே இடமில்லை.

अन्त्य अवस्थितेश्च उभय नित्यत्वात् अविशेषः ।

37 அந்த்ய அவஸ்திதேர்ச உபய நித்யத்வாத் அவிஶேஷ:

ஜீவன் மோக்ஷம் பெறும் நிலையிலுள்ளபோது இருக்கும் அளவு நித்யமானது என்கின்றனர் திகம்பரர். அதேபோல் முதல் நிலை மத்ய நிலை என்ற இரண்டிலும் கூட நித்யமாக இருப்பது ஸமமானதால் ஜீவனுக்குக் குறைதல் வளருவது என்பதில்லை. ஆதலால் ஜீவன் எப்போது அணு என்றோ மஹத் என்றோ ஒத்துக்கொள்ள வேண்டும். ஶரீர அளவே ஜீவன் என்ற அவர் ஸித்தாந்தம் நிலைக்காது. ஆதலாலும் அந்த மதம் ஏற்கத்தக்கதல்ல.

பாஶுபத அதிகரணம்—5 ஸூத்ரங்கள்.

पत्युरसामंजस्यात् ।

38 பத்யுரஸாமஞ்ஜஸ்யாத்.

ஶைவ பாஶுபத காருணிக காபாலிக என்ற நால் வரும் மாஹேஶ்வர மதம் என்ற பெயரால் அழைக்கப்

படுவார்கள். மஹத் முதலியன கார்யம். ஈஶ்வரனின் பிரதாநமிவை காரணம், யோகமே ஸமாதி, 3 வேளை ஸ்நாநம் முதலியன விதி, துக்கம் ஒழிவது மோக்ஷம் என்பன அவர்களது மதம். பசுக்களான ஜீவர்களின் பாஶமெனும் அக்ஞாநத்தை அறுத்துப் பதியை அடைவ தெனும் முக்திபெற பதியால் கூறப்பட்டது இது என்பர்.

## संबन्धानुपपत्तेश्च ।

### 39 ஸம்பந்தானுபபத்தேஶ்ச.

உலகை ஸ்ருஷ்டிக்க பாஶம் அல்லது ப்ரதாநம் ஜட மானதால், அதை ஒருவர் தூண்டி ஶக்தி அளிக்க வேண்டும். அப்படி ஈஶ்வரன் அதைத் தூண்டுகிறான் என்றால் அவருக்கும் பிரதாநத்திற்கும் என்ன ஸம்மந்தம்? ஸம்யோக ஸம்பந்தமெனில் பிரதாநம் புருஷன் ஈஶ்வரன் மூன்றும் எங்கு முள்ளது. அவயவ மில்லாதது எனக் கூறுவதால் ஸம்யோக ஸம்மந்தமில்லை. ஸமவாயமெனில் ஒன்றிற்கொன்று ஆஶ்ரயித்ததாக இருக்க வேண்டும். அப்படி இல்லாததால் அந்த மதக் கொள்கை உசிதமல்ல.

## अधिष्ठान अनुपपत्तेश्च ।

### 40 அதிஷ்டாந அநுபபத்தேஶ்ச.

குயவன் மண்ணைப் பானை முதலியவைகளாகும்படித் தூண்டுவதுபோல், ஈஶ்வரன் பிரதானத்தைத் தூண்டி உலகைப் படைக்கிறான் எனவும் கூற முடியாது. ஏன்? மண்ணு உருவத்துடன் கூடியது. கண்ணுக்குப் புலப்படு வது. பிரதாநமோ ரூபமில்லாதது. அவயவமுமில்லாதது எனக் கூறுவதால், மண்ணிருப்பதுபோல் அதிஷ்டான மில்லாததால் அந்த உதாஹரணம் பொருந்தாது.

---

மலையில் ஜல ஊற்று அதிகமானதால்

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸதாஶிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## करणवच्चेन्न भोगादिभ्यः ।

41 கரணவச்சேந்ந போகாதிப்ய:

ரூபம் அவயவமில்லாத புலன்களை ஜீவன் தூண்டுவதுபோல் ஈஶ்வரன் அவயவாதிகளில்லா பிரதானத்தைத் தூண்டுகிறுன் எனில் அதுவும் பொருந்தாது. ஏன்? ஜீவன் புலன்களைத் தூண்டி அதனுல் வரும் போகத்தை அனுபவிக்கிருன். அதேபோல் ஈஶ்வரனும் போகாதிகளை அனுபவிப்பவராக ஏற்கவேண்டும். அப்படி ஏற்காததால் இதுவும் பொருத்தமில்லை.

## अन्तवत्वं असर्वज्ञता वा ।

42 அந்தவத்வம் அஸர்வக்ஞ தாவா ।

பிரதானம் ஜீவன் ஈஶ்வரன் என்ற மூன்றிற்கும் இவ்வளவு என்ற கணக்கும் அளவும் தார்க்கிகாதிகள் கூறும் ஈஶ்வரனுல் ஏற்படுத்தப்பட்டதா? இல்லையா? என் ஸந்தேஹம்.

அளவு ஏற்படுத்தப்பட்டதென்றுல் அளவுள்ளதான வஸ்துக்கள் அழிவதுபோல் இவைகள் அழியும் என ஏற்கவேண்டும். அவைகளை ஈஶ்வரன் அளவுள்ளதாகச் செய்யவில்லை என்றுல் ஈஶ்வரன் அவைகளையும் அறிந்தவன் என்ற ஸர்வக்ஞத்வம் இல்லாமல் போகும். ஆதலாலும் அந்த மதக்கொள்கை ஏற்கத்தக்கதல்ல.

---

## உத்பத்ய ஸம்பவாதி கரணம் — 4 ஸூத்ரங்கள்.

उत्पत्यसंभवात् ।

43 உத்பத்யஸம்பவாத்.

வாஸுதேவன் பரமாத்மா. அவரிடமிருந்து உலகம் தோன்றுவதால் அவரே உபாதாந நிமித்த காரணம். அவரிடமிருந்து ஸங்கர்ஷணன் என்ற ஜீவனும் அவரிடமிருந்து ப்ரத்யும்நன் என்ற மனமும் அவரிடமிருந்து அநிருத்தன் எனும் அஹங்காரமும் உண்டாகின்றது என்பது பாகவத மதம். இது பிரமாணமா? அல்லவா? என விவாதம். வேதமூலமானதால் அது பிரமாணமே. ஆனாலும் ஜீவன் உண்டாகிறன் என்பது பிரமாண மில்லை, ஜீவன் உண்டாவதானால், உண்டாகும் ஸகல வஸ்துக்களும் அழிவதுபோல் ஜீவனும் அழியவேண்டும். அழிவதானல் பகவானை அடைவது என்ற மோக்ஷம் யாருக்குக் கூறுவது? ஆதலால் அது பிரமாணமாகாது.

न च कर्तुःकरणं ।

44 நசகர்துःகரணம்.

ஸகல கார்யங்களையும் செய்யும் கர்த்தாவான ஜீவனிடமிருந்து கரணமான மநம் உண்டாகிறது என்றல் அதுவும் சரி இல்லை. நாற்காலி செய்யும் கர்த்தா ஆசாரியிடமிருந்து உளி வாச்சி முதலிய கரணங்கள் உண்டாகின்றனவா?

विज्ञानादिभावे वा तदप्रतिषेधः ।

45 விக்ஞாநாதிபாவே வா ததப்ரதிஷேத:

ஒன்றைப் படைக்கிறவர் விக்ஞாநம் ஐஸ்வர்யம் பலம் தோஷமில்லாமை முதலிய குணங்கள் உள்ளவராக

105

இருக்க வேண்டும். ஸங்கர்ஷணாதிகளுக்கு அத்தகைய ஶக்தி இருக்கிறதென்றால் வாஸுதேவன் ஒருவனே அத்தகைய ஶக்தி உள்ளவன் என்ற ஸித்தாந்தத்திற்கு விரோதம் ஏற்படும். அந்த ஸங்கர்ஷணாதிகளும் வாஸுதேவனைப் போல் ஸர்வ ஶக்தி உள்ளவரென்று ஒப்புக்கொண்டாலும் கூட கர்த்தாவினிட மிருந்து கரணம் உண்டாவதில்லை என்ற தோஷம் இருப்பதால் அது ஏற்கத்தக்க தல்ல.

विप्रतिषेधाच्च ।

46 விப்ரதிஷேதாச்ச.

க்ஞானம் ஶக்தி ஐஶ்வர்யம் பலம் வீர்யம் தேஜஸ் முதலியவை வாஸுதேவனது குணங்கள் என்றும் வாஸுதேவனேதான் இந்த குணங்கள் என்றும் குணம் குணவான் இருவர்களுக்கும் பேதத்தையும் அபேதத்தையும் ஏற்றுக்கொள்வது பரஸ்பர விரோதமானதால் இந்த மதம் ஏற்கத்தக்க தல்ல.

இரண்டாமத்யாயம் இரண்டாம் பாதம் முற்றிற்று.

[இரண்டாம் அத்யாயம் மூன்றும் பாதம் 51 ஸூத்ரமும் 17 அதிகரணங்களும் உள்ளன. 3, 4 இந்த இரண்டு பாதங்களும் பரஸ்பரம் விருத்தமாயுள்ள உபநிஷத் வாக்யங்களை விசாரித்து ஸித்தாந்தம் கூறப்படுகிறது.]

வியததி கரணம்—8 ஸூத்ரங்கள்.

न वियदश्रुतेः ।

1 ந வியத ஶ்ருதேः.

ஐந்து பூதங்களில் ஒன்றான ஆகாஶத்திற்கு உத்பத்தி உண்டா? இல்லையா? என ஸந்தேஹம் தோன்ற உத்பத்தி

இல்லை! ஏன்? உத்பத்தி ப்ரகரணமான சாந்தோக்ய உபநிஷத்தில் "தத்தேஜோ அஸ்ருஜத" அது தேஜஸ்ஸை உண்டுபண்ணிற்று என்றே கூறுவதால் ஆகாஶ வாயுக்களுக்கு ஸ்ருஷ்டி சொல்லவில்லை. தேஜஸ்ஸிற்குத்தான் கூறிற்று. ஆதலால் ஆகாஶம் உண்டாகவில்லை.

## अस्ति तु

## 2. அஸ்தி து.

தைத்திரீய உபநிஷத்தில் ஆத்மாவினிடமிருந்து ஆகாஶம் உண்டானது என ஶ்ருதி ப்ரமாணமிருக்கிறது. சாந்தோக்ய தைத்திரீயங்கள் பரஸ்பர விரோதமாகக் கூறுவதால் இது ப்ரமாணமாகாது. ஆதலால் ஆகாஶம் ஸ்ருஷ்டிக்கப்படவில்லை.

## गौण्यसंभवात् ।

## 3 கௌண்யஸம்பவாத்.

ஆகாஶம் உண்டானது என்பது முக்ய ஶ்ருதி அல்ல. கௌணம், ஒப்புக்குக் கூறப்பட்டது. ஏனெனில், உண்டானது என ஒத்துக்கொண்டால், அதற்கு ஸமவாயி காரணம் முதலிய ஸாமக்ரிகள் வேண்டும். அவை இல்லாததாலும் ஆகாஶம் விபுநித்யம் என ஏற்றுக் கொண்டிருப்பதாலும் ஆகாஶம் உண்டாகவில்லை.

## शब्दाच्च ।

## 4 ஶப்தாச்ச.

வாயு அந்தரிக்ஷம் இது அம்ருதம் என ஶ்ருதி கூறுவதால் ஆகாஶம் அழியாதது—பிறக்காதது.

---

விக்ரஹத்திற்குக் காலில் பொன் விலங்கு சாத்தினால்.

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸதாஶிவ ப்ரமேந்திரர் இயற்றியது.

## स्याच्चैकस्य ब्रह्मशब्दवत्

### 5 ஸ்யாச்சைகஸ்ய பிரும்ம ஶப்தவத்.

ஒரு வாக்யத்தில் உண்டானது, என்ற சொல்லுக்கு கௌண அர்த்தமும், முக்ய அர்த்தமும் கூறலாமா? எனில் ஒரு ப்ரகரணத்தில் இப்படிக் கூறப்பட்டிருக்கிறது. "அஹம் பிரும்ம" என்ற சொல்லில் பிரும்ம என்பது கௌணமாகவும், "ஆநந்தோ ப்ரும்மா" என்று கூறுமிடத்தில் முக்யார்த்தமும் கூறப்படுவதுபோல் அப்படி, கௌணமாக இருக்கலாம் இங்கும்.

இப்படி அத்வைதிகளில் சிலர் ஆகாஶம் உண்டாகவில்லை என 5 ஸூத்ரங்களால் கூறுவதைக் கண்டித்து, ஸ்ருஷ்டி உண்டு என ஸித்தாந்தம் கூறப்படுகிறது வரும் ஸூத்ரத்தினுல்.

## प्रतिज्ञाहानिः अव्यतिरेकात् शब्देभ्यः

### 6 ப்ரதிக்ஞாஹாநி: அவ்யதிரேகாத் ஶப்தேப்ய: ।

உபநிஷத் கூறும் பிரும்மத்தைத் தவிர வேறு ஒரு வஸ்துவும் கிடையாது என்பதை ஒத்துக்கொண்டால்தான், பிரும்மத்தை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்ததாகும் என உபநிஷத் கூறும், பிரதிக்ஞைக்கு ஹானி இல்லாமலிருக்கும். "இதுதான் முன்னே இருந்தது. இதன் ஸ்வரூபமே உலகெலாம்" முதலிய ஶ்ருதிகளும் கூறுகின்றன. 'இவரைத் தவிர வேறில்லை' என சாந்தோக்யத்தில் தேஜஸ்ஸை ஸ்ருஷ்டித்ததாகக் கூறுவதால் ஆகாசம் படைக்கப்படவில்லை எனக் கூறலாகாது. தைத்திரீயத்தில் கூறிய ஆகாஶத்தைப் படைத்துவிட்டு தேஜஸ்ஸைப் படைத்தார் எனக் கூறவேண்டும்.

---

## यावद्विकारन्तु विभागो लोकवत्

**7 யாவத் விகாரந்து விபாகோ லோகவத்.**

ஸ்வர்ணத்திலிருந்து காப்பாகவும் கொலுஸாகவும் வந்த வஸ்துக்களெல்லாம் வெவ்வேறாகக் கூறப்படுகிறது. மாறுதலில்லாத வஸ்துவில் பிரிவே இல்லை. பூமியைவிட ஆகாஶம் வேறெனப் பிரிக்கப்படுவதால் ஆகாசம் பிரும்மத்தினால் படைக்கப்பட்டதென்பது ஸித்தம்.

## மாதரிஶ்வாதிகரணம்.

## एतेन मातरिश्वा व्याख्यातः

**8 ஏதேந மாதரிஶ்வா வ்யாக்யாத:**

ஆகாஶத்திற்கு உத்பத்தி உண்டா? இல்லையா? என்று செய்த முன் விசாரத்தினாலேயே வாயு ஸ்ருஷ்டிப் பற்றி கூறப்பட்டதாகும். வாயுவுக்கும் பிரும்மத்தினிடமிருந்து உற்பத்தியுண்டு. ஆகாஶமும் வாயுவும் அமிருதம். நித்யமென்பதெல்லாம் மற்றவைகளைவிட சீக்ரம் அழியாதவை என்பதாம். இதற்குத் தனி விசாரம் வேண்டாம் என ஸூத்ரங் கூறுகிறது.

## அஸம்பவாதிகரணம்.

## असम्भवस्तु सतोऽनुपपत्तेः

**9 அஸம்பவஸ்து ஸதோநுபபத்தே:**

"இவரை உண்டுபண்ணியவர் ஒருவரும் இல்லை" என்று ஒரு ஶ்ருதி. பிரும்மம் உண்டான வஸ்துவல்ல என்கின்றது மற்றோர் ஶ்ருதி. "நீ எங்கும் முகமுள்ளவனாக உண்டானாய்" என்கின்றது. இது ஒன்றோடொன்று முரண்பட்டதல்லவா? அல்ல. உண்டானார் என்ற ஶ்ருதி ஸாக்ஷாத் பிரும்மம் உண்டானது என்று கூறவில்லை. ஒரு நிமித்தத்தால் உண்டானதுபோல் தோன்றுகிறார் என்றே கருத்து. நித்யமான வஸ்துவுக்கு உத்பத்தி ஸம்பவிக்காது. எல்லாவற்றிற்கும் காரணமான வஸ்து உண்டானது என்பது பொருத்தமுள்ளதல்ல.

---

## தேஜோதிகரணம்.

### तेजोतस्तथाह्याह

### 10 தேஜோ தஸ்ததாஹ்யாஹ.

வாயுவிலிருந்து அக்நி உண்டானது என ஒரு வேதம். அது தேஜஸ்ஸைப் படைத்தது என்று ஒரு வாக்யம். இதில் அக்நியை வாயு படைத்ததா? பிரும்மமே படைத்ததா? என ஸந்தேஹம் தோன்றும். பிரும்மமே எல்லாவற்றையும் படைத்தது. வாயுவாகத்தானிருந்து அக்நியைப்படைத்தது எனக் கருத்து.

## அப் அதிகரணம்.

### 11 आप: ஆப:

முன் கூறியதுபோலவே அக்நியிலிருந்து ஜலம் உண்டானதாகவும் பிரும்மம் ஜலத்தை உண்டாக்கியதாகவும் வெவ்வேருகக் காணப்பட்டாலும் அக்நி ரூபமாயிருந்து பிரும்மம் படைத்ததெனப் பொருள் கொள்ள வேண்டும்.

## பிருதிவீ அதிகார அதிகரணம்,

### पृथिव्याधिकार रूपशब्दान्तरेभ्य:

### 12 பிருதிவ்யதிகார ரூபஶப்தாந்தரேப்ய:

நீரிலிருந்து பிருதிவீ உண்டானதுஎன்று ஓர் ஶ்ருதி. நீர் அன்னத்தை உண்டுபண்ணிற்று என்றும் காணப்படுவதால், ஜலம் பூமியை உண்டுபண்ணிற்ரு? அன்னத்தை உண்டுபண்ணிற்ரு? எனில், அன்னமென்ருல் ஓதநமென்று பொருளில்லை. அன்னத்தையும் உண்டு பண்ணும் பூமி என்றே பொருள்.

மஹாபூதங்களைப் படைக்கும் அதிகாரம் பிரும்மத்திற்கே உண்டு. மற்ருேரிடத்தில் கறுப்பான ரூபமுள்ளது எனக் கூறப்படுவதால் கறுப்பான அன்னமல்ல. பூமி என்றுதான் கருத்து.

---

இரண்டாவது ரேட் ப்ரும்மோத்ஸவத்திற்கு

## ததபித்யாந அதிகரணம். 2 ஸூத்ரங்கள்.

### तदभिध्यानादेव तु तल्लिङ्गात्सः

**13 ததபித்யாநாதேவ து தல்லிங்காத்ஸ:**

எல்லாவற்றையும் படைப்பவன் பரமன் என்ற ச்ருதி ஆகாசம் வாயுவைப் படைத்தது என்பதுடன் முரண்படுவதுபோல் தோன்றினாலும் அந்தந்த வஸ்துக்களையும் நினைத்துப்பார்த்து த்யாநம் செய்து படைப்பவர் பரமாத்மாதான். அந்தந்த பூதங்களிலிருந்து பிரும்மம் பூதத்தைப் பார்க்கிறது. பூதம் பிரும்மத்தைப் பார்ப்பதில்லை எனக் கூறப்படுவதால், பூதம் வேறு, அதிலிருந்து மற்றதைப் படைக்கும் பிரும்மம் வேறென்று ஸ்பஷ்டமாகக் காணப்படுவதால், வெவ்வேறாகக் காணப்படினும் ச்ருதிகளுக்குள் விரோதமில்லை. பரமனே படைப்பவன் என்பதிலும் ஸந்தேஹமில்லை.

### विपर्ययेण तु क्रमोऽत उपपद्यतेच

**14 விபர்யயேண து க்ரமோத உபபத்யதே ச।**

பிரும்மத்திலிருந்து எல்லாம் உண்டாகி, அவனிடமே இருந்து, அதிலேயே லயமாகின்றது. லயமாகும் போதும் எப்படி உண்டாயிற்றோ அந்த முறையிலேயே லயமாகின்றதா? அல்லது வேறு முறையிலா? என ஸந்தேஹம். ஆகாசத்திலிருந்து வாயு உண்டானது. அந்த ஆகாசம் வாயுவினிடம் லயமாகி எல்லாம் பிரும்மத்தினிடமே லயமாகுமா? என ஸந்தேஹந் தோன்ற, எப்படி வந்ததோ அப்படியே லயமென நினைக்கக்கூடும். அப்படியல்ல. ஆகாசம் காரணம். வாயு கார்யம். ஆகாசம் வாயுவில் லயமாகிறதென்றால், காரணம் கார்யத்தில் லயமென்றாகும். பானை கார்யம். மண் காரணம். மண் அழிந்து பானையாவதில்லை. பானை அழிந்து மண்ணாகிறது.

ஆதலால் மண் தன் காரணமான நீரிலும், நீர் தனது காரணமான நெருப்பிலும், அது தன் காரணமான வாயுவிலும், அது ஆகாசத்திலும், ஆகாசம் பிரும்மத்தினிடமும் லயமாகிறதென்பதே மிகப் பொருத்தமானது.

---

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி. 

ஸதாஶிவ ப்ரமேந்திரர் இயற்றியது.

## அந்தராவிக்ஞாந அதிகரணம்.

**अन्तराविज्ञान मनसी क्रमेण तल्लिंगात् इति चेन्नाविशेषात् ।**

15 அந்தராவிக்ஞாந மநஸீ க்ரமேண தல்லிங்காத் இதிசேந்நா விஶேஷாத்.

பிரும்மத்தினிடமிருந்து ஸகல பூதங்களும் தோன்றி அங்கே லயமாவது கூறப்பட்டது. இதனிடையில் அந்தக்கரணம், புத்தி, இந்திரியங்கள் உண்டானதாக ஓரிடத்தில் ச்ருதி கூறுகிறது. அதனால் பிரும்மத்தினிடமிருந்து மநஸ் புத்தி இந்திரியங்கள் உண்டாகி அதன்பின் பூதங்கள் படைக்கப்பட்டன என அதற்கேற்ற வாக்கியங்கள் காணப்படுகின்றன. அதனால் முன் கூறிய பூத ஸ்ருஷ்டிக்கு விரோதம் ஏற்படுகிறது எனில் அங்ஙனமில்லை. பூதங்களும் புத்தி முதலியனவும் ஆத்மாவினிடமிருந்தே உண்டாயின. இதற்கப்புறம் அது என்ற க்ரமம் கூறப்படவில்லை.

## சராசர வ்யபாஶ்ரய அதிகரணம்.

**चराचरव्यपाश्रयस्तु स्यात् तद्व्यपदेशो भाक्तः तद्भावभावित्वात् ।**

16 சராசரவ்யபாஶ்ரயஸ்து ஸ்யாத் தத்வ்யபதேஶோ பாக்தஃ தத்பாவ பாவித்வாத் ।

இதுவரை தத் என்ற பதத்தின் பொருளான பிரும்மத்தின் ஸ்ருஷ்டி விஷயமான விரோதங்களுக்குப் பரிஹாரம் கூறப்பட்டது. இந்த அதிகரணம் முதல் இந்தப் பாதம் முடியும்வரை த்வத்பதத்தின் பொருளான ஜீவனைப்

---

தையல் இலைதானதிகம். வாழை இலைதான் அபூர்வம்

பற்றிய விஷயங்களில் தோன்றும் விரோதம் பரிஹரிக்கப்படுகிறது.

ஜீவன் இறப்பதில்லை என்ற ஶாஸ்த்ரத்திற்கும் ஜீவன் பிறந்தவுடன் ஜாதகர்மா முதலியவைகளைச்செய்ய வேண்டும் என்ற ஶாஸ்திரத்திற்கும் விரோதம் ஏற்படுகிறது. ஜீவன் பிறந்தால் பிறந்ததெல்லாம் இறக்கும் என்ற ஸித்தாந்தத்தைத் தழுவிக் கவனித்தால் ஜீவன் இறப்பதில்லை என்பதற்கும் ஜீவன் பிறந்தவுடன் செய்ய வேண்டும் என்பதற்கும் விரோதமெனில் அப்படியல்ல. சராசர வஸ்துக்களின் உடலுக்குத்தான் ஜநந மரணம் என்பது முக்யமானது. ஜீவன் உண்டாகிறான் என்பது அந்த உடல் பிறப்பு இறப்பை அநுஸரித்து கௌணமாகக் கூறப்படுகிறது. ஜீவன் உடலிலிருந்துதான் உண்டாகிறதுபோலும். உடல் அழிந்தால் ஜீவன் போவதுபோலும் காணப்படுகிறது. ஆதலால் இதிலும் பரஸ்பர விரோதமில்லை.

## ஆத்மாதிகரணம்.

नात्मा श्रुतेः नित्यत्वाच्च ताभ्यः ।

17 நாத்மா ஶ்ருதே: நித்யத்வாச்ச தாப்ய: ।

ஶரீரமும் இந்த்ரியங்களும் கூடிய கூட்டில் கர்மபலனை அனுபவிக்கின்ற ஜீவனிருக்கிறான். அவர் பிறப்பதில்லை, இறப்பதில்லை என்றோம், அந்த ஜீவனேதான் ஆத்மா. அந்த ஆத்மா ஒரு ப்ரளயம் முடிந்து உலகஸ்ருஷ்டி ஆரம்பிக்கும்போது. தீயிலிருந்து பொறிகள் தோன்றுவது போல், ஜீவஸ்வரூபமாகக் கிளம்புகிறதென ஶ்ருதி கூறுகிறது. சிலவிடத்தில் அவிகாரியான ஆத்மா கார்யவஸ்துவில் ப்ரவேஶித்து ஜீவனாகிறான் எனக் கூறப்படுகிறது. இது விரோதம் எனில் ஆத்மாவான ஜீவன் உண்டானதாக ஸ்ருஷ்டி ப்ரகரணத்தில் கூறப்படவில்லை. பல வேத

---

பால், தயிர், கறிகாய் எல்லாம் ருசியானவை

வாக்யங்கள் அவன் ஆத்மா, ஜநந மரணமில்லாத நித்யன் எனவும் கூறுகின்றன. ஆதலால் விரோதமில்லை.

க்ஞாதி கரணம்.

ज्ञोत एव

18 க்ஞோத ஏவ.

ஜீவன் இயற்கையாகவே எப்போதும் சைதன்ய முள்ளவனு? அல்லது ஆத்மா மனதுடன் சேரும்பொழுது சைதன்ய முண்டாகிறதா? எனில், எப்போதும் சைதன்ய முண்டு என்பதை ஏற்ருல் தூங்கும் பொழுதும் மூர்ச்சை யாக இருக்கும் பொழுதும் சைதன்ய மிருக்க வேண்டும். அதில்லையேல், " விக்ஞாந மாநந்தம் பிரும்ம " என வேதங் கூறுகிறது. அந்த ஆத்மாவே ஜீவன் ஆதலால் ஜீவனுக்கு எப்போதும் சைதன்யம் இருக்கிறது. தூங்கும் போதும் மூர்ச்சையானபோதும் விஷயங்களும் இந்திரி யங்களுமில்லாததால்தான், ஜீவன் சைதன்ய மில்லாத வன்போலிருக்கிருன். உண்மையில் சைதன்யம் எப் போதுமிருக்கிறது.

உத்க்ராந்தி கதி அதிகரணம். 13—ஸூத்ரங்கள்.

उत्क्रान्ति गत्यागतीनाम् ।

19 உத்க்ராந்தி கதி ஆகதீனும்

ஜீவன் ப்ரும்மத்தைத் தவிர வேறல்ல, என்றமையால் ப்ரும்மத்தைப்போல் அழிவில்லாமல் இருப்பதாலும், ஜீவனும் ஸர்வ வ்யாபி அல்லவா? என்று ஸந்தேஹம். ஓரிடத்தில் ஸர்வ வ்யாபி என்றும் ஓரிடத்தில் அணு என்றும் கூறுவதாலும் இவ்விரண்டு ஶ்ருதிகளுக்கும் ஒன்றுக்கொன்று விரோதம் என்றும் ஸந்தேஹம். இந்த சரீரத்திலிருந்து மேலே கிளம்புகிறது. சந்த்ர னையே அடைகின்றது. அந்த லோகத்திலிருந்து திரும்பி வருகின்றது எனக் காணப்படுவதால் பரஸ்பர விரோதம் தோன்றுகிறது. ஆனுலும் ஜீவன் அணு ப்ரமாணமே.

114

# स्वात्मना चोत्तरयोः

## 20 ஸ்வாத்மனு சோத்தரயோ:

உத்க்ராந்தி என்பது உடலுக்கு ஸ்வாமியாய் இருப் பதிலிருந்து விலகுவதுதான் உத்க்ராந்தி, என்பது என் ன்ருலும், கிளம்புதல் வருதல் என்ற இரண்டும் ஜீவாத் மாவோடு சம்பந்தப்பட்டிருப்பதால் ஆத்மா அணுவாய் இருந்தால்தான் முடியும் அவை.

# नाणुरतच्छ्रुतेरिति चेन्नइतराधिकारात् ।

## 21 நாணுரதச்ருதேரிதி சேந்ந இதராதிகாராத்

ஜீவன் அணுவல்ல. ஸர்வ வ்யாபி என்று வேதம் கூறுவதால் எனில், ஸர்வ வேதாந்தங்களிலும் ப்ரதான மாக ப்ரும்மமே அறிய வேண்டுமெனக் கூறப்படுவதால் ஸர்வ வ்யாபி என்பது ப்ரும்மத்திற்குத்தான். ஜீவனுக்கு அல்ல. ஆகையால் ஜீவன் அணுதான்.

# स्वशब्दोन्मानाभ्यां च ।

## 22 ஸ்வசப்தோன்மாஞப்யாம் ச

அணு ஆத்மா என்று நேராகவே ச்ருதி சொல்வதா லும் வால் மயிரின் நூற்றில் ஒரு பங்கு ஜீவன் என அளவிடப்பட்டிருப்பதாலும் ஜீவன் அணு தான்.

# अविरोधश्चन्दनवत् ।

## 23 அவிரோதஸ் சந்தனவத்

அணுவெனில் ஓர் சிறிய இடத்தில் தான் இருக்கும் உடல் முழுவதும் உண்டாகும் இன்ப துன்பங்களை அது எப்படி அனுபவிக்குமெனில் ? அது குற்றமல்ல, நமது சரீரத்தில் ஓரிடத்தில் சந்தனத்தைப் பூசினுல் அது உடல் முழுவதும் ஆனந்தத்தை அளிப்பதுபோல் ஓரிடத்தில் ஜீவன் அணுவாக இருந்தாலும் சரீரம் முற்றிலுமுள்ள இன்ப துன்பங்களை அனுபவிக்கக் கூடும். ஆதலாலும் ஜீவன் அணுவாகலாம்.

---

ஒரு நாளைக்கு 4, 5, 7, ரூ வாட்ஸைக்கு

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

:***:

ஸதாசிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

अवस्थितिवैशेष्यादिति चेन्नाभ्युपगमात् हृदि हि ।

24 அவஸ்திதி வைஶேஷ்யாதிதி சேன்ன அப்யுபகமாத் ஹ்ருதிஹி |

சந்தன திருஷ்டாந்தம் பொருத்தமானதல்ல. சந்தனம் ஓரிடத்திலிருப்பதைக் காண்கிறோம். ஜீவன் அப்படி ஓரிடத்திலில்லாமல் எங்குமிருப்பதாகத் தெரிகின்றது எனில் அங்ஙனமில்லை. ஹ்ருதயத்தில் அது அணுவாய் இருப்பதாகவும் வேதம் ஒப்புக் கொண்டிருக்கிறது.

गुणाद्वा लोकवत् ।

25 குணாத்வா லோகவத் |

சைதன்ய குணம் உடலெல்லாம் வ்யாபித்திருக்கின்றது என்பதனாலும் ஜீவன் அணு என்பதில் ஆக்ஷேபம் இல்லை. உலகில் ஓரிடத்தில் தீபத்தை ஏற்றி வைத்தால் அது உள்ளெல்லாம் ஒளி அளிக்கின்றது அல்லவா? அதேபோல் அணுவான ஜீவனின் கார்யம் உடலெலாம் வியாபிக்கின்றது.

व्यतिरेको गन्धवत् ।

26 வ்யதிரேகோ கந்தவத் |

ஒளி என்பது தனக்கு இருப்பிடமான தீபத்திலிருந்து வருகின்றது. தீபம் இருப்பிடம் நமக்குத் தெரிகின்றது. அதேபோல் ஜீவனின் குணம் அறிவது என்றாலும் ஜீவன் உள்ள இடம் நமக்குத் தெரியாததால் முன்சொன்ன உபமானம் பொருத்தமில்லையெனில்? சில குணம் தனக்கு

---

வேகமாக ஓடிக்கொண்டு ப்ரதக்ஷிணம் செய்யாமல்

இருப்பிடமான மூலப்பொருள் கண்ணுக்குத் தெரியாவிடினும் அருகிலில்லாவிடினும் ப்ரகாசிப்பதைக் காண்கிறோம். புஷ்பம் இருப்பிடம் நமக்குத் தெரியாவிடினும் வெகு தூரத்தில் அதன் வாஸனையை நுகர்கிறோம். அதே போல் அணுவான ஜீவன் ஹ்ருதயத்திலிருந்து தேகத்தில் உண்டான இன்ப துன்பங்களை உணர்கிறது.

## तथा च दर्शयति ।

27 ததா ச தர்ஶயதி ।

ஜீவன் ஹ்ருதயத்திலிருப்பதையும் ரோமம் கேஶம் முதலிய எல்லாவிடத்திலும் தனது குணத்தைப் பரப்பி இருப்பதையும் உபநிஷத் கூறுகிறது. ஆதலால் ஜீவன் அணுவே யாகும்.

## पृथगुपदेशात् ।

28 ப்ருத குபதேஶாத் ।

ஜீவன் சைதன்ய குணத்தினால் சரீரத்தை வ்யாபித்திருக்கிறான் என்றும் ஜீவன் வேறு, 'ப்ரக்ஞை' வேறு எனக் கூறப்பட்டிருப்பதாலும் ஜீவன் அணுவாக இருந்து கொண்டே எல்லா கார்யங்களையும் செய்கிறது.

## तद्गुणसारत्वात्तु तद्व्यपदेशः प्राज्ञवत् ।

29 தத் குணஸாரத்வாத்து தத்வ்யபதேஶ: ப்ராக்ஞவத் ।

இதுவரை கூறியது ஜீவன் அணுப்ரமாணமுள்ளவன் என்ற பூர்வபக்ஷிகளின் கருத்தாகும். இதிலிருந்து 32-வது ஸூத்ரம் வரை ஸித்தாந்தமாகும். ஜீவன் அணுவல்ல. எங்குமுள்ள பரமாத்மா ஜீவபாவத்தோடு உடலில் நுழைகிறான், என்றும் அவனே பரமாத்மா என்றும் கூறுகின்றது சுருதி. ஆனால் அந்த ஜீவன் தங்கியுள்ள புத்தியினுடைய குணங்களை அனுசரித்தே உடலிலிருந்து

---

கர்ப்பிணிபோல் மெதுவாக நடந்து செல்லவேண்டும்

கிளம்புவது, சந்த்ரலோகம் சென்று திரும்புவது, அணு வாயிருத்தல் முதலியவை கூறப்படுகின்றன. 'ப்ராக்ஞ' என்ற பரமாத்மாவை ஸகுணோபாஸனையில் தஹரா காசத்தில் அணுவாக உபாஸிக்க வேண்டுமென்று கூறுவது போலாகும்.

## यावदात्मभवित्वाच्च न दोषस्तद्दर्शनात् ।

30 யாவதாத்ம பவித்வாச்ச ந தோஷஸ்த-
த்தர்ஶனாத் ।

புத்தியின் அளவைக்கொண்டு அணுவாக அதிலிருப்பதால் புத்தி இல்லாத மயக்க ஸமயத்தில் ஸம்ஸாரம் இருக்காதே, எனில் புத்தியோடு சேர்ந்த ஜீவனுக்கு ஆத்ம ஞானம் உண்டாகும் வரை ஸம்ஸாரம் விலகுவதில்லை. ஆதலால் ஒரு ஸமயம் புத்தி மயங்கி இருந்தாலும் ஸம்ஸாரம் அழிவதில்லை. தேகமில்லாவிடினும் புத்தியோடு சேர்ந்திருப்பதால் அந்த ஜீவன் இருலோகத்திலும் ஸஞ்சாரம் செய்கிறது, என சுருதி கூறுகின்றது.

## पुंस्त्वादिवत्तस्य सतोऽभिव्यक्ति योगात् ।

31 பும்ஸ்த்வாதிவத் தஸ்ய ஸதோபிவ்யக்தியோகாத் ।

இளமையிலேயே புருஷத்தன்மையிருக்கிறது. ஆனால் யௌவனம் வந்த பின்பே அது பிரகாசிக்கிறது. அதே போல் மூர்ச்சை தூக்கம் முதலிய காலத்தில் ஜீவனுடன் சேர்ந்திருந்தாலும் அவை அகன்றபின் வ்யக்தமாக புத்தி பிரகாசிக்கிறது. ஆத்மா உள்ளவரை புத்தி கூடவே இருக்கும்.

## नित्योपलब्धि अनुपलब्धि प्रसंगोऽन्यतरनियमोवान्यथा ।

32 நித்யோபலப்தி அநுபலப்தி ப்ரஸங்கோன்யதர
நியமோவான்யதா ।

புத்தி எனும் அந்தக்கரணம் மூலமாக ஸம்ஸாரம் உண்டாகின்றது என்றால், அந்த அந்தக்கரணமிருக்கிறது

---

மூக்கைச் சிந்துவது, அபானவாயுவை விடுவது கூடாது

என்பதற்கு என்ன ப்ரமாணம்? எனில் அந்தக்கரணம் என்ற ஒன்றை ஏற்காவிடில், நாம் கிரஹிக்கும் விஷயங்களெல்லாம் ஒன்ருக ஒரே ஸமயத்தில் தோன்றும். அல்லது ஒன்றுமே தோன்ருமல் போகும். அப்படி இல்லாமல் ஆத்மாவோ இந்திரியங்களோ அடக்கி ஒரு ஸமயம் ஒரே விஷயம் தோன்றும்படி செய்கிறதென ஏற்கவேண்டும். அதுவும் பொருத்தமில்லை. ஆத்மா எதையும் செய்யாதவன். இந்திரியங்களுக்கோ அத்தகைய ஶக்தி இல்லை.

ஆதலால் மனமல்லது அந்தக்கரணம் விரும்பித் தூண்டினல்தான் மனமும் இந்திரியமும் சேர்ந்து ஒரு விஷயத்தை அறிகிறது. அறிந்ததைத் தானே நினைக்கிறது. அந்தக்கரணத்தின் மூலமாகத்தான் ஆத்மா அணு என்பது ஸம்ஸாரமுள்ளது என்பதுமாகும். ஆத்மா அணுவல்ல. அணு பெரியது என்ற ச்ருதிகளுக்கும் விசாரமில்லை.

**கர்த்ராதிகரணம். 7-ஸூத்ரங்கள்.**

**कर्ता शास्त्रार्थवत्वात्**

**33 கர்த்தா ஶாஸ்த்ரார்த்தவத்வாத் ।**

ஜீவனே பரமாத்மா, எனக் கூறப்பட்டது. அந்த ஜீவன் கர்த்தாவாக இருக்கமுடியாது. ஆதலால் புத்தியே கர்த்தா போக்தா எனில் அல்ல. ஜீவன்தான் கர்த்தா. அதை நாடித்தான் யாகம் செய் என வேதம் விதிக்கின்றது. அந்த சாஸ்த்ரம் புத்தியிடம் பொருந்தாது.

**विहारोपदेशात् ।**

**34 விஹாரோபதேஶாத் ।**

ஜீவனைப்பற்றிக் கூறுமிடத்தில் தன் உடலில் இஷ்டப்படி சுற்றுகிருன் என்றும் ஸ்வப்நகாலத்தில் பலவிஷயங்களில் ஸஞ்சாரம் செய்கிருன் என்றும் கூறப்படுகிறது. அது கர்த்தாவினிடந்தான் பொருந்தும்.

---

தாம்பூலம் போடுவதோ, வம்புபேசுவதோ கூடாது

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸதாசிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## उपादानात्

### 35 உபாதாநாத்.

ஜீவ ப்ரகரணத்தில் கண் காது முதலிய கரணங்களை தன்னிடம் வாங்கிக்கொள்கிறது, என்று கூறப்பட்டிருப் பதால் ஜீவனே கர்தா புலனை ஏற்பவன்.

## व्यपदेशाच्च क्रियायां नचेत् निर्देश विपर्ययः

### 36 வ்யபதேஶாச்ச க்ரியாயாம் நசேத்நிர்தேச விபர்யய:

விக்ஞாநமென்பது யக்ஞத்தை செய்கிறது, கர்மா வைச் செய்கிறது என தைத்திரீய உபநிஷத் கூறுவ தால் ஜீவனே கர்தா. புத்தியல்ல கர்தா. விக்ஞாநம் என்பது புத்திதான் எனில், விக்ஞாநமென்ற முதல் வேற்றுமை கூறாமல் விக்ஞாநேந என்று மூன்றும் வேற் றுமை கூறப்பட்டிருக்கும்.

## उपलब्धिवदनियमः

### 37 உப லப்திவத் அநியம:

ஜீவனே கர்தாவானால் தனக்கு இஷ்டமானதைத்தான் செய்து கொள்வான். அநிஷ்டமானதைச் செய்துக் கொள்ளமாட்டான். ஆதலால் புத்திதான் கர்தா எனில் இல்லை. ஆத்மா ஸ்வதந்த்ர கர்த்தாவாயினும், அவனுக்கு இஷ்டம் அநிஷ்டம்—இன்பம் துன்பம்—வருவது போல் இஷ்டத்தைத்தான் செய்வான் என்ற நியமமில்லை.

---

அபிவாதயே சொல்லக்கூடாது

அநிஷ்டத்தையும் செய்து அதன் பலனையும் அனுபவிக்கிறான். கண் காதுமுதலிய புலன் மூலமாக ஜீவன் நல்லது கெட்டதான விஷயங்களை அடைகின்றான்.

## शक्तिविपर्ययात्

### 38 ஶக்தி விபர்யயாத்

புத்தியே கர்தா, ஜீவனல்ல என்றால் நான் செல்கிறேன், என்ற அனுபவத்திற்கு மாறாக புத்தியை கர்தாவாக ஏற்று அதற்கு காரணமாக வேறொன்றை ஏற்கவேண்டும். இதற்குள்ள கரண ஶக்தி மாறும்.

## समाध्यभावाच्च

### 39 ஸமாத்ய பாவாச்ச.

"ஆத்மாவை தர்ஶநம் செய். பிரணவத்தால் அதை த்யாநம் செய்" என்ற வேத விதிகள் எல்லாம் ஜீவன் கர்தாவில்லாவிடில் பயனற்றதாகும். ஆதலால் ஜீவனே கர்தா. புத்தி அதன் கரணமாகும்.

### தக்ஷாதிகரணம் 1 ஸூத்ரம்.

## यथाच तक्षोभयथा

### 40 யதாச தக்ஷோப்யதா ।

ஜீவன் கர்தாவானால் அந்த கார்யம் செய்யும் தன்மை அதாவது கர்த்ருத்வம் அக்நிக்கு உஷ்ணம் இருப்பது போல் இயற்கையா? செயற்கையா? என்றிங்கு விசாரிக்கப்படுகிறது. கர்த்ருத்வம் இயற்கை என்றால் ஜீவனுக்கு எப்போதும் மோக்ஷம் ஸித்திக்காது. ஆதலால் புத்தி முதலியவைகளுடன் கூடியபோது கர்த்ருத்வம். தச்சன் வாச்சி உளி முதலிய ஆயுதங்களைக் கொண்டு வேலை செய்யும்போது கர்தாவாகிறான். வேலையால் கஷ்டப்படுகிறான். அவைகளை விட்டு விட்டு வீட்டில்

---

பூஜைக்குப் போகும்போது வந்தனம் செய்யாதே

ஸ்வஸ்தமாக இருக்கும்போது தச்சன் எனப்பட்டாலும் சுகமாக இருக்கிறன். அதேபோல் ஜீவன் கர்தாவும் அகர்தாவும் ஆவான்.

## பராவத்வ அதிகரணம் 2-ஸூத்ரங்கள்.

### परात्तु तच्छ्रुतेः

41 பராத்து தத் ஶ்ருதே:

ஜீவன் அவித்யா நிலையில் கர்தா எனக் கூறப்பட்டது. அவனுக்கு அந்த கர்த்ருத்வம் தானே உண்டாகிறதா? மற்றொருவரை அபேக்ஷித்து உண்டாகிறதா எனில் பரமாத்மாவின் அருளால் தான் ஜீவன் கர்தாவாகிறன். "எவனை இந்த உலகிலிருந்து முன்னுக்குக் கொண்டுவர விரும்புகிறாரோ பரமாத்மா அந்த ஜீவனை நல்ல கர்மா செய்யும்படி தூண்டுகிறர்" என உபநிஷத் கூறுவதால் பரமாத்மா தீனமானது ஜீவனது கர்த்ருத்வம்.

### कृतप्रयत्नापेक्षस्तु विहित प्रतिषिद्धा वैयर्थ्यादिभ्यः

### 42 க்ருத ப்ரயத்நாபேக்ஷஸ்து விஹித ப்ரதிஷித்தா வையர்த்யாதிப்ய:

ஜீவன், துடங்கும் தர்மா தர்மத்தை அபேக்ஷித்து அவன் நற்கர்மாவைச் செய்யும்படித்தூண்டுகிறன். அதற்கேற்றபடியே இன்ப துன்பங்களைத் தருகிறன். ஸம்ஸாரம் அநாதியாதலால் பூர்வ ஜன்மாவில் செய்த புண்ய பாபங்களை அனுசரித்து தர்மா தர்மம் செய்யும்படி தூண்டி இன்பதுன்பங்களைத் தருகிறர் பகவான். இல்லை எனில் யாகம் செய், ஸாதுவைக்கொல்லாதே என்ற விதி நிஷேத ஶாஸ்த்ரங்கள் வியர்த்தமாகும் அல்லவா.

---

अंशोनाना व्यपदेशात् अन्यथाचापि दाशकितवादित्वं अधीयतएके

43 அம்சோநாநாவ்யபதேசாத் அன்யதா சாபி தாச கிதவாதித்வம் அதீயத ஏகே ॥

ஆத்மா தூண்டுகிறவன். ஜீவன் தூண்டப்படுகிறவன் என்று தீர்மானிக்கப்பட்டதால் ஜீவன் வேலையாள் போலவும் ஆத்மா யஜமானன் போலவுமா அல்லது ஜீவன் ஆத்மாவின் அம்சமா? முதல் கூறியதை ஏற்றால் ஜீவன் வேறு ஆத்மா வேறு எனவும் ஏற்க வேண்டும். அது மஹா வாக்யத்தால் நிஷேதிக்கப்படுகிறது. நிஷ்களன் ஆத்மா என்பதால் ஜீவன் ஆத்மாவின் அம்சம் எனவும் ஏற்கமுடியவில்லையே! எனில் ஜீவன்! ஆத்மாவின் அம்சம்போல் ஆவான். உண்மையான அம்சமில்லை என்பதால் மேலே கூறிய தோஷங்களுக்கு இடமில்லை. "அவனைத்தேட வேண்டும். அவனை அறிந்தால் முக்தி" என பேதம் கூறப்படுகிற அதர்வ உபநிஷத்தில் ஆத்மாவே; சம்படவனுகவும் வேடனுகவும் ஆகிருன் என்று அபேதங் கூறப்படுவதாலும் ஜீவன் ஆத்மாவின் அம்சம் போல் கல்பிக்கப்பட்டவன் ஆவான்.

मन्त्रवर्णाच्च

44 மந்த்ரவர்ணுச்ச.

புருஷ ஸூக்தத்தில் "அவனது மஹிமை அவ்வளவு பெரியது. எல்லா பூதங்களும் அவனது ஒரு காலம்சம்" என்று கூறுவதால் ஜீவன் ஆத்மாவின் அம்சம் போன்றவனே.

---

சாப்பிட்டபின் அபிஷேக தீர்த்தம் சாப்பிடாதே

# பிரம்ம ஸூத்ர வ்ருத்தி.

ஸதாசிவ ப்ரம்மேந்திரர் இயற்றியது.

## अपिच स्मर्यते

### 45 அபிசஸ்மர்யதே

பகவத் கீதையில் "மமைவாம் ஶோஜீ வலோக:" எனக் கூறப்படுகிறது.

## प्रकाशादिवत्नैवं परः

### 46 ப்ரகாஶாதிவத் நைவம் பர:

ஜீவன் ஈஶ்வராம்ஶமாஞல் ஜீவனது ஸுக துக்கம் ஈஶ்வரனுக்கும் உண்டாகுமே? எனில் அவித்யையால் ஜீவன் உடல் முதலியவற்றை நான் என்னுடையதென நினைப்பதால் இன்ப துன்பங்களை அனுபவிக்கிருன். ஸூர்யனுடைய ஒளி ஆகாஶமெலாம் வியாபித்திருந்தாலும் வக்ரமான இடத்தில் வக்ரமாக காணப்பட்டாலும் உண்மையில் வக்ரமில்லாததுபோல் ஜீவனுக்கே இன்ப துன்பமில்லை எனில் ஆத்மாவிற்கேது இன்பதுன்பம்?

## स्मरन्तिच

### 47 ஸ்மரந்திச

பரமாத்மா நிர்குணன் நிர்லேபன்—தாமரை இலையில் நீர் ஒட்டாததுபோல் ஆத்மாவிடம் இன்ப துன்பம் இல்லை என வியாஸாதிகள் கூறுகின்றனர்.

## अनुज्ञापरिहारौ देहसंबन्धात् ज्योतिरादिवत्

### 48 அநுக்ஞா பரிஹாரௌ தேஹஸம்பந்தாத் ஜ்யோதிராதிவத்

யாகத்தில் பஶுவை ஹிம்ஸிக்கலாம் எனவும், எந்த ப்ராணியையும் ஹிம்ஸிக்காதே என்றும் பரிஹாரமும்

நக்ஷத்திரங்கள் ஆடை அணிவது

கூறுவது தேஹத்தை ஒட்டியே கூறப்பட்டது. ஔபாஸ நாக்நி ஶ்ரௌத்தம். சுடுகாட்டு அக்நி அஶ்ரௌத்தம் என்பது போலாம்.

## असन्ततेश्च अव्यतिकरः

### 49 அஸந்ததேஶ்ச அவ்யதிகர:

ஆத்மா ஜீவனுக்கும் உடலுக்கும் யஜமானனாக இருப்பதால் ஆத்மாவிற்குப் பல ஸம்பந்த முண்டோ எனில் இல்லை. ஈஶ்வரன் ஒரு நிமித்தத்தால் ஜீவனே தவிர உடலுடன் சேர்ந்து தொடர்ந்திராததால் அவனுக்கு பல ஸம்மந்தமில்லை, அந்தந்த உடலிலுள்ள ஜீவனே பல போக்தா.

## आभास एवच

### 50 ஆபாஸ ஏவச ।

ஜீவன், ஸூர்ய பிம்பம் ஜலத்தில் தோன்றுவது போல் தோற்றமாத்ரமே வேறல்ல. ஒரு பாத்ரத்தில் உள்ள நீர் அசைந்தால் அங்குள்ள ப்ரதிபிம்பம் அசையும், மற்ற பாத்ரத்திலுள்ளது அசைவதில்லை. பிம்பமும் அசைவதில்லை.

## अदृष्टानियमात्

### 51 அதிருஷ்டாநியமாத்

ஸாங்க்ய மதத்திலும் தர்க்க மதத்திலும் அந்தந்த ஜீவன் செய்தது அதிருஷ்டமாக ப்ரதாநத்திலும் அதிருஷ்ட காரணமான மநஸ் ஸம்யோகத்திலும் இருப்பதால் எல்லா ஆத்மாவிலும் இன்பதுன்ப முண்டாகும் என்ற தோஷம் பரிஹரிக்க முடியாது. அத்வைதத்தில் குறிப்பிட்ட ஜீவனிடமே அந்தந்த கர்மா ஸூக்ஷ்மமாக இருப்பதால் இந்த ஜீவன் செய்த பலனை ஆத்மா அனுபவிக்க வேண்டிய அவஶ்யமில்லை. அந்த ஜீவனே அனுபவிக்கும்.

---

125

# अभिसन्ध्यादिषु अपिचैवम्

## 52 அபிஸந்த்யாதிஷு அபிசைவம்

ஸங்கல்பம் ஆசை முதலியவைகளும் ஆத்ம மநஸ் சேர்க்கையால் உண்டாவதால் முன் கூறியவர்கள் மதத்தில் அந்த தோஷம் அப்படியே யிருக்கும். நமக்கில்லை.

# प्रदेशादितिचेन्न अन्तर्भावात्

## 53 ப்ரதேசாதிதிசேன்ன அந்தர் பாவாத்

ஆத்மாவிபுவானாலும் அந்தந்த சரீரத்திலுள்ள ஜீவ மநங்களின் சேர்கையால் ஆத்மாவிற்கும் ஸுக துக்க பலனுண்டாகுமெனில் இல்லை. விபுவான ஆத்மாவிற்கு இந்த ஶரீரந்தான் என்ற நியமமில்லாததால் எங்கும் இருப்பதாலும் பிரதேசத்திலிருக்கிறார் என்று கல்பிக்க முடியாது. அத்வைதிகளுக்கோ அவித்யையால் கல்பிக்கப்பட்ட ஜீவத்தன்மை அகன்றபின் ஆத்ம ஸ்வரூபம் ஸித்திக்கும்.

### ப்ராணோத்பத்யதிகரணம் 4 ஸூத்ரங்கள்.

# तथा प्राणाः

## 54 ததா ப்ராணா:

ஒரு இடத்தில் பிராணன் பிரும்மத்தினிடமிருந்து உண்டானதாகக் கூறப்படுகிறது. ஒரு இடத்தில் பிராணன் ஸிருஷ்டிக்கு முன்னமேயே இருப்புதாகக் கூறப்படுகிறது. ஒன்றோடொன்று முறண்படுவதால் எது ப்ரமாணம் என ஸந்தேஹம். மற்ற பூதங்கள் உண்டாகும் பிரகரணத்தில் பிராணன் கூறப்படாவிடினும் வேறிடங்களில் பிராணனுக்கு உத்பத்தி கூறப்பட்டிருப்பதால் பிராணனும் படைக்கப்பட்டதே ஆகும்.

லாது. அபேதமான மோக்ஷம் வராது. ஆதலால் எப்போதும் ஜீவனுக்கும் ஆத்மாவிற்கும் பேதமில்லைதான். ஆனால் மாயையால் பேதம் கல்பிக்கப்பட்டது. மாயை அகன்றவுடன் பேதமகலுகின்றது என்பது தான் ஸித்தாந்தம்.

30 மேலும் ஆத்மாவைத்தவிர வேறுபார்ப்பவனோ கேட்பவனோ கிடையாதென்றும் பிரபஞ்சாதிவஸ்து ஒன்றுமில்லை என்றும் சாஸ்த்ரங்கூறுவதால் பிரும்மமும் ஜீவனும் ஒன்றேதான். இதில் சிறிதுகூட பேதமில்லை.

## 7 பராதிகரணம்—7 ஸூத்ரங்கள்.

31 இது பூர்வபக்ஷ ஸூத்ரம். அதாவது பிரும்மத்தைத் தவிர வேறு ஒன்றும் கிடையாது என சொன்னோம். ஆத்மாவை ஸேது எனக் கூறுவதால் அணை, ஜலத்தில் மேலமைந்து ஜலத்தைத் தடுப்பதால் அணையைத் தவிர வேராக ஜலமிருப்பதுபோல் ஆத்மாவைத்தவிர வேறு ஒரு வஸ்து உண்டு எனத் தெரிகிறது. மற்றோரிடத்தில் ஆத்மா நான்கு பாதமுள்ளது என்பதால் நான்கு பாதங்கள் தவிர வேறு இடங்களிருக்கின்றன. என்றும் தோன்றுகிறது (3) தூங்கும் போது ப்ராக்ஞாத்மாவோடு சேருகிறான். ஶரீரத்தில் சம்பந்தப்பட்ட ஆத்மா ஆதித்யனிடம் ஸ்வர்ணமயமாக இருக்கும். ஆத்மா கண்ணில் உள்ள புருஷனாக இருக்கிறான் என பல வஸ்துக்களுடன் ஆத்ம ஸம்பந்தத்தைக் கூறுவதால் ஆத்மாவைத் தவிர வேறு வஸ்துக்கள் இருக்கின்றன, என ஸந்தேஹம் உண்டாகிறது.

32 பதில்: ஸேது என்ற சப்தம்முக்யார்த்தமானது என்பது போலல்ல இங்கு. அணை ஜலத்திற்கு எல்லையாக இருப்பதுபோல் ஆத்மா உலகில் படைக்கப்பட்ட வஸ்துக்கள் ஒன்றோடொன்று கலக்காமல் எல்லைபோல் இருக்கிறது என்றுதான் பொருள். உலகமெல்லாம் கல்பிதமென்றும் வ்யவகார நிலையில் தான் அவைகள் ஸத்யமானவை, உண்மையில் இல்லாதவை என்றோம். ஆதலால் ஆத்மாவைத் தவிர வேறு வஸ்து இல்லை.

---

அது ஆச்சர்யமல்லவா ?

33 எங்கும் வ்யாபித்து ஒன்ருகவே இருக்கும் ஆத்மாவை உபாஸிப்பது கஷ்டம். ஆகாஶத்தை எப்படி த்யானம் செய்வது? ஆகாஶத்திற்கு அக்நி வாயு ஆதித்யன் திக்கு என்று நான்கு பாதமுள்ளதாக நினை என்ருல் அது ஸுலபமாக த்யானம் செய்யலாம். அது மநதில் பிடிபட்டால் அவைகளைப் பிறகு விட்டுவிடலாம். இதே போல்தான் ஆத்மா நான்கு பாதமுள்ளது, பதினாறு கலை உள்ளது என்பதெல்லாம் ஆத்மாவை விட வேறு வஸ்து இருக்கிறது என்று கூறுவதற்காக ஏற்பட்டவைகளல்ல. தியானம் செய்வதற்கு ஸுலப ஸாதகமாகக் கல்பிக்கப் பட்டவைகளேயாம்.

34 ஸூர்யனிடம் ஹிரண்மயமாக இருப்பவன் கண்ணில் புருஷனுக இருப்பவன் ஆத்மா என்பவைகள் ஒரே ஜலத்தைக் கடல்நீர், ஆற்று நீர், குளத்து நீர் என்று கூறுவதுபோலாகும். ஒளி ஒன்றே ஆயினும், மாடி வெயில் வீதி வெயில் எனப் பிரித்துக் கூறுவதுபோலாகுமே அன்றி, உண்மையில் வெவ்வேறெனக் கூற வந்தவை அல்ல அந்த வாக்யங்கள்.

35 தூங்கும்போது ஜீவாத்மா பரமாத்மாவிடம் லயிக்கிருன் என்பதால் ஆத்ம ஸம்பந்தமும் பேதமும் முக்யமெனக் கூறலாமே? எனில் இல்லை. ஆயிரக்கணக்கான ச்ருதிகள் ஆத்மா ஒன்றே என்று கோஷிக்கும்போது எப்படி ஸம்மந்தத்தை முக்யமாகக் கொண்டு ஆத்மாவை விட வேருென்றிருக்கிறது என ஏற்பது?

36 அன்றியும் ஆத்மாதான் கீழே இருப்பதும் எங்குமிருப்பதும் அது ஒன்றுதான் உண்டு. அதைத் தவிர மேலானதோ தாழ்ந்ததோ வேறு ஒன்றும் கிடையாது எனக் கூறப்படுவதால் ஆத்மா ஒன்றே உண்மையானது

---

அழிப்பதற்குக் காரணமாவோம்

37 ஸேது என்பதெல்லாம் உபமானமாகக் கூறப்பட்டது என்பதால் ஆத்மா ஸர்வகதன் என நிச்சயமாகின்றது. அதற்குப் பிரமாணமாகப் பல வாக்யங்கள் ஆகாஶம்போல் எங்குமிருப்பவன். ஸ்வர்க்கத்திற்குமேலுமிருப்பவன். ஹ்ருதயாகாஶமாகவும் வெளி ஆகாஶமாகவுமிருப்பவன், நித்யன், எங்குமுள்ளவன், ஸ்தாணு என்று காணப்படுகின்றன.

## 8. பலாதிகரணம் –

## 4 ஸூத்ரங்கள்.

38 பிரும்மத்தைத் தவிர வேறு வஸ்து இல்லை. அந்த பிரும்மமும் ஒருவித விஶேஷமுமில்லாதது என்றால் அந்தகர்மா தீயகர்மாக்களைச் செய்பவர்க்கு யார் பலனைத் தருகிறது என்றல்லவோ கூறவேண்டும்? இல்லை. கர்ம பலனை அளிப்பவன் ஈஶ்வரனே! ஒரு சில க்ஷணம் கர்மாவைச் செய்துமுடிக்க உடனே மறையும். அந்த கர்மா வெகு காலங் கழித்தோ மறுபிறவியிலோ எப்படி பலனைக் கொடுக்க முடியும்? ஆதலால் கர்மாவிற்கேற்ற பலனை ஈஶ்வரனே தருகிறார்.

39 அந்த மஹாபுருஷனை ஆத்மாவே அன்னம், செல்வம் முதலியதையளிக்கிறான் என வேதம் கூறுகிறது.

40 ஜைமினி ஆசார்யாள் ஸ்வர்க்கத்தை விரும்பினால் யாகம் செய் என வேதங் கூறுவதால் தர்மமே பலனைத் தரத்தக்கதென்கிறாரே? எனில்

41 அந்த கர்மா அழிந்துவிட்டாலும் அது அபூர்வம் என்ற ஒரு ஸம்ஸ்காரத்தை உண்டுபண்ணினாலும் இவை ஜடமானதால் பலனைத் தரும் சக்தி இவைகளுக்கில்லை. இவைகளை ஸாதனமாகக்கொண்டு பகவான்தான் பலன் தருகிறார் என்று பாதராயணி கருதுகிறார்.

**3-வது அத்தியாயம் 2-ம் பாதம் முற்றிற்று.**

---

**ஆசாரத்தை வெளிவேஷம் என்பர் சிலர்**

# பிரும்ம ஸூத்ர வ்ருத்தி.

## 3-வது அத்யாயம். 3-ம் பாதம்.

ஸகுண வித்யோபாஸனையால் க்ஞானமுண்டாகி நிர்க்குண ப்ரும்ம ஸ்வரூபத்தில் ஈடுபடமுடியும் என்பதனல் முதலில் ஸகுண வித்யோபாஸனை பற்றிய விசாரம் ஆரம்பிக்கப்படுகிறது.

### 1 ஸர்வ வேதாந்த ப்ரத்யயாதிகரணம்.

### 4 ஸூத்ரங்கள்.

1 ஒவ்வொரு உபநிஷத்திலும் காணப்படும் பஞ்சாக்நி வித்யை, தஹர வித்யை, ப்ராணோபாஸனை முதலியன வெவ்வேரு? ஒன்றுதானு? என ஸந்தேஹம். வெவ்வேறு வேதாந்த வாக்யங்களாக இருப்பினும் அந்த உபாஸனையின் விதி பலன் பெயர் முதலியன ஒன்ருகவே காணப்படுவதால் சாந்தோக்ய ப்ராண உபாஸனை வேறு ப்ருஹதாரண்யக ப்ராண உபாஸனை வேறல்ல. ஒன்றுதானிரண்டும். எவன் பிராணனை ஜ்யேஷ்டமாகவும் சிறந்ததாகவும் அறிகிருனே அவன் தன்னைச் சார்ந்தவர்களுக்குள் ஜ்யேஷ்டனுகவும் ஶ்ரேஷ்டனுகவும் ஆகிருன் என்பது எல்லா உபநிஷத்திலும் விஶேஷமின்றிக் கூறப்படுகிறது. ஆதலால் வெவ்வேறு வேதங்களிலும் கூறப்பட்டாலும் உபாஸநம் ஒன்றுதான். அது மாறுபடுவதில்லை.

2 வாஜஸநேய ஶாகையில் கூறப்படும் பஞ்சாக்நி வித்யையில் உலகில் பிரஸித்தமான அக்நியை ஆருவது அக்நியாக உபாஸி என்றும், ஆறு அக்நிகளாகக் கூறப்படுவதாலும் ஸாம உபநிஷத்தில் ஐந்தே அக்நி காணப்படுவதாலும் இங்கு கூறும் உபாஸனை வேறு, அது வேறு எனில் இல்லை.

பூர்வமீமாம்ஸையில் கூறப்பட்ட நியாயத் தீர்ப்புகளின்படி அதாவது அதிராத்ரத்தில் ஷோடசீ க்ரஹணம் உண்டு. அதில்லை என இருவகையாகக் கூறப்படினும் அதிராத்ரமென்பது ஒன்றுதான் என்பதுபோல், இங்கும் பேதமில்லை. ஒரே வித்தைதானது.

3 பிரும்மவித்யையைக் கூறும் முண்டக உபநிஷத்தை (அதர்வ வேதம்) அத்யயநம் செய்யும் போது தனியாக வேறு ஒரு உபநயநம் செய்துகொண்டு தலையில் அக்நியை ஒரு பாத்ரத்தில் வைத்துக்கொண்டே கற்க வேண்டும் என்றும் கூறியிருப்பதால் அந்த வேதத்திலும் மற்ற வேதத்திலும் கூறப்படும் வித்யை எப்படி ஒன்றாகும்? எனில், பொதுவாக அந்த அதர்வவேத அத்யயநத்திற்கு அந்த விரதம் கூறப்பட்டதே தவிர வேதாந்த வித்யைக்கு அங்கமாகக் கூறவில்லை. ஆதலால் ஒரே வித்யைதானது.

4 எல்லா வேதங்களும் பிரும்மபதத்தையே கூறுகின்றன என்பதுபோல் ஸகுணோபாஸனையான வித்யைகளிலும் எல்லா வேதங்களாலும் கூறப்படுவது ஒன்றுதான் எனக் காட்டுகிறது. ஒரு உபநிஷத்தில் கூறியதை ஆமோதித்து மேலே உபாஸனையை (வைச்வாநர வித்யையில்) மற்றோர் உபநிஷத் கூறுகிறது.

## 2 உபஸம்ஹாராதிகரணம்.

5 ஒரு உபநிஷத்தில் கூறப்பட்ட உபாஸனையில் சில குணங்கள் அதிகமாகக் கூறப்படுகின்றன. சிலவைகளில் அது இல்லை என்றாலும் குணங்கள் குறைவாகவுள்ள இடத்தில் அதிகமாகக் கூறப்பட்ட மற்ற உபநிஷத் குணங்களையும் சேர்த்துத்தான் உபாஸிக்க வேண்டும். ஒரே வித்யை ஆனதால் கூறாததைக் கூறியவிடத்திலிருந்து எடுத்துக்கொள் என்ற நியாயத்தைத் தழுவி அவைகளையும் சேர்த்தே உபாஸிக்க வேண்டும்.

---

157

## 3 அன்யதாத்வ அதிகரணம்—3 ஸூத்ரங்கள்.

6 பஞ்சாக்நி வித்யை பிராணோபாஸனை வித்யை என்பன ஒரே பெயருடனிருப்பதால் வெவ்வேறு வேதங்களால் கூறப்படினும் அவை ஒரே வித்யை தான் என முன்னே கூறப்பட்டதல்லவா? அதேபோல் வாஜஸநேய ஶாகையில் கூறப்படும் உத்கீத ப்ராண வித்யையும் சாந்தோக்யத்தில் கூறப்படும் உத்கீத வித்யையும் ஒன்றுதான். என்று இது பூர்வ பக்ஷ ஸூத்ரமாகும்.

7 ஸித்தாந்தம் உத்கீதம் என்ற பெயர் இரண்டிலும் ஒன்ருக இருப்பதால் மாத்ரம் ஒரே வித்யை எனக் கூறுவதற்கில்லை.

ஓம் என உத்கீதத்தை உபாஸி என்று கூறும் இடத்தில் உத்கீதத்தைச்சார்ந்த ஓம் என்ற எழுத்தை பிராணன் என்று உபாஸி என ஒரிடத்திலும் கூறப்பட்டுள்ளது. மற்ருேரிடத்தில் ஸகல ஸாமவேத பக்திகளும்—பிரிவு கர்த்தாவான உத்காதாவை பிராணன் என ஆரம்பித்திருப்பதால் இது வேறு அதுவேறு உபாஸனை தான்.

8 ஸம்க்ஞை அதாவது பெயர் ஒன்ருயினும் பிரகரண பேதத்தால் உபாஸனு பேதமுண்டு. பொதுவாக காடக என்றழைக்கப்பட்டாலும் அக்நி ஹோத்ரம் தர்ஶ பூர்ணமாஸம் முதலிய கர்மாக்கள் வெவ்வேறே. அதே போல் இங்கும் தனித்தனி வித்யைதான்.

## 5 ஸர்வாபேத அதிகரணம்

10 வாஜஸநேய உப்நிஷத்திலும் சாந்தோக்யத்திலும், வாக்கு முதலிய இந்திரியங்களுக்கும் பிராணனுக்கும் ஸம்வாதம் தோன்றிற்று. நானே சிறந்தவன், வஸிஷ்டன். அதாவது மிகச் சிறந்த பலமுள்ளவன். நானே சிறந்தவன் என்ற வாதம் உண்டானது.

யார், உடலை விட்டுக் கிளம்பினுல் உடல் அழியுமோ அவனே பலிஷ்டன் எனத் தீர்மானிக்கப்பட்டது. கண்.

காது, வாக்கு, மூக்கு முதலியன ஒவ்வோராண்டு வெளியில் சென்று வந்தன. குருடாகவும், செவிடாகவும் ஊமையாகவுமிருந்து வாழ்ந்ததே தவிர உடல் அழியவில்லை. பிறகு அவைகள் பிராணனே உயர்ந்தவன். வஸிஷ்டாதி குணங்கள் அதற்கே அளிக்கப்பட்டன என்று கூறி பிராண உபாஸனை வர்ணிக்கப்பட்டது.

மற்ற உபநிஷத்துக்கள் பிராணோபாஸனை கூறும் போது வஸிஷ்டாதி குணங்களைக் கூறவில்லை, என்றாலும் எல்லாவற்றிலுமுள்ள பிராணஉபாஸனையில் பேதமில்லை. ஆதலால், வஸிஷ்டாதி குணங்கள் கூறப்படாவிடினும் அவைகளைச் சேர்த்தே உபாஸிக்கவேண்டும்.

## 6 ஆனந்தாத்யதிகரணம்— 3 ஸூத்ரங்கள்.

*11* ஆனந்தரூபி ஸர்வக்ஞன், ஸர்வகதன் என்று ஆத்ம ஸ்வரூபத்தைக் கூறுகிறது உபநிஷத். சில உபநிஷத்தில் எல்லாம் கூறப்படவில்லை. ஆதலால் அந்தந்த உபநிஷத்தில் கூறப்பட்ட தர்மந்தானந்த ஆத்மாவிற்கு உண்டா? மற்றதில் கூறப்பட்டதுமுண்டா? எனில் முன் கூறியது போல் பிரும்மம் ஒன்றேயாதலால் அதற்கு எங்கெந்த உபநிஷத்தில் எங்கெந்த தர்மங்கள் கூறப்படுகின்றனவோ அனைத்தும் உண்டு.

*12* பிரும்மம் ஒன்றே ஆனதால் மற்ற உபநிஷத்துகளில் கூறப்பட்ட தர்மங்களெல்லாம் அதற்கு உண்டு எனில், தைத்திரீய உபநிஷத்தில்" அதற்கு பிரயமே தலை, மோதம் தக்ஷிணரக்கை, ப்ரமோதம் உத்தரரக்கை. ஆனந்தமே ஆத்மா " என கூறபடுபவையெல்லாம் ஆத்மாவிற்கு உள்ள தர்மமாகுமே எனத்தோன்றும். அப்படியல்ல

ஆனந்தமோத ப்ரமோத என்பவைகளில் குறைவதும் அதிகமாகும் பேதம் கூறப்படுகிறது. பேதமில்லாத ஆத்மாவிடம் அது ஆத்ம தர்மமாக ஆகாது. உபாஸிக்கப்படும் பிரும்மம் ஒன்றாயினும் உபாஸனை வேறுதான். ஒரே ராஜாவை ஒருவன் சத்ரத்தால் உபசரிப்பதும் மற்றொருவன் சாமரத்தால் உபாஸிப்பதும் போலாகும்.

*13* ஆநந்தமயம் முதலிய தர்மங்கள் ஆத்மஸ்வரூபமானதால் அவை எங்கு கூறப்பட்டாலும் கூறப்படாவிடினும் ஆத்மாவிற்கு உண்டு.

---

ஒழுங்கில்லாச் செயல் உப்பில்லா உணவு

# பிரும்ம ஸூத்ர வ்ருத்தி.

## 7 ஆத்யாநாதி கரணம்—2 ஸூத்ரங்கள்.

*14* காடக உபநிஷத்தில் இந்திரியங்களைவிட (அவைகளால் கிரஹிக்கப்படும்) அர்த்தங்கள் பெரியன அவைகளைவிட மநம் பெரிது. அதைவிட புத்தி பெரிது என்று கூறி கடைசியில் புருஷனைவிட வேறில்லை. அதே கடைசி எல்லை. அதே கதி'' என்று கூறுகிறது. இதில் ஒவ்வொன்றும் பெரிதுதானு? முடிவில் கூறப்பட்ட புருஷனே பெரிதா எனில் அவைகள் பெரிது என்று எண்ணுவதால் யாதொரு பயனுமில்லை. எல்லாவற்றையும்விட ஆத்மாவே பெரிது. அந்தப் புருஷனைத் தேடிப்பிடித்தால் ஜநந மரணமில்லை. மோக்ஷமுண்டு என்று மேலே இருப்பதால் அவைகளைப்பற்றி விசாரம் பயனில்லாததால் அது பெரிதென முடிவுகட்டத் தேவையில்லை.

*15* அன்றியும்மேலே ''கூடோத்மாந ப்ரகாஶதே'' என ஆத்ம சப்தமிருப்பதால் அந்த ஆத்மா பற்றிதான் பெரியது எனக் கூறுவது மிகப் பொருத்தமானது.

## 8 ஆத்ம க்ரஹீதி அதிகரணம்-2 ஸூத்ரங்கள்.

*16* ஐதரேய உபநிஷத்தில் ''ஆத்மா இது ஒன்று தானிருந்தது முதலில் வேறொன்று மில்லை'' என ஒரு வாக்யமிருக்கின்றது. அதேபோல் ஒரு புருஷன் முதலிலிருந்தான். அவனே உலகைப் படைக்கக் கருதினன் எனக் காணப்படுவதால் அதற்கு ஹிரண்யகர்ப்பன் என அர்த்தங்கொள்ளலாமா? என ஸந்தேஹம், தோன்றும் அந்த ஆத்மாவினிடமிருந்து ஆகாசம் உண்டானது என மேலே காணப்படுவதால் அங்கு பரமாத்மாதான் கூறப்படுவது. அவனையே புருஷன் எனக் கூறலாம்.

---

17 உலகின் உத்பத்திக்குமுன் அவனே இருந்தான் எனவும் அவனைத் தவிர வேறு வஸ்துவில்லை என்பதாலும் அவனது ஸிருஷ்டிக்குட்பட்ட ஹிரண்ய கர்ப்பன் என்று பொருள் கூறமுடியாது.

## கார்யாக்யாந அதிகரணம்.

18 சாந்தோக்ய பிருஹதாரண்யக உபநிஷத்துக்களில் பிராண உபாஸனை கூறப்படுகிறது. அதில் "இப்படி அறிந்து உண்மனம் போகும்போது ஆசமநம் செய்ய வேண்டும். உண்டபின் ஆசமனம் செய்ய வேண்டும். இதே பிராணனுக்கு நக்நமில்லாமல் செய்யும் வஸ்த்ரம் போலாகும்."

எனக் காணப்படுவதால் இங்கு ஆசமநம் விதிக்கப்படுகிறதா? பிராணன் வஸ்த்ரமுள்ளதாகிறது என்ற பாவனை விதிக்கப்படுகிறதா? இரண்டுமே விதிக்கப்படுகிறதா என ஸந்தேஹம். எப்போதும் ஒரு வாக்யத்தில் இரண்டு விதிகள் கூறப்படமாட்டா. அன்றியும் ஏற்கனவே உண்ணும்போது ஆசமநம் செய்ய வேண்டுமென தர்ம நூல் கூறுவதால் இங்கு பிராணனுக்கு ஆசமன ஜலம் வஸ்த்ரமாகிறதென்றே கொள்ளவேண்டும்.

## ஸமாநாதி கரணம்.

19 வாஜஸநேய ஶாகையில் சாண்டில்யர் என்ற முனிவர் கண்டு அனுஷ்டித்து அவர் பெயரால் ஶாண்டில்ய வித்யா உபாஸநம் கூறப்படுகிறது.

ஆத்மாவை மனோமயனாக பிராணனை ஶரீரமாயுள்ளவனாக பிரகாஶ ரூபனாக உபாஸிக்கவேண்டும். வாஜஸநேய ஶாகையையே சார்ந்த பிருஹதாரண்யத்தில் மனோமயனான புருஷன் ஸத்யன். அந்த ஹ்ருதய கமலத்தில் நெல் போலவும் யவம் போலவும் இருக்கிறான். அவனே எல்லாவற்றிற்கும் ஈஶாநன். எல்லாவற்றிற்கும் அதிபதி. உலகிலுள்ள எல்லாவற்றையும் ஶாஸனம் செய்கிறான்.

எனக் காணப்படுகிறது. இவ்விரண்டும் ஒரே வித்யையா? வெவ்வேறு எனில் ஒரே ஶாகையில் ஒரே ஆத்மாவையே உபாஸிக்கும்படி கூறப்படுவதால் வேறிடத்தில் கூறப்பட்ட குணங்களேயும் சேர்த்துக்கொண்டு உபாஸனே செய்யவேண்டும். இது ஒரே உபாஸனே தான். ஆனுல் இரண்டு முறை சொன்னதையே சொன்ன தோஷம் ஏற்படாதே எனில் ஒரிடத்தில் உபாஸனே மாத்ரம் விதிக்கப்பட்டது மற்ருேரிடத்தில் உபாஸிக்க வேண்டிய குணங்கள் கூறப்பட்டன என்பதால் சொன்னதையே சொன்ன தோஷம் தோன்ருது.

### ஸத்ய வித்யாதி கரணம் 2 ஸூத்ரங்கள்.

20 பிருஹதாரண்யக உபநிஷத்தில் ஸத்யம் பிரும்ம என்று துவக்கி. அதி தைவமான ஸூர்யனிடம் அஹஸ் என்ற பெயரால் உபாஸிக்கவேண்டும். ஆத்யாத்மிகமான புருஷனுடைய கண்ணில் அஹம் என்ற பெயருடன் உபாஸிக்க வேண்டுமெனக் காணப்படுகிறது. முன்னே கூறிய அதிகரண நியாயப்படி ஸத்ய வித்யை ஒன்றே ஆதலால் ஒரே உபாஸனே தான் என பூர்வபக்ஷ ஸூத்ரமிது.

21 ஸித்தாந்தம். வித்யை ஒன்ருனுலும் அஹஸ் என்றும் அஹம் என்றும் வெவ்வேறு இடத்தில் கூறப்பட்டிருப்பதால் தனித்தனி உபாஸனேயாக உபாஸிக்க வேண்டும். ஒன்ருேடொன்று சேர்க்கத்தக்கதல்ல.

22 ஆதித்ய புருஷனுடைய ரூபத்தைக்கூறி அதே ரூபந்தான் அக்ஷிபுருஷனிடமிருக்கிறது., எனக் குறிப்பிடுவதால் இரண்டும் ஒரே உபாஸனே அல்ல. தனித்தனி உபாஸனே தான்.

### ஸம்ப்ருத்யதி கரணம்.

23 ஒரு உபநிஷத்தில் ஸம்ப்ருதி த்யுலோகவ்யாப்தி முதலியன பிரும்மத்தினிடம் இருப்பதாகக் கூறுகிறது.

---

தேஹப் பயிற்சியால் உடல்நல முண்டுதான்

அதே உபநிஷத்தில் தான் ஶாண்டில்ய வித்யை கூறப்படு கிறது. ஆதலால் இரண்டுமொன்றென நினைக்கக்கூடாது. தனித்தனி உபாஸநந்தான்.

## 24 புருஷ வித்யாதி கரணம்.

பைங்கிரஹஸ்ய மென்ற உபநிஷத்தில் "புருஷனே யக்ஞம்" என்று ஓர் உபாஸநம் கூறப்பட்டு மற்றும்பல அம்ஶங்கள் அதைத் தழுவிக் கூறப்படுகின்றன. அதே தைத்திரீய ஶ்ருதியில் ஒரு புருஷயக்ஞம் கூறப்படுகிறது. இரண்டும் ஒன்ருனல் இங்கு காணுததுமங்கு கூறப்பட் டதுமான குணங்களை இத்துடன் சேர்த்து உபாஸிக்க வேண்டும் எனத் தோன்றலாம்.

ஆனல் பைங்கி உபநிஷத்தில் புருஷனுடைய ஆயுஸ்ஸை மூன்ருக வகுத்து அவை ப்ராதஸ்ஸவநம் மாத்யந்திநஸவநம், திருதீயஸவநம் என முறையே உபாஸிக்கும்படி கூறப்படுகிறது. அன்றியும் அங்கு ஆஶிஸ் முதலியன தீக்ஷை முதலியனவாகக் கருதவேண் டும் என விஶேஷமாக உளது. தைத்திரீயத்திலோ பத்நீ யஜமாநன் வேதி முதலியவைகளே கூறப்படுகின்றன. ஆதலால் இரண்டும் தனித்தனி உபாஸனை தான். ஒன் றல்ல அவஶ்ருதம் என்பது இரண்டிலும் இருப்பதாலும் ஒன்றெனக் கூறமுடியாது. ஒரே ஒரு அம்ஶம் மாத்ரம் இருப்பதாலது போதியதல்ல.

## வேதாத்யதி கரணம்.

25 அதர்வ உபநிஷத்தின் ஆரம்பத்தில் சில மந்த் ரங்கள் கூறப்பட்டிருக்கின்றன. கண்வ உபநிஷத்தில் பிரவர்க்ய கர்மாவின் மந்த்ரம் இருக்கிறது. இவை களுக்கு உபநிஷத்துடன் ஸம்மந்தம் உண்டா? ஸம்மந்த மில்லையா என ஸந்தேஹம். அதர்வத்திலுள்ள ஆபிசார பிரயோகத்துடன் கண்வத்திலுள்ள பிரவர்க்யு கர்மா வுடன் யாதொரு ஸம்மந்தமும் கிடையாது. இவைவேறு உபநிஷத் வேறு.

---

அதற்காக வீணே 2 மைல் நடக்காதே

# பிரும்ம ஸூத்ர வ்ருத்தி.

## ஹானி அதிகரணம்.

26 பிரும்மோபாஸனை செய்தவன் இவ்வுடலையும் உலகையும் விட்டுப் பிரும்மலோகஞ் சென்று பிரும்மாவுடன் கைவல்ய முக்தி அடைகிறான். இந்த ப்ரகரணத்தில் ஒரு உபநிஷத், குதிரை மணலில் வீழ்ந்து புரண்டபின் தனது கேசங்களை உதறிக்கொண்டு செல்வது போல் புண்ய பாபங்களை உதறித் தள்ளிக்கொண்டு செல்கிறான் என்றும், ஒரு உபநிஷத்தில் பிரும்மலோகம் செல்பவனின் சொத்தை பிள்ளையும், புண்யத்தை நண்பர்களும், பாபத்தைப் பகைவர்களும் கொண்டு செல்கிறார்கள் எனக் கூறப்படுகிறது. இவைகள் முரண்பாடுள்ளவை அல்ல. புண்ய பாபங்களை உதறுவது என்பதால் அவை சில காலம் பயனற்றவைகளாகும். மித்ரர், சத்ருக்கள், எடுத்துக்கொள்கிறார்கள் என்பதால் முக்தனுக்கும் பலன் தாராமல் மற்றவர்க்குப் பலனளிக்கிறதெனக் கொள்வது நியாயம்.

## ஸாம்பராய அதிகரணம்–2 ஸூத்ரங்கள்.

27 பர்யங்க வித்யோபாஸகன் விமாநத்திலேறிப் புண்ய பாபங்களை உதறித்தள்ளி விரஜாநதியைத் தாண்டி பிரும்ம லோகம் செல்கிறான் எனக் கூறப்படுகிறது. இந்த சரீரத்தை விட்டவுடனேயே புண்ய பாபங்களையும் விடுகிறானா? விமான மேறிச் சென்றபின் விடுகிறானா? என்று ஸந்தேஹம் தோன்ற விமாநத்தில் அமர்வதற்கு முந்தியே உடலைவிடும்போதே புண்ய பாபங்களை விடுகிறான். பிறகு அவனுக்குக் கர்மாக்களால் பயனில்லை.

---

ஒருவருக்குப் பிடிப்பது மற்றவருக்குப் பிடிப்பதில்லை

28 உடலிருக்கும் போதே வித்யானுஷ்டானம் அதனுல் உண்டாகும் கர்மக்ஷயம் பிரும்ம ப்ராப்தி உபாஸகன் இஷ்டப்படி ஒன்ருக இருப்பதில் விரோதமில்லே.

## கதோராத்தவத்வ அதிகரணம்–2 ஸூத்ரங்கள்.

29 உபநிஷத்தில் வித்யோபாஸநா ப்ரகரணத்தில் தேவயாநமெனும் வழிகூறப்படுகிறது. அந்த வழியாகச் செல்பவர் பிரும்மலோகஞ் சென்று பிரும்மாவுடன் ஸகல போக பாக்யங்களேயும் அனுபவித்து, அவர் உத்யோகம் முடிந்து பரமாத்மாவுடன் ஐக்யமாகும்போது இவரும் லயிக்கிருர். இந்த தேவயாந மார்க்கம் உபாஸகர் அனேவர்க்கும் பொதுவானதோ என எண்ணலாம். நிர்க்குணோ-பாஸநம் செய்பவர் புண்ய பாபங்களே உதறித் தள்ளி, எங்குமுள்ள பரமாத்மாவிடம் சேருகிருர் என்பதால் இவருக்கும் அந்த மார்க்கத்திற்கும் ஸம்மந்தமில்லே.

30 நிர்க்குணோபாஸகரும் க்ஞாநியாதலால் அந்த மார்க்கம் அவருக்கும் வேண்டாமே எனில் அப்படி அல்ல. ராமேஸ்வரத்திலுள்ளவர்க்குக் காசிக்குப்போகவழி கூறிணுல் அது காசியிலேயே உள்ளவர்க்கும் கூறப்பட்டதாகுமா?

## 18 அநியமாதிகரணம்.

31 ஸகுணோபாஸகருக்கே தேவமார்க்கம் என்ருேம், அதில் பஞ்சாக்நி வித்யை வைஸ்வநரோபாஸநம் முதலிய இடங்களில் இந்த மார்க்கம் கூறப்படுவதால் இவர்கள் மாத்ரம் அந்த வழியாகச் செல்கிருர் என்ற நியமமில்லே. ஸகுண வித்யோபாஸனே செய்பவர் அனேவர்க்கும் அந்த மார்க்கம் பொதுவே.

## 19 யாவததிகாராதி கரணம்

32 பிரும்மக்ஞாநிகளுக்கு மறுபிறவி இல்லே என்பது நிச்சயம். அபாந்தரதமஸ் எனும் க்ஞாநி பிரும்மாவின்

உத்தரவுப்படி வியாஸராக அவதரித்தார். க்ஞானி யான வஸிஷ்டர் உடலைவிட்டு மைத்ராவருணியானார். ஸநத்குமாரர் ருத்ரனுக்குத் தான் வரமளித்து ஸ்கந்தனாகத்தோன்றினார் என இதிஹாஸ புராணங்களில் பல க்ஞானிகள் மறு உடலெடுத்ததாகக் கூறப்படுகிறதே. அவர்களுக்கும் கர்மாதீநமான பிறவி உண்டோ என ஸந்தேஹப்படக் கூடாது.

பிரும்மா ஸூர்யன் முதலியவர்கள் பரமனது விருப்பப்படி குறித்த காலம்வரை அதிகாரம் செலுத்திப் பிறகு பிரும்ம ஸ்வரூபத்தில் லயிக்கின்றனர். இடையில ஸமயம் அவச்யம் நேர்ந்தால் தனது க்ஞான ஶக்தியால் மறு உடல் எடுத்துக்கொள்கிறார்களே தவிர கர்மாதீநமாகப் பிறப்பதில்லை.

## 20 அக்ஷராதிகரணம்

33 பல இடங்களில் அக்ஷர ப்ரும்மோபாஸநம் காணப்படுகிறது. சில இடங்களில் அக்ஷரமான ஆத்மாவைத் தவிர இரண்டாவது வஸ்து இல்லை எனக்கூறப்படுகிறது. சிலவிடத்தில் கேவல அக்ஷர ப்ரும்மோபாஸநம் மாத்ரமிருக்கிறது. அதில் அந்த நிஷேதங்களில்லை. அந்த நிஷேதம் கூறப்படாத விடத்திலும் சேர்த்தே உபாஸிக்க வேண்டும் என பூர்வ மீமாம்ஸா உதாஹரணம் காட்டுகிறது. ஸூத்ரம் உபாஸிக்க வேண்டிய பிரும்மம் அக்ஷரமொன்றேயாதலால் அந்த நிஷேதமிங்கும் ஏற்கத்தக்கதே.

## 21 இயததிகரணம்.

34 இரண்டு பக்ஷிகள் ஒரு மரத்திலிருக்கின்றன என்று அதர்வ வேதமும் கர்ம பலனை அநுபவிக்கின்றனர் என்று காடகத்திலும் காணப்படுவதால் முதல் கூறப்பட்டதில் ஒரு பக்ஷி ஜீவன் கர்மபலனைப் புஜிக்கின்றது. மற்றொன்று உண்ணுமலேயே பிரகாஶிக்கிறது என்றும் காடகத்தில் இருவரும் புஜிப்பதாகக் கூறப்படுவதால்.

---

வேண்டாதது வந்தாலும் அது பிறர்க்கென

இவை தனித்தனி வித்யைகளா ? அல்லது ஒன்றேதானு? என ஸந்தேஹம். இரண்டும் வெவ்வேறல்ல. ஒரே வித்யைதான்.

## 22 அநந்தராதி கரணம்.

35, 36 "யத் ஸாக்ஷாத் அபரோக்ஷாத் ப்ரும்ம," "ய ஆத்மா ஸர்வாந்தர:" என்றவிடத்தில் தனித்தனியாகக் கூறப்பட்டிருப்பதால் இது தனித்தனியான இரு உபாஸனை என்று தோன்றும். இரண்டு உபாஸனை என ஏற்காவிடில் இருமுறை கூறியது வீணுகும் என்பது பூர்வ பக்ஷம். அப்படியல்ல. ஒரே உபாஸனைதான். "தத்வமஸி" என்றவிடத்தில் கூறப்பட்டதுபோல் ஒரே உபாஸனைதான் இருமுறை கூறப்பட்டது.

## 23 வ்யதிஹாராதி கரணம்.

37 ஐதரேய உபநிஷத்தில் "நான் என்பது அந்த ஆத்மாவே." "எது அந்த ஆத்மாவோ அது நானே" எனக் கூறப்பட்டிருக்கிறது. இதில் ஜீவனுக இருப்பது ஆத்மா. ஆத்மாவாக இருப்பது ஜீவன் என ஒரே புத்தியாக உபாஸிக்கவேண்டுமா ? தனித்தனியாக உபாஸிக்க வேண்டுமா? எனில் தனித்தனியாக இரண்டாக உபாஸிக்க வேண்டும் என ஸித்தாந்தம். மற்ருேரிடத்திலும் நீ நானுக இருக்கிருய், நான் நீயாக இருக்கிறேன் எனக் காணப்படுகிறது.

## 24 ஸத்யாத்யதிகரணம்.

38 எவன் பெரிய யக்ஷரூபமான ஸத்ய ரூபியான பிரும்மத்தை அறிகிருனே அவன் லோகங்களை ஜயிக்கிருனென்றும் ஸூர்யமண்டலத்திலும் நமது வலது கண்ணிலுமுள்ள ஸத்ய பிரும்மத்தை உபாஸிப்பவன் ஸகல பாபங்களிலுமிருந்தும் விடுபடுகிருன் என்றும் காணப்படுகிறது. ஸத்யம், பிரும்மா என்பது ஒன்ருயினும் உலகத்தை ஜயிப்பது பாபங்கள் அகலுவது என்ற பலத்தில் மாறுதலிருப்பதால் இது தனித்தனி உபாஸனையோ ? எனத் தோன்றும். ஒரே உபாஸனைதானது. இருவகைப் பலனுமுண்டு அதற்கே.

---

பொறுத்துக்கொள்ள வேண்டும்

# பிரும்ம ஸூத்ர வ்ருத்தி.

## 25 காமாத்யதிகரணம்.

39 சாந்தோக்ய உபநிஷத்தில் ஹ்ருதயாகாஶத்தில் ஸத்யகாமன் ஸத்ய ஸங்கல்பனுக இருக்கிருன். ஆத்மா என்றும் வாஜஸநேய உபநிஷத்தில் விஜ்ஞானமயன், ஹ்ருதயத்தில் ஆகாஶமாக இருக்கிருன் எனவும் காணப் படுகிறது. இங்குள்ள சில விசேஷணங்கள் அங்கில்லை. அங்குள்ளது இங்கில்லை. ஆதலால் இது தனித்தனி உபா ஸனையா ? என ஸந்தேஹம். இரண்டிடத்திலும் ஹ்ருதயா காஶத்தில் உள்ளவர் என்றிருப்பதாலும், ஒரே இடத்தில் உள்ளவர் ஆத்மா எனக் கூறப்படுவதாலும் இரண்டும் ஒரே உபாஸனைதான். சில குணங்கள் ஓரிடத்தில் காணப் படாவிடினும் ஸத்யபாமா என்ற பெயரை பாமா, பீம ஸேநன் என்பதில் பீமன் என்றழைத்தாலும் அது எப்படி பூர்ணமான பெயரை எண்பிக்குமோ அப்படியே அந்த குணங்களனைத்தையும் கூறியதாகக் கருதி எல்லா குணங் களுடனும் உபாஸிக்கவேண்டும்.

## 26 ஆதராதிகரணம்.

40 வைஶ்வாநர வித்யையை உபாஸிப்பவன் போஜநம் செய்யும்போது முதலில் "பிராணுய ஸ்வாஹா" என வாயில் ஐந்து ஆஹுதி செய்கிருன். அது பிரா ணுக்நிஹோத்ரம் எனப்படும். (உபாஸனை இல்லாத வரும் அதைச் செய்யவேண்டும்.) உபாஸகன் உபவாஸ மிருக்க நேர்ந்தால்கூட பிராணுக்நிஹோத்ரம் செய்யத் தான் வேண்டும். அதிதிகளுக்குக் கூட அன்னமளிப்ப தற்குமுன் பிராணுக்நிஹோத்ரம் செய்யவேண்டும் என ஆதரவு காட்டுவதால் என்பது பூர்வபக்ஷ ஸூத்ரம்.

---

41 போஜநத்திற்காக வரும் அன்னத்தில் முதல் ஹோமம் பிராணாக்நி ஹோத்ரம் எனக் கூறப்பட்டிருப்பதால் அன்னமில்லாதபோது பிராணாக்நிஹோத்ரமில்லை தான். அன்னமில்லை ஹோமமுமில்லை.

## 27 தந்நிர்த்தாரணாதி கரணம்.

42 யாககர்மாவிற்கு அங்கமாகக் கூறப்பட்ட உத்கீதஸம்மந்தமான பிராணோபாஸனை கூறப்பட்டிருக்கிறது. அந்த உபாஸனை நித்யமா? அதாவது அவச்யம் அதைச் செய்தே தீரவேண்டுமா? எனில், அந்த உபாஸனை வேண்டுமென நியமமில்லை. உபாஸித்தால் சிறந்ததுதான் உபாஸிக்காவிடில் கர்மலோப மில்லை.

கர்மாவை அறிந்து ஶ்ரத்தையுடன் செய்தால அந்த கர்ம பலம் மிக வீர்யமுள்ளதாக இருக்கும் எனக் கூறப்படுகிறது. உபாஸிக்காவிடில் கர்மாவிற்குப் பலனில்லை என்று கூறவில்லை. அன்றியும் யாகம் செய்யும் வகையைக் கூறிய கல்ப ஸூத்ரம் இந்த உபாஸனையைக் கூறவில்லை. [கர்மாவிலுள்ள மந்த்ரங்கள் தெரிந்தால்தான் செய்யலாம் எனக் கூறுபவர்க்கு இது பதிலாகும்.]

## 28 ப்ரதாநாதிகரணம்.

44 ஸம்வர்க்க வித்யையில் பிராணனே ஶ்ரேஷ்டமானது என்றும் வாயுவே ஶ்ரேஷ்டமானது, அதை ஸம்வர்க்கமென உபாஸிக்கவேண்டும் எனவும் வர்ணிக்கிறது. பிராணன் என்பது வாயுரூபமாக இருப்பதால், வாயுவும் பிராணனும் ஒன்று சேர்ந்தே ஸம்வர்க்கம் என உபாஸிக்கலாமே என்று தோன்றும்.

இரண்டும் ஒன்றேயானாலும், அந்தப்பெயர் வேறாக இருப்பதால் தனித்தனியாகத்தான் உபாஸிக்க வேண்டும். இந்த்ரன் என்றாலும் மஹேந்த்ரன் என்றாலும் ஒன்றேயானாலும் மஹத்வத்துடன் கூடிய இந்த்ரனுக்குத் தனியாக

---

அதில் எல்லாந்தான் வருகிறது

புரோடாஸ ஹோமம் கூறப்படுவது போல் வாயு ஸம்வர்க்கம் பிராணன் ஸம்வர்க்கம் என தனித்தனியாக உபாஸிக்கவேண்டும்.

## 29 லிங்க பூயஸ்த்வாதிகரணம்–10 ஸூத்ரங்கள்.

45–53 கற்களை அடுக்கி அதன் மீது அக்கினியை ப்ரதிஷ்டை செய்வது அக்நிசயநம் என்ற கர்மா.

முப்பத்தாறுயிரம் அக்நிகளை ப்ரதிஷ்டை செய்து வாக்கு மநஸ் முதலியவைகளைக் கொண்டு சயநம் செய்வதாக உபாஸிக்கும்படி ஒரு வித்யை கூறப்படுகிறது. ஓராண்டிற்கு 360 நாள். மனிதன் ஆயுள் 100 ஆண்டு. அதைக் கணக்கிட்டு அவ்வளவு அக்நிகளை மநம் ஆத்மாவிடம் கண்டது எனக் கூறப்படுகிறது.

இங்கு மனதால் கல்பிக்கப்படும் அக்நிகள் மனதால் கல்பிக்கப்படும் சயநத்திற்கு அங்கமா அல்லது அவை ஸ்வதந்த்ரமானவைகளா? என ஸந்தேஹம். மாநஸிக யக்ஞ ப்ரகரணமானதால் அந்த ப்ரமாணத்தை ஒட்டி, யக்ஞாங்கம் எனத் தோன்றும். ஆனல் அநேக வாக்யங்களால் இவை ஸ்வதந்த்ரம் என்ற அடையாளமிருப்பதால், ப்ரகரணத்தை விட லிங்கம் பலமான ப்ரமாணமாதலால் அக்நிகள் யக்ஞாங்கமல்ல.

மீமாம்ஸையில் "ஶ்ருதி லிங்கம் வாக்யம் ப்ரகரணம் ஸ்தாநம் ஸமாக்யா" என்பவை ஒருவிஷயத்தை நிர்ணயம் செய்வதற்கு ப்ரமாணமாகும் எனக் கூறப்படுகிறது. பின்னே வருபவை முன்னுள்ள பிரமாணத்தைவிட துர்பலமானதால் அவை ஏற்கத்தக்கதல்ல எனவும் கூறப்படுவதால் ப்ரகரணம் ப்ரமாணத்தைவிட லிங்கம் உயர்ந்த பிரமாணம். ஆதலால் அக்நி ஸ்வதந்த்ரமாகும்.

மனதால் செய்வதாக எண்ணும் கர்மாவிற்கு அக்நிகள் அங்கமாக இருக்கலாம். மற்றோரிடத்தில் இப்படி

காணப்படுகிறது மாநஸிகாக்நிகளிடையே எவ்வளவு முன்னுள்ளதோ அவ்வளவு என அதிதேசமாக இருப்பதாலும், அக்நிகள் அங்கமாக இருக்கலாமே என ஸந்தேஹிக்க,

இங்கு வித்யை உபாஸனை முக்யமானதாலும் அப்படியே அக்நிகள் பற்றிக் கூறுவதாலும் அதற்கு அங்கமாக எண்ணி உபாஸிக்கவேண்டிய அவச்யமில்லை என நிர்ணயிக்கப்படுகிறது.

## 30 ஏகாத்ம்யாதிகரணம்.

54 உடலே ஆத்மாவா? அதைத்தவிர வேறு ஆத்மா உண்டா? என ஸந்தேஹம். உடலைத் தவிர வேறு காணப்படாததால் உடலே ஆத்மா என எண்ணக் கூடாது.

ஆத்மா உடலைவிட்டுச் சென்றபின் ஆத்மாவின் செயலான அறிவு முதலியன காணப்படவில்லை. உடல் இருந்தும் ஐந்து பூதங்களது கார்யமான பார்ப்பது, கேட்பது, பேசுவது முதலியவை இறந்த உடலிலிருந்தும் காணப்படாததால் அவை உடலைவிட வேறெனக் கூறுவது போல் ஆத்மாவும் உடலைவிட வேறுதான்.

## 31 அங்காவபரத்ரதிகரணம்.

55-56 ஓம் என்ற அக்ஷரத்தை உத்கீதம் என்ற ஸாமாவாக உபாஸனை செய் எனக் கூறுகிறது. அது பஞ்சவிதம் என்றுமுளது. இதில் கூறப்பட்டிருப்பது போல் பலவேதங்களில் ஐந்தைந்து விதமாக உபாஸிக்கும்படி கூறப்படுகின்றன. ஆங்காங்குள்ளபடி உபாஸிக்க வேண்டுமா? எல்லாவற்றையும் அங்கமாக்கொண்டு ஒரே உபாஸனையாகச்செய்யவேண்டுமா என்று ஸந்தேஹம். எல்லா சாகைகளிலும் உள்ளதைச் சேர்த்து உபாஸிக்க வேண்டும். எல்லா வேதங்களிலும் கூறப்படும் பிரணவத்திற்கு எல்லாம் அங்கமே யாகும்.

இஷ்டியில் மாவை அரைக்க அம்மியை எடுக்கும்படி யஜுர்வேதத்தில் ஒரு மந்த்ரம் கூறப்படுகிறது. அன்ய வேதத்தில் வேறு மந்த்ரமிருக்கிறது. அதுவும் பிரமாணமே. அதேபோல் உத்கீதோபாஸனையில் ஸகல வேதமும் பிரமாணமேயாம்.

---

# பிரும்ம ஸூத்ர விருத்தி.

—————: o :—————

## 32 பூமஜ்யாயஸ்த்வாதிகரணம்.

57 வைஶ்வாநர வித்யோபாஸனையில் தனித்தனியாக உபாஸிக்கும்படியும் எல்லாவற்றையும் சேர்த்து உபாஸிக்கும்படியும் கூறப்பட்டிருப்பதால் எப்படி உபாஸிப்பதென ஸந்தேஹம். எல்லாவற்றையும் சேர்த்து உபாஸிப்பதே சிறந்தது எனக் கூறப்பட்டிருப்பதால் அதே சிறந்ததாகும்.

## 33 ஶப்தாதிபேதாதிகரணம்.

58 ஸகுண பிரும்மோபாஸனையில் ஶாண்டில்ய வித்யா மூக்ய ப்ராண வித்யா முதலியன காணப்படுகின்றன. அவை முன்சொன்ன நியாயப்படி ஸகுண பிரும்மத்தைப்பற்றியவைகளாதலால் அவைகள் ஒரே வித்யை தானா? என ஸந்தேஹம். அறி – உபாஸி –ஸங்கல்பம் செய் என ஶப்தபேதங்களிருப்பதால் தனித்தனி உபாஸனை தான்.

## 34 விகல்பாதிகரணம்.

59 வித்யைகள் பலபல இருப்பதால் எல்லாவற்றையும் சேர்த்து உபாஸிக்கலாமா? அவரவர் இஷ்டப்படி விகல்பமாக உபாஸிக்கலாமா? எனில், ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொருவித பலன் கூறப்பட்டிருப்பதால் அந்தந்த பலனை விரும்புவோர் அதனை உபாஸிக்க வேண்டும் என நியமமுண்டு.

## 35 காம்யாதிகரணம்.

60 சிற்சில உபாஸனைகளில் இன்னின்ன பயன் உண்டாகுமென இருப்பதால் அவைகளைத் தனித்தனியாக்

உபாஸிப்பதா? சேர்த்து உபாஸிப்பதா? எனில், தனியாக நியமம் கூறப்படாததால் அவரவர் இஷ்டப்படி சேர்த்தும் தனியாகவும் உபாஸிக்கலாம்.

## 36 யதாஶ்ரயபாவாதிகரணம்.

61–66 கர்மாங்கமான உத்கீதாதிகளில் மூன்று வேதங்களாலும் கூறப்படும் ஆஶ்ரயங்களைச் சேர்த்துக் கூறுவதா? தனித்தனியாகவா? எனில், எங்கு சேர்ந்து ஸாமம் கூறப்படுகிறதோ அங்கு சேர்ந்தே கூறவேண்டும். இப்படி உபாஸிக்க வேண்டுமெனக் கூறுவதால் அங்கங்களைச் சேர்த்து உபாஸிக்க வேண்டும். ரிக்வேத ஸாம வேதங்களில் கூறப்படும் பிரணவத்தைச் சேர்த்தே உபாஸிக்கலாம். பிரணவம் ஸர்வ வேதங்களிலும் ஸர்வ கர்மாக்களிலும் பொதுவாகக் கூறப்படுகிறது என்பது பூர்வபக்ஷம். அங்கங்களைக் கட்டாயம் சேர்த்தே உபாஸிக்க வேண்டுமென்ற நியமமில்லை.

மூன்ருவது அத்யாயம் மூன்ருவது பாதம் முற்றிற்று.

## 3-வது அத்யாயம் 4-வது பாதம் 52 ஸூத்ரம்.

### 1 புருஷார்த்தாதிகரணம்.

*1–17 ஸூத்ரம்:* மோக்ஷத்திற்கு க்ஞானமே காரணம். யாகம் முதலிய கர்மா க்ஞானத்திற்கு அங்கமல்ல, இதை மறுத்து ஜைமினி முநிவர் கூறுகிருர். க்ஞானத்தால் பாபாதிகள் அகன்று முக்தி பெறுகிருன் 'என்று வேதம் க்ஞானத்தை ஸ்தோத்திரம் செய்யக் கூறுகிறது.

ஆதலால் கர்மாங்கமே க்ஞானம். அன்றியும் க்ஞானியான ஜநகன் முதலியவர் யாக கர்மா செய்கிருர்கள். வித்யையுடன் செய்யும் கர்மா அதிக வீர்யமுள்ளதாகும். ஒருவன் இறக்கும்போது வித்யையும் கர்மாவும் அவனைப்

பின் தொடர்கிறது. வேதமோதி அர்த்தமறிந்த பின்னரே கர்மா செய்யவேண்டும். கர்மா செய்துகொண்டே நூறுண்டு ஜீவித்திருக்கவேண்டும் என வேதவாக்யங்கள் கூறுவதால் கர்மாங்கமேயாகும் க்ஞானம்.

ஸித்தாந்தம்; கர்மா செய்தவனே க்ஞானத்திற்கு அதிகாரி என எங்கும் கூறப்படவில்லை. பாபமற்ற, ஜீவனைவிட வேருன பரமனே அறியத்தக்கவன் என்றும் கர்மா அவனுக்கில்லை என்றும் கூறுகிறது. ஜநகர் கர்மா செய்தார் என்ருல் பல க்ஞானிகள் கர்மாக்களை விட்டிருந்தனர் என இருப்பதால் அது கர்மாங்கம் க்ஞானம் என்பதற்குப் பிரமாணமாகாது. வித்யையுடன் செய்யும் கர்மா வீர்யமுள்ளது என்பது உத்கீத வித்யா கர்மாவில் மாத்ரம் கூறப்பட்டது. வித்யையும் கர்மாவும் பின் தொடர்கிறது, என்பது வித்யையுள்ளவனுக்கு வித்யை கர்மிக்கு கர்மா என்றே அர்த்த முள்ளது. கர்மா செய்து கொண்டே ஜீவித்திரு என்பது க்ஞானிக்கல்ல. கர்மாவால் க்ஞான பலன் இல்லை என அறிந்தும் சிலர் பழக்கத்தால் கர்மா செய்வர். ஒன்றே எனப் பார்க்கும் க்ஞானி எதைப் பார்ப்பான்? எதைச்செய்வான்? துறவிகளுக்கு முக்யமாக வேதாந்த வித்யைக் கூறப்படுகிறது. அவர்களுக்கேது கர்மா? ஆதலால் க்ஞானம் கர்மாங்கமல்ல.

## 2 பராமர்ஶாதிகரணம்.

18–20 தர்மத்திற்கு 3 பிரிவுகள், யக்ஞம் தானம் தபஸ் எனக் கூறுமிடத்தில் ஸன்யாஸ ஆஶ்ரமமே விதிக்கப்படவில்லை. ஆதலால் யக்ஞாதிகளை விட்டு ஸன்யாஸாஶ்ரமம் வேதவிதிக்குப் புறம்பானது என்பது பூர்வ பக்ஷம். வைராக்யமுள்ளவர் இந்த க்ருஹஸ்தாஶ்ரமத்தை விட்டு ஸன்யாஸாஶ்ரமத்தை ஏற்கிருர்கள் என மற்ருரிடத்தில் கூறப்படுவதால் கிருஹஸ்தாஶ்ரமம் போல் ஸன்யாஸ ஆஶ்ரமும் சாஸ்திரங்களில் கூறப்பட்டதேயாம்.

த்ரயோ தர்மஸ்கந்தா என்றவிடத்தில் விதிவாக்யம்போல் ஏற்கத்தக்கதே ஸன்யாஸ விதியுமாகும்.

## 3 ஸ்துதிமாத்ராதிகரணம்.

21–22 உத்கீத வித்யோபாஸனையில்—ரஸங்களில் மிகச் சிறந்த ரஸமுள்ளவன் என்று கூறப்படுகிறது. இது உத்கீதோபாஸனையைத் துதிக்க வந்ததல்ல. உபாஸனையால் அதிக பலமுள்ளதாகிறது எனக் கூறுகிறது. மேலும், உத்கீதத்தை உபாஸி, ஸாமாவை உபாஸி என விதிவாக்யமும் இருப்பதால் அந்த உபாஸனைக்கு அதிக குணமுண்டு எனக் காட்டுகிறது.

## 4 பாரிப்லவாதிகரணம். 2 ஸூத்ரங்கள்.

23 யாக்ஞவல்க்யருக்கு இரு மனைவிகள் உண்டு. மைத்ரேயீ காத்யாயநீ என்பதவர்கள் பெயர். ப்ரத்ரதநன் இந்த்ரனது இடத்திற்குச் சென்றார். 3 ஜாநஸ்ருதி என்பவர் பெரும் தாநஸீலராக இருந்தார் என்பது போன்ற சில கதைகள் உபநிஷத்திலிருக்கின்றன. அஸ்வமேத யாகத்தில் புத்ராதிகளுடன் கூடிய அரசனுக்குச் சில கதைகளைக் கூறவேண்டும் என்ற விதிப்படி இவைகளும் அத்தகைய கதைகள் தானோ? அல்லது உபநிஷத் வித்யைகளை விளக்க வந்தவைகளா என் ஸந்தேஹம்.

அச்வமேத ப்ரகரணத்தில் பாரிப்லவா என்ற விஸேஷமான கதைகள் கூறப்பட்டிருப்பதால் இந்தக் கதை அவைகளில் சேராது. உபாஸனைக்கு உதவியான கதைகளேயாம்.

24 இந்தக் கதைகளினருகே உபாஸனைக்குரிய வித்யைகளிருக்கின்றன. அவைகளுடன் சேர்த்து ஒரே அர்த்தம் கூறவேண்டியிருப்பதால் கதைகள் வீண் கதைகளும் அல்ல.

---

# பிரம்ம ஸூத்ர விருத்தி.

———XXOXX———

## 5 அக்நி இந்த்ராதி அதிகரணம்.

25 அக்நீந்தந என்பது யக்ஞ யாகாதி கிருஹஸ்தாஶ்ரம தர்மத்தைக் குறிக்கிறது. மோக்ஷத்திற்கு இதன் அபேக்ஷை உண்டா எனில்? ஸ்வதந்த்ரமான க்ஞானத்திற்கு இதன் அபேக்ஷை இல்லை.

## 6 ஸர்வாபேக்ஷா அதிகரணம்.

26-27 ஆத்ம வித்யைக்கு ஸ்வாஶ்ரம தர்மங்களும் அடியோடு தேவையில்லையா? எனில் க்ஞானம் உண்டாகும்வரை எல்லாம் வேண்டியதுதான். அவைகளால்தான் வேதாந்த க்ஞானமேற்படும். இவை பஹிரங்க ஸாதநங்கள். ஶமதமாதிகள் அந்தரங்க ஸாதனங்கள். இவ்விரண்டும் சேர்ந்து வித்யையை உண்டு பண்ணுகின்றன.

## 7 ஸர்வான்னநுமிதி அதிகரணம்.

28-31 பிராணனைப் பிரும்மம் என்று உபாஸிப்பவனுக்கு எல்லா அன்னமும் உண்ணத்தக்கதே எனக்காணப்படுகிறது, வித்யைக்கு எல்லா அன்னமும் உண்பது ஒரு அங்கமல்ல. பிராணன் போகும்படியான நிலை ஏற்பட்டால் உபாஸகன் யார் வீட்டிலும் எந்த அன்னத்தையும் உண்ணலாம். ஸ்வஸ்தனாக இருப்பவன் அவைகளை புஜிக்கக் கூடாது.

உஷஸ்தி எனும் உபாஸகர் துர்பிக்ஷகாலத்தில் ஒரு ஆஹாரமும் கிடைக்காமல் யானைப் பாகன் ஒருவன் உண்ணும் கொள்ளை யாசித்துச் சாப்பிட்டார், முதலிலவன், நான், நீசன் அல்லவா? இது சாப்பிட்ட மிகுதியல்லவா?

---

இதை நீர் உண்ணலாமா ? என ஆக்ஷேபித்தான். அவர் அதற்கு "அப்பா! ஆபத்காலத்தில் உயிரைக் காக்குமளவிற்கு எதையும் சாப்பிடலாம்! என்று கூறி, கொள்ளை வாங்கி புஜித்தார். உடனே அவன், ஐயா! கொஞ்சம் நீரும் குடியும் என்றபோது, தீர்த்தம் எங்கும் கிடைக்கும். உன் தீர்த்தம் சாப்பிடக் கூடாது! வேண்டாமென்று கூறிச் சென்றார். ஆதலால் ஆபத் காலத்தில் பிராணனை ரக்ஷிக்க எல்லாவற்றையும் உண்ணலாம். இது புஜிக்கத் தக்கது, இது தகாதது என்ற ஶாஸ்த்ரத்திற்கு பாதகமானதல்ல இது. நீசமானதை புஜித்தாவது பிராணனை ரக்ஷித்து உபாஸனை செய்யவேண்டுமென்ற உபாஸனையின் பெருமையைக் காட்டவே இது கூறப்பட்டது ஆபத்காலத்தில் உபாஸகனும் மற்றவனும் பிராணன் போகும் ஸமயத்தில் மத்ஸ்யத்தைத்தவிர மற்றதை உண்ணலாமென ச்ருதியிலும் கூறப்படுகிறது. ஆதலால் இங்கு பிராணோபாஸனையின் பெருமையைக் காட்டவே எல்லாம் புஜிக்கலாமென்பது கூறப்பட்டது.

## 8 ஆஶ்ரம கர்ம அதிகரணம்.

**32–35 முக்திக்கு அவரவர் ஆஶ்ரம கர்மாவும் பாஹ்ய ஸாதநமானதால் க்ஞாநிகள் அதை அநுஷ்டிக்க வேண்டும். க்ஞாநத்தில் ஆசையில்லாதவர் கூட அநுஷ்டிக்கவேண்டுமா? என ஸந்தேஹம் வரும். உயிருள்ளவரை கர்மா செய்ய வேண்டுமென வேதவிதி இருப்பதால் அனைவரும் செய்யத்தான் வேண்டும்.**

**கர்மாசித்த ஶுத்தியை உண்டுபண்ணி க்ஞாநத்திற்கு ஸாதகமாகிறது. நித்ய கர்மா என்பதாலும் க்ஞாந ஸாதநம் என்பதாலும் யக்ஞாதிகர்மாசெய்யத்தான் வேண்டும். பிரும்மசர்யம் முதலிய நியமங்களால் காமக்ரோதாதிகளை விரைவில் ஜயிக்கலாம்.**

---

**வித்யை கற்று விநயமாக உள்ளவன்**

177

## 9 விதுராதி கரணம்.

36-39 பத்நி இல்லாதவர் விதுரர். அவருக்கு யாகம் செய்ய அதிகாரமில்லை யாகாதிகள் க்ஞாநத்திற்கு ஸஹாயமென்றதால் விதுரர்களுக்கு வேதாந்தத்தில் அதிகாரமில்லை என்று தோன்றும். அது சரியல்ல. க்ருஹஸ்தாஶ்ரமமில்லாத ரைக்வர் முதலியவர் பிரும்ம வித்யையிலீடுபட்டிருந்ததால் விதுரரும் வேதாந்த அதிகாரியாவர்.

ஒருவித ஆஶ்ரமமில்லாமல் அவதூதராக இருந்த ஸம்வர்த்தர் முதலியவரும் மஹா க்ஞாநியாயிருந்தார். அன்றியும் விதுரர் மனைவி அபேக்ஷயில்லாததான ஜபம் பூஜை உபவாஸம் முதலியவைகளைச் செய்யலாமாதலால் க்ஞாநாதிகாரமுண்டு. யாகாதிகளில்லாமலே க்ஞாந ஸித்தி உண்டெனில் கர்மா க்ஞாநஸாதகமில்லை எனக்கூறலாமே எனில் அது சரியல்ல. கர்மாவைச் செய்து புண்யவான் க்ஞாநி ஆகிறுன் என வேதம் கூறுவதால் கர்மா ஸாதநமாக வேண்டியதுதான்.

## 10 தத்பூதாதிகரணம்.

40 ஆஶ்ரமங்களில் உயர்ந்த ஸன்யாஸாஶ்ரமி க்ருஹஸ்தாஶ்ரமியானுல் அவர் செய்யும் கர்மா க்ஞாந ஸாதநமாகுமா? என ஸந்தேஹம். அவர் கர்மாவே செய்யக்கூடாது என நியமமிருப்பதால் அந்த ஸந்தேஹத்திற்கே இடமில்லை.

## 11 ஆதிகாரிக அதிகரணம்.

41-42 துறவியோ நைஷ்டிக பிரும்மசாரியோ தனது ஆஶ்ரம தர்மத்திலிருந்து நழுவினுல் அதாவது அவசீர்ணியானுல் அவனுக்குப் பிராயச்சித்தம் உண்டா எனில் அது குருஸ்த்ரீ கமநம் போன்ற மஹா பாதகமில்லை. உபபாதகமானதால் பிராயஶ்சித்தமுண்டு.

---

*பிறரைக் கஷ்டப்படுத்தாதவன் கர்வமில்லாதவன்.*

178

## 12 பஹிரதிகரணம்.

43 ஸன்யாஸி உபபாதகத்திற்குப் பிராயஶ்சித்தம் செய்து ஶ்ரவண மநநாதிகளைச் செய்தால் அது க்ஞாந ஸாதநமாகுமா? உபபாதகமோ மஹாபாதகமோ செய்த ஸன்யாஸி பிராயஶ்சித்தம் செய்துகொண்டால் அது அவருக்குப் பரலோகத்திற்குப் பயன்படும். அவரை எல்லோரும் பஹிஷ்கரிக்க வேண்டும். அவருக்கு ஶ்ரவணாதிகள் க்ஞானத்தை உண்டுபண்ணாது.

## 13 ஸ்வாம்யதிகரணம்.

44-45-46 யாகம் செய்பவர் யஜமாநன். அவருக்கு ஸஹாயம் செய்பவர் ரித்துவிக்குகள். யாகத்தில் கூறப்படும் சில உபாஸனைகள் யஜமாநனே செய்ய வேண்டுமா! ரித்விக்குகள் செய்யவேண்டுமா? என ஸந்தேஹம், முக்ய கர்த்தாவும் பலனை அனுபவிப்பவனுமான யஜமாநனே உபாஸிக்க வேண்டுமென்பர் சிலர். அது உசிதமல்ல. கர்மாவின் அங்கமானதால் மற்றவைகளைச் செய்வதுபோல் ரித்விக்குகளே உபாஸனை செய்ய வேண்டும். ச்ருதியுமங்ஙனமே கூறுகிறது.

## 14 ஸஹகார்யதிகரணம்.

47-48-49 உபநிஷத்தில் அதமுநி என்று மௌநம் கூறப்படுகிறது. இங்கு மௌநம் என்பது ஸன்யாஸ ஆச்ரமம் என்ற பொருளுள்ளதா? பேசாமலிருந்து த்யாநம் செய்வது என்ற அர்த்தமுள்ளதா? என ஸந்தேஹம். பேசாமலிருந்து மந்த்ர தேவதையை த்யாநம் செய்வதே மௌந சப்தத்தின் பொருள். யக்ஞாதிகளும் ஶமதம மௌநாதிகளும் கிருஹஸ்தரிடம் பூர்ணமாகப் பொருந்தும். மௌநம் என்பது பிரும்மசாரி கிருஹஸ்த வாநப்ரஸ்த ஸன்யாஸிகளுக்கும் பொதுவாகவே கூறப்படுகிறது.

---

*பிறரிடமன்புள்ளவன் ஆகியவரிடம் தங்குவேன்*

179

## 15 அநாவிஷ்கார அதிகரணம்.

50 பால்யஞ்ச பாண்டித்யஞ்ச நிர்வித்யாத முநி: என்றவிடத்தில் உள்ள பால்ய ஶப்தத்தால் க்ஞாநி கண்டதைப் புஜிக்கலாம் கண்டபடி திரியலாமென அர்த்தம் கொள்ளக் கூடாது. குழந்தை உள்ளம் போல் காம க்ரோதமில்லாதிருக்க வேண்டுமென்றே பொருள்.

## 16 ஐஹிக அதிகரணம்.

51 ஶ்ரவணமநநம் முதலியவைகளை அனுஷ்டிப்பவருக்கு இப்பிறவியிலேயே க்ஞாநம் உண்டாகுமா? மறு பிறவியிலுண்டாகுமா?

க்ஞாநத்திற்கு விரோதமான பலனைத் தரும் கர்மா இருந்தால் இப்போது க்ஞாநம் உண்டாகாது. அத்தகைய கர்மா இல்லையேல் இப்பிறவியிலேயே க்ஞாநமுண்டாகும்.

## 17 முக்திபல அநியம அதிகரணம்.

52 க்ஞாநம் வந்தபின் பிரும்மாநந்த ஸ்வரூப அனுபவ ரூபமான முக்தி உடனே உண்டாகுமா? அல்லது முன் கூறியபடி பிரதிபந்தகமில்லாவிடில் இப்போது வரலாம். பிரதிபந்தகமிருந்தால் மறுபிறவியில் உண்டாகுமா? எனில். க்ஞாநமுண்டான க்ஷணத்திலேயே முக்தி ஸித்திக்கும். அதற்காகக் காக்கவேண்டியதில்லை,

மூன்றுமத்யாயம் முற்றிற்று.

# 4-வது அத்யாயம். 1-ம் பாதம். 19-ஸூத்ரம்.

## 1 ஆவிருத்தி அதிகரணம்.

1—2 ஶ்ரவண மநநம் முதலியவைகளை ஒருமுறை செய்தால் க்ஞாநம் உண்டாகாதா? எனில், பிரும்ம ஸ்வரூபம் மிக ஸூக்ஷ்மமானதால்—கேளு நினை அநுஸந்தானம் செய் என அடிக்கடிக் கூறுவதால் – அடிக்கடி செய்ய

---

நீண்டநேரம் (பகல்) ஸ்நாநம் செய்பவன்

வேண்டியதுதான். அங்ஙனமே பல ஸூசகங்கள் காணப் படுவதால் பலமுறை ஆவிருத்தி செய்யவேண்டியதுதான்.

## 2 ஆத்மத்வ உபாஸநாதி கரணம்.

3 உபாஸனு காலத்தில் நான் பிரும்மத்தை உபாஸிக்கிறேன் என்று எண்ணக்கூடாது. நானே பரமாத்மா! அவரே நான்! என பேதமின்றி உபாஸிக்கவேண்டும்.

## 3 ப்ரதீகாதிகரணம்.

4 நான் பிரும்மம் என்பது அஹங்காரோஹாபாஸனை. மநஸ் பிரும்மா என்ற உபாஸனை பிரதீகோபாஸனை. இதில் நான் மநஸ் என்று தியாநம் செய்யவேண்டியதில்லை.

## 6 ஆஸிநாதிகரணம்.

7-8-9-10 சில ஜபம் ஹோமம் முதலிய கர்மாக்கள் உட்கார்ந்துகொண்டே செய்யவேண்டுமென்பது போல் உபாஸனையையும் உட்கார்ந்துகொண்டே செய்யவேண்டுமா? அல்லது நின்றுகொண்டோ நடந்துகொண்டோ செய்யலாமா? என ஸந்தேஹத்தில், நடக்கும்போதும், நிற்கும்போதும் மநம்ஏகாக்ரப்படாது. ஆதலால் அமர்ந்தே த்யாநாதிகளைச் செய்ய வேண்டும். அசையாமலிருக்கும் கொக்கை த்யாநம் செய்கிறது போலிருக்கிறது என்ற சொல் த்யாநம் செய்பவர் அசையாமல் செய்யவேண்டுமென்பதைக் காட்டுகிறது. இந்த வகையான ஆஸநத்தில் உட்கார்ந்தே த்யாநம் செய்ய வேண்டுமென ஸ்மிருதி கூறுகிறது.

## 7 ஏகாக்ரதாதி கரணம்.

11 பூஜை ஜபம் முதலியன இன்ன திக்கில் அமர்ந்து செய்யவேண்டும் என்பதுபோல் த்யாநத்திற்கு

---

திக்கு நியமமில்லை. எந்த இடத்தில் எந்த திக்கில் உட்கார்ந்தால் மநம் ஒருமைப்படுமோ அங்கு அமர்ந்து செய்யலாம்.

## 8 ஆப்ராயண அதிகரணம்.

*12* நானே ப்ரும்மம் என்று ஒருமுறை உபாஸித்தால் போதாது. உடலை விடும்வரை ஸதா உபாஸிக்க வேண்டும்.

## 9 தததிகம அதிகரணம்

*13* ஸஞ்சிதம் ப்ராரப்தம் ஆகாமி என்ற மூன்று வகையான கர்மாக்கள் உண்டு. அநுபவித்தாலொழிய கர்மா அழியாது என சாஸ்த்ரம். ஆனால் ப்ரும்ம ஸ்வரூபத்தை நன்கு உணர்ந்து அநுபவிப்பவருக்கு இந்த கர்மாக்கள் உடனே அழிந்துவிடும். பலனைத் தராது.

## 10 இதர அஸம்ஶ்லேஷ அதிகரணம்

*14* பாபம் க்ஞாநியை விட்டகலுவதுபோல் புண்ய கர்மாவும் பலனைத் தாரமல் அழிந்துவிடும். பந்தகாரணமான புண்ய பாபமழிந்தபின் முக்தனாகிறான்.

## 11 அநாரப்தாதிகரணம்.

*15* ஸஞ்சிதம் ஆகாமி என்ற கர்மாக்கள் க்ஞாநம் வந்தவுடன் அழிகின்றன. ஆனால் எந்த புண்ய பாப கர்மா இவ்வுடலில் பலனைத்தர ஆரம்பித்து விட்டனவோ அவைமாத்ரம் அழிவதில்லை. வில்லிலிருந்து ஶரத்தை விட்டுவிட்டால் அது வேகமுள்ளவரை போய்தான் ஓயும்.

## 12 அக்நிஹோத்ர அதிகரணம்.

*16–17* நித்ய நைமித்திக அக்நிஹோத்ரமும் மற்ற கர்மாபோல் க்ஞாநத்தால் அழிந்துவிடுமா? எனில் "யக்ஞேந தாநேந தபஸா" என்று க்ஞாந ஸாதநமாகக் கூறப்படும் அக்நிஹோத்ர கர்மா அழியாது. அக்நி

---

புஷ்பத்தை முகராதவன்.

ஷேறாத்ரம்போல் சில புண்ய பாப கர்மாக்களும் அழியாம லிருக்கின்றன. க்ஞாநியின் பொருளைப் புத்ராதிகளும் புண்யத்தை நண்பர்களும். பாபத்தை விரோதிகளும் அடைகிறார்கள்.

## 13 வித்யா க்ஞாந ஸாதந அதிகரணம்.

18 நித்ய கர்மாக்களை உபாஸனையுடன் சேர்ந்தே அனுஷ்டிக்க வேண்டும் என்ற நியமமில்லை. உபாஸனை யுடன் செய்தால் கர்மா வீர்யமுள்ளதாக ஆகும். உபா ஸனை இல்லாமல் செய்தாலும் க்ஞாந ஸாதநமாகும்.

## 14 இதர க்ஷபண அதிகரணம்.

19 க்ஞாநி பிராரப்தக்ஷயமான பின்பும் ஸம்ஸாரி யாக இருக்கமாட்டான். பிராரப்தத்தை அனுபவிக்கும் உடல் அகன்றபின் அந்த ஜீவன் பிரும்மத்துடன் லயமாகி விடும்.

*4-வது அத்யாயம் முதல் பாதம் முற்றிற்று.*

## 4-வது அத்யாயம் 2-ம் பாதம் 21-ஸூத்ரம்.

### 1 வாகாதி கரணம்.

1–2 ஒருவனிறக்கும்போது, வாக்கு-மநதிலும், மநது -பிராணனிடமும்; அது தேஜஸ்ஸிலும் லயமாகிறதெனக் கூறப்படுகிறது. இங்கு வாக் என்று இருப்பதால் அதே மநதில் லயமாகும் என நினைக்கலாம். வாக் எங்கிருந்து உண்டானதோ அந்த தேஜஸ்ஸில்தான் லயமாகும். ஆனலிதற்கு வாக்கின் விருத்தி அதாவது பேச்சே மநதில் லயம் என்று பொருள். அதேபோல் கண் காது முதலிய இந்திரியங்களின் வியாபாரம் மாத்ரம் மநதில் லயமா கின்றன. அவை, தான் தோன்றிய வஸ்துவில்தான் லய மாகும்.

---

பரஸ்த்ரீயைப் பாராதவன்

# பிரும்ம ஸூத்ர விருத்தி.

## 2 மனோதி கரணம்.

3 மநஸ் பிராணனிடம் லயமாகின்றது என்றவிடத்திலும் மனோவிருத்திகள்தான் லயமாகின்றன. மநம் லயமாவதில்லை. மூர்ச்சையிலும் மரண ஸமயத்திலும் மநம் இருக்கின்றது, ஆனால் அதன் விருத்திமாத்ரமில்லை.

## 3 அத்யக்ஷ அதிகரணம்.

4–5–6 இறக்கும்போது பிராணன் தேஜஸ்ஸில் லயமாகிறது என்று கூறப்படுகிறது. இங்கு தேஜஸ் என்பதற்கு ஜீவன் என்றே பொருள் கொள்ளவேண்டும். பின்னர் ஜீவனுடன் பிராணனும் பின்தொடர்கிறது எனக் கூறப்படுவதால், ஜீவனிடமே லயம். அன்றியும் மறு பிறவிக்கு வேண்டிய பஞ்சபூத அணுக்களுடன் பிராணனும் சேருவதே நியாயம். ஜீவன் கிளம்பும்போது தேஜஸ்ஸோடு மாத்ரமல்ல. மற்ற பஞ்சபூத மாத்ரைகளிலும் சேருகிறது.

## 4 ஆம்ருத்யுபக்ரம அதிகரணம்.

7 பிராணன் ஜீவன் முதலியவைகள் கர்ம மார்க்கத்திலுள்ளவர்களுக்குத்தான் இறக்கும்போது கிளம்பும். உபாஸகன் மோக்ஷமடைகிறான். ஆதலால் அவனது பிராணாதிகள் கிளம்புமா என்னில் ஜீவன் முக்தனது பிராணாதிகள் கிளம்பாது. உபாஸகன் அர்ச்சிராதி மார்க்கமாக பிரும்மலோகம் சென்று பிரும்மாவுடன் முக்திபெறுமாதலால் உபாஸகனது பிராணாதிகளுமான காலத்தில் கிளம்பும். அர்ச்சிராதி வழிவரை ஸமமாகவே இருவர் பிராணனும் ஸமமாகக் கிளம்பும்.

---

## 5 ஸம்ஸாரவ்யபதேஶ அதிகரணம்

*8–11* பிராணாதிகளுடன் கிளம்பும் ஜீவன் பரமனிடம் லயமாகிறதெனக் கூறப்படுகிறது. இந்த லயம் திரும்பிவராத ஆத்யந்திக லயமா? அல்லது தாத்காலிக லயமா? என ஸந்தேஹம். பின் வரும் வாக்யங்களில் உடலெடுத்தற்காக வேறு பிறவி காரணத்தை அடைகிறான் எனக் காணப்படுவதால் அத்யந்த லயமல்ல. இவை பரமாணுபோல் ஸூக்ஷ்மமான நாடி வழியாகச் செல்வதால் கிளம்பும் ஜீவனை எவரும் பார்க்க முடியாது. ஸ்தூலமான உடலைத் தீயிலிட்டால் ஸூக்ஷ்மமான ஜீவனுக்குக் கஷ்டமில்லை. ஸ்தூல தேஹத்தில் காணப்படும் உஷ்ணம் ஜீவனால் ஏற்பட்டதாகும். ஜீவன் சென்ற பின் உடல் சிதளமாகும்.

## 6 ப்ரதிஷேத அதிகரணம்.

*12–13–14* யாதொரு காமனையுமில்லாத முக்தன் உடலை விடும்போது அவனது பிராணனும் மற்றவர்களைப் போல் வெளியே கிளம்பும் என்ற கொள்கையை ஆக்ஷேபித்து ஸ்பஷ்டமாக அவனது பிராணன் கிளம்புவதில்லை என ச்ருதி கூறுவதாலும் பல ஸ்ம்ருதிகள் சொல்வதாலும் முக்தனது ஜீவனோ பிராணனோ வெளியில் கிளம்புவதில்லை.

## 7 கலா ப்ரளய அதிகரணம்.

*15* வாக்கு முதலியவை தனது காரணவஸ்துவில் லயமாகின்றன என்றோம். ஜீவன் முக்தனது வாக் முதலியன பரபிரும்மத்தினிடமே லயமாகின்றன.

## 8 அவிபாக அதிகரணம்.

*16* ஸாதாரணமாக லாகாதிகலைகள் தன் காரணவஸ்துவில் லயமாகும். அந்த ஜீவன் எழும்பொழுது

---

ஹோமம் செய்வது என்பன

தூக்கத்தில் மநதில் லயமாகி எழுந்திருப்பதுபோல் எழுந்திருக்குமா? அத்யந்தம் ஸ்வரூபமே இல்லாமல் லயமாகிறதா? எனில், ஸகல காரணமான பிரும்மஸ்வரூபத்தில் லயமாவதால் ஜீவனே மறுபடி எழுந்திருக்காததால் இவை அத்யந்த லயமே தவிர தாத்காலிக லயமாவதில்லை.

## 9 ததோகோ அதிகரணம்.

*17* வித்யோபாஸகனது ஜீவன் (பிரும்ம லோகம் செல்ல) கண் காது மூக்கு முதலிய வழிகளால் வெளிக்கிளம்புவதில்லை. ஹ்ருதயத்திலுள்ள ஆத்ம ஸ்வரூபத்துடன் கலந்து தலையிலுள்ள ஸுஷும்நா நாடி வழியாகவே கிளம்புகிறான்.

## 10 ரச்மி அதிகரணம்.

*18–19* பிரும்மாந்த்ரத்தின் வழியாகக் கிளம்பும் உபாஸகனது ஜீவன் ஸௌர்யரச்மி வழியாகப் பிரும்ம லோகம் செல்கிறது. இரவில் ஸௌர்ய ரச்மி இல்லாததால் பகலில் உடலைவிடும் உபாஸகனது ஜீவனே ரச்மி வழியாகப் போகிறது. இரவில் போகும் ஜீவன் அப்படியல்ல எனில், அப்படிக் கூறுவதற்கில்லை. ஸுஷும்நா நாடிக்கும் ஸௌர்ய ரச்மிக்கும் எப்பொழுதும் நிரந்தர ஸம்மந்தமிருக்கிறது. இரவில் நம் கண்களுக்குத் தெரியாவிடினும் ரச்மி நம்முடன் ஸம்மந்தப்பட்டுளது.

## 11 தக்ஷிணாயந அதிகரணம்.

*20–21* எப்போதும் ரச்மி ஸம்மந்தமிருப்பதால்தான் தக்ஷிணாயநத்தில், இறந்த உபாஸகனது ஜீவன் தூமாதி மார்க்கமாகச் செல்லாமல், அர்ச்சிராதி மார்க்கமாகச் செல்கிறது. உத்தராயணமே சிலாக்ய மென்பது. உபாஸகனல்லாதவர் பற்றிக் கூறியதாகும். பீஷ்மர் ரணத்தில் அடிபட்டிருந்தும் உடலை விட்டுச் செல்ல உத்தராயண காலத்தை எதிர்பார்த்திருந்தது, தந்தையளித்த்

---

ஐந்துவகை யாக பரிஹார முண்டு

"உனது இஷ்டமானபோது உடலை விடலாம்" என்ற வரத்தைக் காட்டுவதற்காகவேயாம். எந்தக் கர்மாவிற்கும் பலனை வேண்டாமல் பிரும்மார்ப்பணம் என்று கர்மா செய்பவர் யோகி. அவர்களும்கூட தக்ஷிணாயநத்தில் இறந்தாலும். இரவில் இறந்தாலும் ரஶ்மி வழியாக பிரும்ம லோகம் செல்வர்.

இரண்டாம் பாதம் முற்றிற்று.

## 4-வது அத்யாயம். 3-ம் பாதம். 16-ஸூத்ரம்.

### 1 அர்ச்சிராதி அதிகரணம்.

1 ஸகுண உபாஸனை செய்பவரனைவரும் அர்ச்சிராதி மார்க்கமாகத்தான் பிரும்மலோகம் செல்வர். சில உபாஸனைகளில் அக்நிலோகம் வாயுலோகம் முதலியன கூறப்பட்டாலும் அர்ச்சிராதி மார்க்கமாகவே அங்கெல்லாம் சென்று முடிவில் பிரும்மலோகம் செல்வர்.

### 2 வாய்வதிகரணம்.

2 அர்ச்சிராதி வழியாக பிரும்மலோகம் செல்கின்றது ஜீவன். போகும் வழியில் ஒரு உபநிஷத்தில் ஒருவகையாகவும், மற்றொன்றில் வேறு வகையாகவும் கூறப்படினும் ஸூர்ய ரஶ்மி வழியாக மாஸதேவதை அங்கிருந்து வருஷம். அங்கிருந்து தேவலோகம் வாயு ஆதித்யன் சந்த்ரன் வித்யுத் வருணன் இந்தப்பிரஜாபதி என்ற வழியாகவே பிரும்மலோகம் செல்கிறது.

### 3 தடித் அதிகரணம்.

3 தடித் எனும் மின்னல் ஜல ஸம்மந்தமுள்ளது ஆதலால் வித்யுத் என்பதால் வருண லோகம் கூறப்படுகிறது.

---

187

## 4 ஆதிவாஹித திகரணம்.

4-5-6 அர்ச்சிராதி மார்க்கத்தில் கூறப்பட்ட இடங்கள் ஜீவன் தங்கி இன்பமனுபவிக்கும் இடமில்லை. அந்தந்தப் பெயருள்ள இந்த ஜீவனைச் சுமந்து செல்கின்றனர். ஜீவனுக்கு அச்சமயம் மநம் லயமாகி இருப்பதால் இன்பமனுபவிக்க முடியாது.

பிரும்மலோகம் செல்லும் ஜீவனும் அதை அழைத்துச் செல்லும் அர்ச்சிராதிகளும் சைதன்ய க்ஞாநம் இல்லாமலிருப்பதால் சைதன்யமுள்ள அந்தந்த அதிஷ்டான தேவதைகளை அழைத்துச் செல்கின்றனர் என்பதே பொருந்தும். வருணாதி தேவதைகள் முக்யமானவரல்ல. ஒரு அமாநுஷரான தேவர் அழைத்துச் செல்கிறார் என்பது ஸித்தம்.

## 5 கார்யாதி கரணம்.

7-14 பிரும்மலோகம் என்பதில் பரப்ரும்மத்தால் லோக ஸிருஷ்டிக்காகப் படைக்கப்பட்ட ஸத்ய லோகம் என்றுதான் பொருள். பிரும்மலோகங்களை அடைகிறான் என்று பஹுவசநம் காணப்படுவதால் கார்ய ப்ரும்ம லோகமே செல்லுமிடம். பரபிரும்மத்தின் பெயரே பிரும்மாவிற்கும் லக்ஷணையாகக் கூறப்படுகிறது. அங்கு செல்லும் ஜீவனும் பிரும்மாவின் அதிகார பதவி முடிந்து பரப்ரும்மத்துடன் லயமாகும்போது உபாஸக ஜீவர்களும் முக்திபெறுகின்றனர். அங்ஙனமே ஸ்மிருதி வாக்யங்களுமிருக்கின்றன.

## 6 அப்ரதீகாலம்பந அதிகரணம்.

15-16 உபாஸகர் இருவகை. ஒரு சாரார் பிரும்மத்தையே அடைய விரும்புவர். சிலர் ப்ரதீகோபாஸகர். அதாவது நாமாவே பிரும்ம, வாக்கே பிரும்ம என

உபாஸிப்பவர். இருவர்களையும் ஆதிவாஹிகர் பிரும்ம லோகம் அழைத்துச் செல்வதில்லை. ப்ரதீகோபாஸகர் இஷ்டப்படி ஸஞ்சரித்து முடிவில் பிரம்மோபாஸநத்தில் ஈடுபட்டு பிரும்மலோகம் செல்வர்.

மூன்றும் பாதம் முற்றிற்று.

## 4-வது அத்யாயம். 4-ம் பாதம். 22-ஸூத்ரம்.

### 1 ஸம்பத்யாவிர்பாவ அதிகரணம்.

*1–2–3* இந்த உடலிலிருந்து கிளம்பி பரம் ஜோதிஸ்ஸை அடைந்து தன் ரூபத்துடன் சேருகிறுன் என்று முக்தனைப்பற்றிக் கூறப்படுகிறது. இங்கு ஸ்வர்க்காதி ஸுகத்தைப் புண்யசீலர் அனுபவிப்பதுபோல் முக்தன் ஏதேனும் ஒரு விசேஷ போகமனுபவிப்பவனுக மாறுகிறுனு? இல்லை. ஆத்மாவாகவே மாறுகிறுன். கீழ்க்கூறிய ஸம்பத்யதே என்பதற்குமேல் "ஸகல ஸுக துக்கங்களையும் விட்டு ஸ்வஸ்வரூபமாகிறுன்" என வர்ணிக்கப்படுகிறது. ஜ்யோதி என்று கூறப்படுவது ஆத்மாவேயாம்.

### 2 அவிபாகேந த்ருஷ்டத்வாதிகரணம்.

*4* ஜீவன் பிரும்மத்துடன் ஒன்றுகச் சேர்ந்து முக்தி பெறும்போது பிரும்மமாகவே ஆகிவிடுகிறுன். சிறிது கூட பேதமில்லை.

### 3 ப்ராம்மாதிகரணம்.

*5–6–7* ஜீவன்முக்தி நிலையில் பிரும்ம ஸ்வரூபியாகி விட்டதால் பிரும்மத்தைப்போல ஸத்யஸங்கல்பன் ஸர்வக்ஞன் முதலிய குணமுள்ளவனுவான் என ஜைமினி முனிவர் கூறுகிறுர். சுத்த சைதன்யமாகி விடுவதால்

---

நித்யம் ஸூர்ய நமஸ்காரம் பஞ்சாக்ஷரி அஷ்டாக்ஷரீ ஜபம்

ஸர்வக்ஞன் முதலிய சொற்கள் முக்தனிடம் அர்த்தம் இல்லாதவைகள் என ஔடுலோமி என்பவர் கூறுகிறார். ஸர்வக்ஞன் ஸத்ய ஸங்கல்பன் என்றவை அவித்யை வ்யவஹாரம் முக்தனிடம் இது அவித்வான்கள் கூறுவது. வித்வான்களோ சுத்த சைதன்ய மென்பர். ஆதலால் தோஷமில்லை.

## 4 ஸங்கல்பாதிகரணம்.

8–9 தஹரவித்யையில் முக்தன் பித்ருலோகம் வேண்டுமென விரும்பினால் அவனது ஸங்கல்பத்தினாலேயே பித்ருக்கள் வந்துவிடுகின்றனர். இங்கு ஸங்கல்பத்தினால் மாத்ரம் பித்ருலோகம் தோன்றுகிறதே தவிர அதற்காக வேறு ஸாதனங்களில்லை. அதனால்தான் முக்தனுக்கு வேறு அதிபதி கிடையாது.

## 5 அபாவாதிகரணம்.

10–15 முக்திபெற்ற உபாஸகன் ஸங்கல்பத்தினாலேயே ஸகலலோகங்களையும் படைத்து அனுபவிக்கிறான் என்றோம். அச்சமயம் அனுபவிப்பதற்கு ஸாதனமான இந்திரியங்கள் வேண்டுமே எனில் பாதரி ஆசார்யர் அவை அவச்யமில்லை, மநதினால்தான் அனுபவம் என்கிறார்.

மநஸ்போல் சரீரமும் இந்திரியங்களுங்கூட இருக்கலாமென ஜைமினி கூறுகிறார். அது சரியல்ல. ஸங்கல்பத்தால் உண்டானவை உடனே இல்லாமல்போகலாம். மநஸ் மாத்ரம் இருந்து ஸ்வப்நகாலத்தில் ஸுகாதிகளை அனுபவிப்பதுபோல் முக்தனுக்கு மநதினாலேயே அனுபவம்

ஏற்படும். சரீரமுள்ளபோது ஏற்படுவதுபோல் மநதாலும் அது ஏற்படும்.

### 6 ப்ரதீபாதிகரணம்.

*16-17* முக்தன் ஸங்கல்பத்தாலுண்டாகும் போக ஸாதநமான உடல் மரத்தால் செய்யப்பட்ட பொம்மை போன்றதன்று. தீபம் அநேக திரிகளிலிருந்து பிரகாசிப்பதுபோல் ஸங்கல்ப ஆத்மா ஸங்கல்ப சரீரமனைத்திலும் புகுந்து அநுபவிக்கிறது. நிர்விகல்பக ஸமாதி அல்லது விதேஹ முக்தருக்கு இதெல்லாமில்லை.

### 7 ஜகத் வ்யாராதி கரணம்.

*18-19-20* முக்திபெற்றவனுக்கு ஸர்வேஶ்வரனைப் போல் ஸகல ஐச்வர்யமுமுண்டு என்றாலும் உலகைப் படைப்பதுபோன்ற வியாபாரத்தில் இதற்கு அதிகாரமில்லை. இதைத்தவிர மற்ற ஐஶ்வர்யங்களுண்டு. ஸகுணத்தில்தான் இந்த வியவஹாரம் நிர்குண சுத்தாத்மாவிடமாக ஐக்யமானவர் பற்றிப் பேசவில்லை. அர்ச்சிராதி மார்க்கமாகப் பிரும்மலோகம் சென்ற கிர்மமுக்தி பெற்ற ஜீவன் மறுபடி பூமிக்குத் திரும்பிவருவதில்லை.

**நான்காம் பாதம் நான்காம் அத்யாயம் முற்றிற்று.**

இதைப் பலர் நன்கு ருசியுடன் அநுபவிக்காவிட்டாலும், ஸ்ரீ ஸதாசிவ ப்ரும்மேந்தரரிடமுள்ள பக்தியால் எனக்குச் சிந்தனுரூபமாகும் என்றே இதை வெளியிட்டேன்.

சிவமஸ்து.

---

நித்யம் விஷ்ணு ஸஹஸ்ரநாம ஜபம் செய்க